உ

சிவமயம்.

கணபதிதுணை.

# திருநாகைக்காரோணப்புராணம்.

திரிசிரபுரம் - மஹாவித்துவான்
ம -ா - ா - ஸ்ரீ,
**மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்**
இயற்றியது.

இஃது,
இயற்றுவித்த
நாகபட்டினம் - தொண்டைமண்டலம்
பொன்னேரிவிற்பெற்ற நாட்டியர் துளுவவேளாளர்
குலதிலகரும், செல்வராயகோத்திரோத்தமருமாகிய, பழவேற்
காடு-ம-ா-ா-ஸ்ரீ, இராமசாமிமுதலியாரவர்கள் குமாரர்
ம-ா-ா-ஸ்ரீ, அப்பாத்துரைமுதலியா ரவர்கள்,
யாவருக்கு முபயோகமாகும் பொருட்டு,
அச்சிற்பதிப்பிக்கக்
கேட்டுக் கொண்டபடி,
இந்நூல் செய்தவர் மாணாக்கருளொருவராகிய
சென்னைக் கவரன்மெண்டு நார்மல் பாடசாலைத்
தமிழ்ப்புலவர்
திரிசிரபுரம் - சோடசாவதானம்
**சுப்பராயசெட்டியாரால்**
பார்வையிடப்பட்டு,

சென்னை
ஏஷியாடிக், அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

சுக்கிலஹு ஆவணிமீ





சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

சிவராசதானிக் கேத்திரமாகிய திருநாகைக்காயாரோகணந் தேவதீர்த்த
முத்திமண்டபவாசிகளாகிய திருக்கூட்டத்தின் றலைமைநடாத்திவருகிற

## வீரப்பசெட்டியாரியற்றிய

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பூமேவுதிருநாகைக்காயாரோகணப்பெருமான்புராணஞ்சொற்றான்
றேமேவுவீரசைவசிகாமணியப்பாத்துரைமால்சிறப்பிற்கேட்கக்
காமேவுசிராமலைவாழ்சைவசிகாமணிஞானகலைமுற்றோர்ந்து
மாமேவுதுணிபமைந்தமீனாட்சிசுந்தரநாவலவரேறே.

கும்பகோணம் - புரோவின்சியால் கல்லீஜ் தமிழ்ப்புலவர்

## தியாகராசசெட்டியாரியற்றிய

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொன்பூத்தசெஞ்சடிலப்புராணனருள்பெருகியன் பின்பொலிவிற்கேற்ப
மின்பூத்தபசுக்களிடைவிராயின்பந்தகவிலைத்தல்விழையப்பொன்னிக் [து
கொன்பூத்தபுனல்பெருகிப்பண்ணையின்மேடவற்கேற்பக்குலாவிப்பாய்ந
தென்பூத்தபோகவளந்தகச்சுரக்குமெழில்சிறந்தசென்னிநாட்டில. (க)

வேண்டியவேண்டியவாறுமெய்யடியார்க்கினிதளித்தல் விளக்குவான்மிக்
கீண்டியபேரருட்பெருமான்வன்றொண்டர்வேண்டியாங் கெய்தமுன்னம்
பாண்டியனுக்களித்தபரிபோலாதபரியோடேண்பணிமுனல்குஞ்
சேண்டியங்குபெரும்புகழ்சேர்திருநாகைக்காரோணச்செழுந்தலத்தின்.

மன்னுமான்மியமனைத்தும்பல்லோருமுணர்ந்தரற்குவழிபாடாற்றி
யுன்னுமிருமைப்பயனுநுகர்ந்துலவாப்பேரின்புமுறுவானெண்ணிப்
பன்னுவடமொழிநின்றுபயிறோறும்பயிறோறும்பசுந்தேன்பில்கித்
தன்னுறழ்செந்தமிழிற்பன்னயஞ்செறியமொழிபெயர்த்துத்தருகவென்று

ஓங்குமறிவானமைந்தோரமர்தொண்டைமண்டலத்திலுலப்புறாது
தீங்குதவிர்ந்திலகுநிறைகல்வியொடுபெருஞ்செல்வஞ்சிறக்கநல்கும்
வாங்குசிலைபுரையுநுதன்மடவார்சேர்ந்தொருங்குறையும்வனசமாகித்
தேங்குறுசீர்தாங்கியொளிர்பொன்னேரிவிற்பெற்றதிருநாடாள்வோன்.

வுள்ளநிறையமிர்துண்டுவளருமடக்கிள்ளைகட்குமாறுக்காத
னுள்ளநிறைதருமகிழ்நர்சீர்பயிற்றுமடமாதருவர்ப்புறுத
தெள்ளமிர்தமொழிகற்பக்கிளிபயின்றோதக்கேட்டுத்தேவர்நாணங்
கொள்ளவுயர்மாடமலிபழவேற்காடென்னுநகர்குடிகொள்சீலன். (ரு)

புலவர்புகழ்தரவிளங்குதுளுவவேளாளர்குலாம்புதியிலென்று
நிலவுசெல்வராயகோத்திரம்விளங்கவறுமையிருணிலைகெட்டோட
வுலவுபுகழ்க்கதிர்பரப்பியுதிக்குமுழுமதியாகியுதயஞ்செய்தோன்
கலவுறுசீரிராமசாமிக்குரிசிறவப்பெருமைகாட்டிவாழ்வோன். (சு)

வண்டடருந்தண்டுளவமாலாலுமயனாலுமறையினாலுங்
கண்டறியாப்பரசிவனைக்கரமலர்ப்பீடத்தென்றுங்கவினயேற்றி
விண்டமலர்கொண்டன்பினருச்சிக்கும்பெரும்பேறுமேவியனோன்
றொண்டரெதிர்ப்படினனையபரசிவனேயெனவுன்னுந்தூய்மைமிககோன்.

புண்ணியவெண்ணீறுமிளிர்கண்டிகையுமைந்தெழுத்தும்பொருளாக்கொண்டோன்,நண்ணியநற்குணங்கள்பலவற்றினுக்குநதாயாகித்தகவளர்ப்போன்,கண்ணியநூலனைத்துமுணர்ந்துயர்ந்தகவிவாணருக்கோர்கற்பகம்போ, னண்ணியமேலோனப்பாத்துரைநாமமகிபாலனைவிலக்கேட்டு.()

என்னவதிசயநம்பாலிருந்தபெரும்புண்ணியமென்றிதுவுமெம்மான்
றன்னனையவருளாயிற்றடையெவனோவெனவுவகைசார்ந்துநின்று
சொன்னயமும்பொருணயமுந்துலங்குறுபல்லணிநயமுந்தூயபத்தி
நன்னயமுமினிதார்ந்துநனிவிளங்கப்புனைவித்துநல்கினனால். (௯)

அனையபெரியோன்யாவனெனிற்புகல்வாஞ்சிராப்பள்ளியமர்ந்துவாழ்வோன், கலைகடல்சூழுலகிற்றன்பெயர்நிறுவினோனெல்லாக்கலையுமோர்ந்து, தனையனையனாயடைந்தோர்சரணாகியொளிர்புனிதன்றக்கோர்போற்றி வனைபுகழ்ப்பூம்படாம்புனைந்தமீனாட்சிசுந்தரநாவலவரேறே. (௧௦)

---

மாயூரம் - நமச்சிவாயபிள்ளை குமாரர்

## முத்துச்சாமிபிள்ளை யியற்றிய

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

எண்டிசையும்விண்டலமுமேத்துதொண்டைமண்டலத்தினியல்புவாய்ந்த
மண்டிசையிலுறும்பெரியபொன்னேரிவிற்பெற்றுமன்னுநாட்டுள் [க்
வண்டிசைகளியற்றுபொழில்சூழ்பழவேற்காடெனும்வண்ணகரின்மேலா
கொண்டிசைக்கும்படிச்செல்வராயகோத்திரத்துநனிகுலவிவாழ்வான்.

நலம்பரவுமுயர்துளுவவேளாளர்குலதிலகனயத்தாலோங்குங்
கலம்பரவும்வீரசைவாதிபனடக்கமுறவாய்ந்துகற்றோர்மாட்டுப்
புலம்பரவுநயவிநயன்மாதேவன்சரிதமொழிபொருளாக்கொண்டு
வலம்பரவுநாகைவளரிராமசாமிக்குரிசில்வரத்தால்வந்தோன். (௨)

ஓங்குபுகழதிகாரமிரக்கநயவசனத்தோடீகைமேலாய்த் [ர்த்
தேங்குபுகழ்ச்சிவபெருமான்றிருவடிக்கன்பேசெலுத்துஞ்சிந்தைசார்ந்தா
தாங்குபுகழ்விரும்புமணமிவையெலாம்பொருந்திவளர்தாருப்போல்வான்
வீங்குபுகழ்தாங்குபுயமாலப்பாத்துரைவள்ளல்விருப்பினோர்ந்து. (௩)

சொத்துமலர்ப்பொழிற்றிருவாவடுதுறையம்பலவாணகுரவன்பாலே
முத்தர்களும்புகழ்ந்தேத்துமுவகைத்தீக்கையுமுறையேமுற்றப்பெற்றுத்
தத்துவமெய்ஞ்ஞானகலைமுதலாயபல்கலையிற்றழைந்துமேலு
மெத்தலமுமதிக்கவரும்புகழோங்குநாவலர்களினிதாப்போற்றும். (௪)

பொன்னாட்டிற்சுவைமிகுநல்லமுதினுமின்கவிமாரிபொழியுமேகங்
கன்னாட்டும்புயத்தரசர்முடிதுளக்கப்பேசுகவிவாணனாய
தென்னாட்டிற்சிரகிரிவாழ்மீனாட்சிசுந்தரப்பேர்த்திறல்வல்லோனைப்
பன்னாட்டும்பரவுதிருநாகைக்காரோணச்சீர்பகரச்செய்து. (௫)

கல்மலியுங்கடனுகைக்காயாரோகணப்பெருமான்காதைநாளு
நலமலியுஞ்சந்நிதியிலியாவர்களுநனிமகிழ்நதுநயக்கமேவிப்
புலமலியுங்காப்பியத்தையரங்கேற்றுவித்திருஞ்சீர்பொலியக்கொண்டு
நிலமலியுமகலிடத்துப்பரவுதலோர்ந்தச்சிடுதனிலைமைதேர்ந்து. (சு)

பாராருஞ்சிரகிரியில்வீரராகவக்குரிசில்பயந்தமைந்த
னீராருஞ்சடிலமுடிப்பரமனடிநாளுளும்பேணுநீரா
னேராரும்பலகலையுநுண்ணறிவிற்கற்றுணர்ந்தவ்வியல்புதேர்ந்தான்
சீராருஞ்சோடசாவதானிசுப்பராயப்பேர்சிறக்கும்வல்லோன். (எ)

கொடைக்குரிசிலச்சியற்றித்தருகவெனக்கேட்குமுனங்குளைநீர்சூழும்
புடைக்குரியபுலவர்களுமெவ்வெவருந்தத்தமுயிர்புகழின்மேவி
யடைக்குரியமகிழ்ச்சியைப்போலானந்தத்திடையமுந்தியாய்வுற்றேறும்
விடைக்குரியபரன்றுதிக்குமொன்றனையாயிரஞ்செய்துவிளக்கினுனே. ()

---

நாகபட்டினம் - இராம-அ

## கிருஷ்ணசுவாமியுபாத்தியாயரியற்றிய

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மாமேவுமணிமேவுவளமேவுபுனன்மேவுமவுலிவேணி
தேமேவுகயிலைதணந்துயர்தமிழ்ப்பாண்டியையடைந்துதென்னனின்ற
கோமேவுமுயிரனைத்துமீன்றருணம்பராபரைகைக்கோலேகைக்கொண்
டாமேவுவானரசனுதியர்வந்தடிதாழவகிலங்காத்து. (க)

கடலறவுண்டெழுமலையக்குறுமுனிவன்களிதுளும்பக்கடல்சூழ்வையத்
தடலகலச்சுந்தரபாண்டியனுயோராட்டயர்ந்தொன்னலரையோட்டி
வடகலையேமாறவருமுத்தமிழ்ச்சங்கத்தெழிலைவளர்த்துவாய்மை
நடவியதுபோலறஞ்சாறிரிசிராமலையினன்னுவலர்கொண்டாட. (உ)

எங்கணும்பன்மங்கலங்களெடுத்தியம்பநவக்கிரகமிடரின்றேங்கப்
பங்கமறப்பெருஞ்சைவம்பாரடங்கவென்றிலங்கப்பகராயத்தன்
றங்களுளநயந்தூங்கத்தந்திரவாதிகளேங்கத்தரணிதாங்கக்
கங்கைகுலங்களிசிறப்பவெங்களுளவிழிதிறப்பக்கருதிவந்து, (௩)

பேரெட்டாமீனுட்சிசுந்தரவேளெனவுலகம்பேசமேவி
யீரெட்டாண்டினுக்குளிலக்கியக்கடனீத்திலக்கணவாரிதியையெற்றிச்
சீரெட்டாமுகூர்த்தனெழிற்கலையபரம்பரையாஞ்செல்வம்வாய்ந்த
காரெட்டாவிளைடருந்தண்டுறைசையாதினத்தைக்கலந்துநாடி. (ச)

அறந்தழீஇயமருமெய்யம்பலவாணதேசிகன்பாலரியஞானத்
திறந்தழைக்குங்கலைமுழுதஞ்செவ்விதினேர்ந்துயர்தீக்கைத்திருவநீடி
நிறந்தழைக்குந்தமிழ்ச்சங்கமெவ்விடத்துநிறுவியருணிமலன்பாதக்
கிறந்துபடாப்பாமாலைப்பல்வகையபிரபந்தமிசைத்துப்போற்றி (௫)

ஆரியத்திலிருந்திடுநற்றலமகிமையனைத்தினையுமடைவினுய்ந்து [க்
பாரியநீந்தமிழின்மொழிபெயர்த்தெழிறேய்சரபமெனப்படர்தல்கேட்டு
காரியலைப்பழித்ததற்குக்கொடைபயிற்றுங்கரதலத்தான் கனம்பெற்றே
சீரியலும்பொன்மலையான்சயிலாதிவரைப்பாலித்தெண்ணீராற்றன்.[ங்கு

கோதில்பலபெருவளமுங்குலவு தொண்டைவளநாட்டுட் குறைவற்றோங்
போதிலமர்பொறிவாழும்விற்பெற்றதிருநாடன்புனிதமேவித் [கும்
தீதிடறுங்குங்குமமெய்செறிபரியானுயர்களிற்றான்செயந்தோய்மீட்டி
யேதியான்வண்டடருந்தண்குவளைமாலையினுனிசைதோய்மன்னன். (எ)

எக்காலுஞ்சலனமிலாதோம்புறுமேழிக்கொடியானிகலைவாட்டித்
தக்கார்களேத்தெடுக்கத்தனிமுழங்குஞ்செயமுரசானிரட்டைச்சங்கந்
தொக்கார்ச்குந்திருமுன்றிற்றுவாயெறி வெண்சாமரன்பொற்றுளுவதேய
னிக்காருமொழிமடவாரிலங்குபழவேற்காடனிடரிலாதான். (அ)

அருந்தவஞ்செய்துயர்துளுவவேளாளனருட்கமலையமருந்தோளன்
மருந்தனையபுகழ்ச்செல்வராயவளக்கோத்திரன்பொன்னேரிவாணன்
கருந்தடங்கட்பமாமகிழுந்திருநாகைக்கொருவேந்தன்கருணைந்தப்
பெருந்தகையெம்மான்மகிழும்வீரசைவாகமநெறியோன்பிசகிலாதோன்.

சந்ததமுநயந்தழைக்குமிராமசாமிக்குரிசிறவத்தால்வந்த
மைந்தன்வருபுகழெலாந்தனக்காக்கிப்பாவலருண்மகிழுமாசெய்
கந்தனப்பாத்துரைவள்ளல்கனதனவாகனசுகுணன்கலைகடேருஞ்
சுந்தரன்கண்டானந்தவாரியினிற்றுளைந்துமகிழ்துளும்பநோக்கி. (க0)

இருவினையின்பயனுகரவெடுத்தவுடலிறந்துபடாதிருக்குமாறு, தரு
வினனிக்கடலுகைக்காரோணமான்மியத்தைதமிழாற்சொல்லித், தருதி
யதுவாமஃதுபெருமையினிற்சிறந்ததமிழ்த்தகவோயென்னப், பொருவில்
பலவணியுடனேபொருட்சுவையுஞ்சொற்சுவையும்பொதியக்கூட்டி. (கக)

பண்டருமென்வனப்புமுயர்சைவசித்தாந்தத்தினுறுபயனும்பண்பு
மெண்டருசித்திரகவியினீட்டமுடன்பலவிதியுமெடுத்துக்காட்டித், தண்ட
மிழ்ப்பாவாணருளத்தருக்ககலவேதியர்களாசிசாத்தத், தொண்டாரவொ
லியெழுப்பப்பாடியரங்கேற்றினன்றான்மரபின்மாதோ. (கஉ)

இத்தகையவளந்திகழுங்காப்பியத்தையெழுதாதவெழுத்திலேற்றிச்
சுத்தமுறத்தருகவெனச்சுமுகனப்பாத்துரைமகிபன்சொலுமுன்சென்னி
முத்தகையவெற்பிலமர்மீனாட்சிசுந்தரமான்முதிர்பூம்பாதப்
புத்தலைமுடிசூட்டி யெத்தலமுமதிக்கவரும்புகழின்மேலான். (கங)

நன்றறிசொற்கழகமாணுக்கர்பலருள்ளுமுளநயக்குநூல்க, ளொன்
றலபஃறலமகிமைகாப்பியமைந்திலக்கணங்களொருங்குதேர்ந்து, தென்ற
மிழ்த்தேயங்களொருமூன்றுமுவப்புறத்தமிழின்செவ்விகாட்டி,மன்றமிரு
முனிவர்தொழநடம்பயிலும்பெருந்தகைதன்மலர்த்தாள்வாழ்த்தி. ()

போதரப்போதனைபுரிந்தபோதகனேவையகக்குப்புனிதமேவு
நாதனெனவறவோர்கணவின்றுநவின்றுளங்களிக்குநயவிலாசன்
சீதமதிமுகவீரராகவமால்புரிந்ததவச்செல்வமோங்கு
நீதனெழிற்சோடசாவதானமுறைதெரிக்கவலநிபுணநேயன். (கரு)

ஆயவுரைசெறிசுப்பராயநாவலவனெனுமான்றசீர்த்தி
நேயனகங்களிகூர்ந்துநிலைத்திடுமச்சினிலேற்றிநெறியிற்போற்றித்
தூயபுலவோர்மதிக்கநேயவடியார்கதிக்கத்துறவோர்மெச்ச
மேயபெரும்புகழ்பரவநன்மையுறப்புவியெங்கும்விளக்கினனே. (கசு)



உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

சென்னைக் கவரன்மெண்டு நார்மல் பாடசாலைத் தமிழ்ப்புலவர்
திரிசிரபுரம் சோடசாவதானம்.

## சுப்பராயசெட்டியாரியற்றிய

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொன்பூத்தபுனற்பொன்னியிடையறாதுவட்டெடுக்கும்பொலிவா
னென்றுங், கொன்பூத்தபல்வளமுநனிபூத்துத்தன்னிறைவன்குடைக்கீழ்
வைகித், தென்பூத்தபன்னாடுங்களிதுளும்பச்சிறந்தோங்குசென்னிநாட்டு
ண், மன்பூத்தவனைத்துயிர்க்குநலம்பூத்ததிருநாகைவைப்புண்மாதோ. (க)

தெம்முருக்குஞ்சுதரிசனப்படையாளிமுதற்பசுக்கள்செம்மாந்தேத்தச்
செம்முருக்குநிகர்திருவாய்மலைமகளோடமர்ந்தருளுந்தேவதேவ
னம்முருக்குமான்மியத்தைவடமொழியின்வழுவாதுநலங்கனிந்த [ன்னா.
வெம்முருக்குந்தென்மொழியிற்பெயர்த்தெவர்க்கும்வியப்பூறத்தருகவெ,

வளம்பெருகுபுனற்பாலிநதிப்பெருக்கான்வளர்ந்தோங்கிவானளா
நெற், களம்பெருகுதிருத்தொண்டைமண்டலமாமகண்முகமாக்கவினித்
தோன்றுந், தளம்பெருகுமலர்த்தடஞ்சூழ்பொன்னேரிவிற்பெற்றதனிநா
டாள்வோன், குளம்பெருகுகழைவேலிப்பழவேற்காடெனுநகரிற்கூர்ந்து
வாழ்வோன். (ங)

நண்ணலர்தமுயிர்குடிக்கும்வாட்டொண்டைநரபதியானன்குதேர்ந்த
தண்ணலரும்பொழிற்றுளுவவேளாளர்குலதிலகன்றலைமைசான்ற
கண்ணலரும்பெருஞ்செல்வராயகோத்திரசீலன்கவிவல்லோர்தம் [ன்.
மெண்ணலரும்புகழ்படைத்தோணியாவருக்கு மிருநிதியாவிலங்குயேலோ

தோளிருக்குமந்தரத்தான்றன்னலர்கள்விதிர்விதிர்த்துத்தண்ணென்றோ
தாளிருக்குமதிர்கழலானிராமசாமிக்குரிசிறவத்தான்வந்தோன் [டத்
வேளிருக்கும்பெருங்கலைகள்கற்றுணர்ந்தநுண்ணறிவின்விழுமியோன்புத்
தேளிருக்கும்பெறலருங்கண்டிகைநீறுசாதனமேசிறப்பக்கொள்வோன்.()

வண்டுளருந்தண்டுழாயவன்முதலோர்காணாதுமயங்கிநிற்பக், கண்டுள
ருங்காணாதவருண்மணியைக்கரதலத்திற்கதிர்ப்பக்காண்போன், தொண்
டுளருமலருமெம்மான்றிருவேடத்தொடுதோன்றிற்றொண்டுபூண்போன்
விண்டுளரும்வியக்குநடையாளனப்பாத்துரைமகிபன்விரும்பிக்கேட்ப, ()

மூர்த்திதலந்தீர்த்தமான்மியமுமந்தமூர்த்தியருண்முறையுங்குன்று
தார்த்திகொள்பாயிரமுதலாநைமிசம்வாழறவர்கள்பூசித்ததிருப்
பாத்தியபஃறுறைப்படுபாவாற்புலவரியற்றுநூற்பண்புதேர்வான் [ன்றே
றோர்த்தியநன்னிறைகோலாப்பலசெய்தோன் புராணமொன்றுசெய்தான

அன்னவன்யாரொனிலறைதுங்கேண்மினகலிடத்தளவாக்கல்வியொ
ன்றுற்,றன்னனையருளொனினும்பொறையினாற்றனக்குநிகர்தானாக்கற்றோ
ன், பொன்னனையகவிபாடும்புலமையினாற்பாடுநரும்புவியிலுண்டோ,வெ
ன்னனையாமுனைப்பமெனாப்புலவர்தம்முளெடுத்துரைப்பப்பாடத்தேர்ந்
தோன், (அ)

சின்னூலினுணர்ச்சியுளோரஃதிலோர்செவிதெவிட்டச்செறிந்துகேட்பிற்
பன்னூலுநனியுணர்ந்தோரிவனெனயாவருமதிப்பப்பழுத்தசெஞ்சொன்
முன்னூலும்பின்னூலுந்தலையெடுப்பப்பிரசங்கமொழியவல்லோன் [ன்.
எந்நூலுமிவன்பினெவர்மொழியவல்லாரெனக்கற்போரிசைப்பமிக்கோ

அருள்கனிந்தபரசிவமேபொருளெனத்தேர்ந்துலகனைத்துமருகாதுய்யத்
தெருள்கனிந்தசைவநெறிநடையாலுமுறையாலுந்தெரிக்குந்தூயோ [ப்
னிருள்கனிந்தவென்மனத்துமிடையறு தொளிபரப்பியிருப்போன்கங்கை
பொருள்கனிந்தகுலதீபன்மீனாட்சிசுந்தரனாம்புலவரேறே. (௧௦)

---

## சென்னைப் ப்ரீசர்மிஷன் பாடசாலைத் தமிழ்ப்பண்டிதர்

## பு - தெய்வசிகாமணிமுதலியா ரியற்றிய

### நேரிசை யாசிரியப்பா.

பூமலிகொன்றைப்பொலந்துணர்புனைந்த-தேமலிசடிலச்சிவபிரான
மர்ந்தருள் - திரைபடுபொன்னிச்சென்னிநன்னாட்டுக்-குரைபடுசென்னியா
யோங்குகாரோண-மான்மியந்தனைத்தாதான்மியநனியுற - வடமொழியிரு
ந்துதென்மொழிப்படுத்திப் - புலவர்கூட்டுண்ணப்பொருணலங்கனிந்து-த
வலருஞ்சுவைத்தேன்றலைத்தலையசும்புஞ்-செஞ்சொல்வடித்தசெய்யுளாற்
றருகென-வஞ்சொன்மடக்குயிலாருயிர்த்துணைவரைத் - தணந்தகம்வருந்
துமணங்கமழ்குழலியர்க்-கவர்வரவுகூறித்தவமகிழுறுத்துபு-தீயவுமொரு
கானல்லவாமென்னும் - ஆயசொற்பொருளையமலத்தெரிக்குந் - தேமாம்
பொழில்சூழ்வாமாண்கலைபயில் - தொண்டைமண்டலத்தின்கண்டலமெ
னத்திகழ்-பழவேற்காடெனுமுழுநகராளி-துளுவவேளாண்குலத்தொளித
ருதீபம்- கற்றவர்க்கெய்ப்பினிலற்றமில்வைப்பு-காமனுநாணுமிராமசாமிச்
சேய்- தவத்தினிலுதித்தசிவப்புறுநிதியம் - வரகுணமேருவறியவர்களைக
ண்-தரமிகுவீரசைவசிகாமணி - முப்பார்த்திபர்களுமொழிதருபுகழ்சேர்-
அப்பாத்துரையெனுமதிபன்கேட்பக் - காப்பியநெறிகடவாதுபத்தழகும்-
நீப்பரும்புராணம்நிலைபெறச்செய்தனன் - அன்னவன்யாரெனிற்பன்னுது
ங்கேண்மோ- தொல்காப்பியமுதல்பல்காப்பியங்களுள்-இவன்கற்றுணரா
தெஞ்சியவுளவோ-இருப்பிற்கூறுமினெனப்புலவோர்தமுள்-விருப்பிற்புக
றரமேதகக்கற்றோன்- கற்றவருள்ளங்கசிந்துநெக்குருகி-யெற்றேயிவன்றி
றனிசைப்பதற்கெளிதோ - வெம்மனோர்க்கென்றுத்தம்மிற்புகலவும்-மற்ற
வருள்ளந்தட்டழிந்தறைபோ- யழுக்காறென்னுமிழுக்காற்சிமிழ்ப்புண்-டி
ன்றோன்போலப்பன்னுறிற்பலருள-ரெனப்புலர்நாவான்விதிர்ப்பொடுபுக
லவும்-நன்னயஞ்செறிந்தபன்னூலியற்றியோன்-நலத்தகுபுகழ்சால்குலப்
பவமுதலா-மெண்வகையுறுப்பிற்றிண்ணிதிற்சிறந்து - நன்றிமுதலியதுன்
றுபல்குணங்களும்-கற்பவர்களிப்பப்பொற்பநன்குடையோன்-ஆனுப்புல
மையமைந்த-மீனாட்சிசுந்தரமேந்தக்கோனே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநாகைக்காரோணப் புராணம்.

## கடவுள் வாழ்த்து.

### நாகாபரணப்பிள்ளையார்.

மாமேவுதந்தையொருமருப்பையெனவிளித்திடத்தன்மௌலியாய
தூமேவுபிறையொருபாற்சொருகாவத்தந்தையெதிர்தோன்றநின்று
பாமேவும் * ஒருமருப்பனியானோநீயோதெரிந்துபகராயென்று
பூமேவுநகைகொளுநாகாபரணக்களிற்றிருதாள்போற்றிவாழ்வாம். (௧)

o அலகோட்டுபெருங்கருணைத்தந்தையைச்சூழ்ந்தேற்றதுமொன்றமையாதென்றே, வலகோட்டுமிசைப்படுநீர்ப் பொன்னியிற்றேம் படுபல்கனி வழங்கலோர்ந்து, நலகோட்டுமதிசடைநின் றொழுக்குவதால் † சடையனைத்துநனைவுற்றோங்கு, பலகோட்டுமாவடிவா மொருகோட்டுமாவடியைப்பரவிவாழ்வாம். (௨)

### காயாரோகணநாதர்.

சீர்பூத்தவானவருமோனவருந்தவராசிச்செல்வவேந்தும்
பார்பூத்தவாரணனுநாரணனுங்காரணனும்படியுள்ளோர்ந்து
நார்பூத்தவழிபாடுகெழீபாடுகொளாதியற்றிநயக்கமேவுங்
கார்பூத்தகடனாகைக்காயாரோகணப்பெருமான்கழனுட்கொள்வாம். (௩)

### ஆதிபுராணர் - இதுவுமது.

அருவமுதலொருமூன்றுள் ‡ கட்புலனுவனவிரண்டாலவற்றுளெல்லாகி
வுருவமுமுண்டாக்கிடுவித்துபயமே யெனறெரித்தாங்சொலித்துப்பொங்
வெருவவெழுகடலெழுங்காலிலிங்கமாயதினின்றும் || வேறுய்க்காட்சி
மருவமுனிவரர்க்குதவுமாதிபுராணப்பெருமான்மலர்த்தாள்போற்றி. (௪)

---

* ஒருமருப்பன்யானோ நீயோவென்றது- ஒருபாற்பிறை செருகியானிருமருப்பனுதலால் ஒருமருப்பனல்லன், வராகமருப்புளனாதலால், நீயேயொருமருப்பனெனவும் பொருள்தருதலின், ஓகாரம்முன்னர் எதிர்மறைக்கண்ணும்பின்னர் பிரிநிலைக்கண்ணும்வந்தது.

o அலகோட்டு - அலகு ஓட்டு எனப்பிரித்து, அளவில்லாத வெனப்பொருள்கொள்க. † சடை-வேர்.

‡ கட்புலனுவனவிரண்டு-உருவம்-அருவாரூபம். உபயம்-அருவாரூபம்.
|| வேறுய்-சோமாக்கந்தரூபமாய்.

### கருந்தடங்கணம்மை.

கருந்தடங்கணம்மையுறார்தமைச்சாராவெங்கோபக்கடுங்கடாப்பா
கருந்தடங்கணம்மையெவன்செயுமனமேமதனோர்காற்றீராமோ
கருந்தடங்கணம்மையுறப்பரப்பியமர்க்கினுமெவனாங்கடனாகைக்கட்
கருந்தடங்கணம்மையிருகமலமலர்ச்சேவடிகள்கருதுவாமே.

இ-ள், மனமே-நெஞ்சமே-கருந்தடம்கண் அம்மை உறார்தமை-பெரிய மார்க்கத்தைக்கருதாநின்ற வருபிறப்பைப்பொருந்தா தாரை, சாராவெம் கோபம் கடிகடாப்பாகர்-சாராதவெவ்வியகோபத்தையுடைய வச்சத்தை த்தராநின்ற வெருமைக்கடாவுகைப்பவரால், உந்து அடங்கள் நம்மை எவன் செய்யும்- செலுத்தப்படாநின்ற சலங்கள் நம்மை யாதுசெய்யும்; (ஒன்றுஞ்செய்யாதென்றபடி) மதனோர்-ஓர்கால் தீராமோகரும் தள் தம் கணம்-மன்மதரானவர் ஒருகாலத்துந்தீராதமோகத்தை யுடையாருந்தள் ளாநின்ற தமது கணமாகிய மாதர் கூட்டத்தை, மை உறபரப்பி அமர்க் கினும்எவன் ஆம். மயக்கமிகப்பரப்பிப்போர்செய்யினும் யாதாகும்; கடல் நாகைக்கண் கருந்தடங்கணம்மை இருகமலமலர்ச்சேவடிகள் கருதுவாம்-கடலடுத்த நாகைக்காரோணத்துக்கண் எழுந்தருளிய நீலாயதாட்சியம் மையினது இரண்டு தாமரை மலர்போன்ற சிவந்த திருவடிகளைச் சிந்திப் பாம்-எ-று.—சிவபிராட்டியார்திருவடிகளைச்சிந்திக்கின்,இம்மையின் மன் மதன்செய்யுந்துன்பமு மறுமையிலியமன் செய்யுந்துன்பமு மில்லையென் பதுகருத்து-பெரியமார்க்கமென்றது முத்திமார்க்கம்-வருபிறப்பைப்பொ ருந்தாதார் அடியார். நீல ஆயத அட்சி-கரியவிசாலமாயகண்ணையுடையவ ளென்பது பொருள்- கடியென்னு மெழுத்துப் பிரிந்திசைக்கப்படா வுரிச் சொல் பிறிதிலக்கணமாகக் கடுவெனத்தன்னீறு திரிந்து நிற்றல் - தொல் காப்பியம் சொல்லதிகாரம்-உரிச்சொல்லியல்-கூசு-வது சூத்திரம் - எழுத் துப்பிரிந்திசைத்த லென்பதற்கு, உரையாசிரியர் கூறியவற்றானுணர்க. அ டம்-தற்சமம். அன்றி வருத்தமெனப்பொருள் கூறி, அடு என்னு முதனிலை யடியாகப்பிறந்த தொழிற்பெயர் காரணவாகுபெயராய் நின்றதெனினு மமையும். மதனோரான இயற்பெயர் முன்னரன்றி, உயர்திணைப்பெயர் மு ன்னர் ஆவென்னும் இடைச்சொல்வருதல்-தொ-சொ-இடைச்சொல்லியல் உஉ-சூ "இயற்பெயர் முன்னர்" என்பதற்கு உயர்திணையிலுஞ் சிறுபான் மை வருமென ஒன்றின முடித்தலென்பதனால்,சேனாவரையருநச்சினார் க்கினியருந்த முரைமையாற் கொள்க-ஓர்கால் என்னுஞ்சினைமுதற் கிளவி யல்லாத காலக்கிளவியின் முற்றும்மை செய்யுள் விகாரத்தாற்றொக்கு நி ன்றது. கருதுவாமென-மனத்தையுந்தன்னோடுபடுத்தமையின் முன்னின்றா ரையுளப்படுத்திய தன்மைப்பன்மைவினைமுற்று. (௩)

### இதுவுமது.

சுரும்புமுரல் கருங்குழலுஞ்செவ்வாயும் வெண்ணகையுந் தொடிப்
பொற்றோளும், விரும்புபரஞானநிறைகொங்கையுஞ்செங்கையுஞ்சதர்த்து
மிளிர்செம்பட்டும், பெரும்புவனமுழுதமை சிற்றுதரமுமங்கலநாணும்பி

லைகண்டோனட், மரும்புகருந்தடங்கண்ணிசேவடியுந்துதித்துமனத்தமைத்துவாழ்வாம். (௬)

சபாநாயகர்

மண்களிக்கநெடுஞ்சடையிற்குறுந்திவலையெழவழல்கைவயங்காநிற்கக்
கண்களிக்கவொளிருமுகத்திளங்காறைவரவெளியாய்க்கதிர்மன்றேறி
விண்களிக்கவெழுசுடர் * பேரருண்முகம்பாய்தரமற்றோர்மேனிமுற்று
மெண்களிக்கநடவிலுமிறையவர்குஞ்சிதமலர்த்தாளிறைஞ்சிவாழ்வாம். (௭)

சிவகாமியம்மை.

பெற்றதாய்தன்பதியைக்கர்தலிக்கக்காதலிக்கும்பெட்பிற்காட்ட
லுற்றபோதேசாணுமிளமழவென்பதுதனக்கேயுண்மையாகச்
சொற்றமாதேவையுயிர்காதலித்துநோக்கநடந்தொலையாமன்றி
லற்றமேவாதவைநன்குற்றிநிற்கும்பராபரைதாளடுத்துவாழ்வாம். (௮)

அழகவிடங்கர்.

சுழகவிடங்கலையிலவாநாகநகரமேல்கீழ்க்கண்ணுங்கோறல்
பழகவிடங்கலாமாய்த்தான்மணிமார்புநறுமுறப்பப்பன்னாள்சென்றுங்
குழகவிடங்களையாதுகளத்தமைத்தாயென்றமரர்கூறமேய
வழகவிடங்களைமாயைப்படங்களையமடங்களையவடுத்துவாழ்வாம்.

இ-ள், மேல்கீழ்க்கண்ணும் (நாகநகரமென்னும்பெயருடைய) மேலிடமுங் கீழிடமும் - கோறல்பழகு அ இடங்களைமாய்த்தான் மணிமார்பும் நறுமுறப்ப-கொலைத்தொழில் பழகிய அம்முதலையைக்கொன்ற திருமாலது கவுத்துவமணிந்தமார்பும் பொருமைப்படவும்,பன்னாள்சென்றும் குழகவிடம் களையாது களத்து அமைத்தாய் என்று அமரர் கூற-பல்லூழிகாலஞ்சென்றுஞ் செல்லாத விளமையையுடையாய்-விஷம் தனதுருவங்கெடாமல் நிற்பக்கண்டத்தமைத்தாயென்று தேவர்கள் துதிக்கவும், சுழக இடம் களையிலவாம் நாகநகரம் மேய அழகவிடங்களை-கல்விச்சபையாகிய விடங்கள் அளவில்லனவாகியநாகபட்டினத்துள்,எழுந்தருளியசுந்தரவிடங்களை - மாயைபடம் களைய-மாயை யென்னு மறைப்புக்களையவும், மடம் களைய-அதற்கு மூலமாகிய வறியாமை களையவும், அடுத்து வாழ்வாம்-இடைவிடாமற் சரண்புகுந்து அழிவின்றி வாழ்வாம்-எ-று. நாகநகரம்-என்னும் பெயர்தமக்குமுண்மையின்! சுந்தரவிடங்கரெழுந்தருளப்பெற்றமையால், மண்ணுலகத்திலுள்ள நாகநகரத்தின்சிறப் புத்தமக்கின்மைநோக்கியழுக்காறடைந்தனவென்பார் மேல்கீழ்க்கண்ணும் நறுமுறப்பவென்றார்-என்றுமழியாத்தன்மையை யுடையையென்பார்-பன்னாளசென்றுங் குழகவென்றார்-கண்ணென்னும் இடவுருபாய்நின்ற வுருபுதொக்கபெயரும் உம்மென்னும் எண்ணு நிலைப் பொருளிடைச்சொல்லும் பண்புகுறித்துநின்ற இனமொத்தமேல்கீழ் என்பவற்றோடுமாட்டுறுப்பாய், மேல்

---

* பேரருண்முகம்-பெருமைபொருந்திய சிவகாமித்தாயார்திருமுகம்.

கண்ணும்கீழ்கண்ணும் என நின்றன. ஒருவாய் பாட்டானடுக்கிநின்ற நறு முறுப்பகூறளென்னும் தம்முளியை யில்லாத வினையெச்சங்கள் மேயவென் னும் எச்சவினையோடு முடிந்தன. (கூ)

இதுவுமது.

பரவுமுடிபோற்றிவிழிகவருமுகம்போற்றியருட்பார்வைபோற்றி
விரவுகுழைச்செவிபோற்றிவிதிவிலக்குமுழுதுரைத்துமிளிர்வாய்போற்றி
கரவுதவிரன்பர்மனநிகருமரியணைபோற்றிகதிர்வான்போற்றி
* யுரவுபொலிநடம்போற்றியழகவிடங்கப்பெருமானுளிர்தாள்போற்றி.

வேறு.

தட்சணாமூர்த்தி.

பதிபசுபாசமென்னப்படுமொருமூன்றும் ‡ சுத்தம்
பதிநிலையொன்றற்கொன்றுபயில் ¶ வியாப்பியமாமின்னும்
பதியொடுபசுக்கலக்கும்பண்புமிற்றென்றோர்செங்கைப்
பதிவிரலளவிற்சேர்ப்பிற்பகர்பவற்கடிமைசெய்வாம். (கக)

வயிரவர்.

பெருகுதன்புகழுளேனோர்பிரதாபமடக்கியாங்கு
முருகுதங்கலரின்மேலான்முண்டவெண்கபாலத்தூடு
கருகுபைங்கொண்டன்மேனிகவிழ்த்திடுசெந்நீரொற்ற
திருகுதீர்வடுகப்புத்தேள்சேவடிசென்னிசேர்ப்பாம். (கஉ)

வேறு.

நாகாபரணப்பிள்ளையார்.

தண்ணியரும்வெய்யவருந்தன்னைக்காற்பயனடையிற்சமமாவாரொன்
றெண்ணியருமறையுரைத்தன்மெய்ம்மையெனத்தெரித்தாங்கன் பில்லார் சாத்தும், கண்ணியருஞ்சடைமுடியிற்றண்மதியும்வெவ்வரவுங்கலப்பமே வி, நண்ணியருந்தவர்க்கருணாகாபரணமழகளிற்றைநயந்துவாழ்வாம். ()

சுப்பிரமணியர்.

மீனேறுகடல்வறப்பவிண்ணேறுமலைகுலையவெள்ளேறூருங்
கானேறுகடுக்கையினார்கையேறுகழுமுனினுங்கடுவேறெட்டுக்
கூனேறுமதிநுதலார்க்கொண்டேறுபொருமமரர்குலவிவாழ்வான்
வானேறுவிதம்பசியமயிலேறுசேவகனைவாழ்த்திவாழ்வாம். (கங)

இதுவுமது.

வரையுதித்தவொருகொடியைப்புணர்ந்துதெய்வயானையுருமருவிச்சத்தி யுரைசெயுமோர்பாற்பொலியப்பெருமையின்மேலாவதனுலொப்பாகாது கரையுமொருமொழிப்பொருளையரற்குணர்த்தியுயர்ந்து பொலிகருணையா னை, விரைசெய்நறுங்கடம்பணியுந்தடம்புயனைப்பராயின்பவெள்ளத்தாழ் வாம். (கரு)

---

* உரவுபொலி நடனம்-குக்கும்பஞ்சாக்கரநடனம்.

‡ சுத்தம் பதிநிலை-முத்திநிலை, ¶ வியாப்பியம்-உள்ளடங்கியிருத்தல்,

திருநந்திதேவர்.

பதிமரபிற்பரவிரண்டாஞ்சிவனெனயாவரும்புகலப்பட்டுமெங்க
டுதிவிரவுகுருமரபின்முதற்குரவனென்றெடுத்துத்தூற்றப்பட்டோ [பெய்
னுதியமைவச்சிரங்கதைசுதரிசன முற்படைநோன்மை நொறுங்கவாய்ப்
தகிவிளைவினெழுகுரற்படைப்பெருமானடிக்கமலமடுத்துவாழ்வாம். ()

வேறு.

ஆசிரியரகத்தியனார்.

* வெற்புமேக்கெழறவிர்ப்பான்மென்மலர்க்கையுளொன்று
பொற்புமேவுறமதித்துப்பொலங்கழலொருதாளூன்றி
வற்புமேவுறத்தவிர்த்தமர்தேவனினுஞ்சீர்வாய்ப்புற்
றற்புமேவுறத்தென்பால்வெற்பமர்பவர்க்கடிமைசெய்வாம். (௧௭)

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

இருமுதுமாதர்தங்கூனிருகரங்கொடுமுயன்று
கருதுறத்தீர்த்ததாசரதியுங்கண்ணனுநாண்கொள்ளக்
குருமதிக்குலத்துவேந்தன்கூனொருசொல் ¶ லாற்றீர்த்த
பொருவருங்காழிஞானபூரணற்கடிமைசெய்வாம். (௧௮)

திருநாவுக்கரசுநாயனார்.

எழுபதுவெள்ளஞ்சேனையெடுத்திடுபலகற்கொண்டு
செழுமணிப்பரவையொன்றேகடந்தவெஞ்சிலையோனுண
வழுவுமண்டுகல்லொன்றான்மறிகடல்பிறவிவேலை
முழுவதுங்கடந்தவெங்கண்முதல்வனுக்கன்புசெய்வாம். (௧௯)

சுந்தரமூர்த்திநாயனார்.

பொறிமறுமார்பத்தண்ணல்வராகமாய்ப்புவியிடந்து
மறிவதற்கரியபாதமகன்றுகண்படுக்குந்தேத்து
முறிவறத்தொடர்ந்துவந்துதலைமிசைமுயங்கச்செய்த
செறிபெருந்தவத்துநாவற்செம்மலைச்சிந்தைசெய்வாம். (௨௦)

மாணிக்கவாசகசுவாமிகள்.

எழுதிடும்வேலைபூமேலிருப்பவனியற்றப்போக்கி
யெழுதுதலில்லாநூல்சொற்றினிதமர்தருமாதேவை
யெழுதெழுதெனப்பல்பாச்சொற்றியைதரப்பெயருமீற்றி
லெழுதிடச்செய்தகோமானிணையடிமுடிமேல்வைப்பாம். (௨௧)

---

* வெற்புமேக்கெழல் விந்தஞ்செருக்கியெழல், கைலையிராவணன் பெயர்க்கமேலெழல்.

¶ ஒருசொல் - திருப்பாசுரம்.

தண்டீசநாயனார்.

பசுக்களையோம்புவாற்குப்பாங்காவதிதுவேயென்று
பசுக்களையினிதினோம்பிப்பான்முதலாயதெவ்வப்
பசுக்களையோம்பல்செய்தபைந்துழாயவன்போலாது
* பசுக்களைந்தின்பந்துய்க்கும்பார்ப்பனச்சிறுவனையுள்வாம். (௨௨)

அறுபத்துமூன்றுநாயன்மார்.

சாற்றிடுபெருமைவாய்ந்ததவாப்புகழ்ச்சைவஞ்சார்ந்தா
ராற்றிடுதவமுநான்கேயடைதருபயனுநான்கே
தூற்றிடுபிறவென்னென்றுசொற்றிடற்கொருசான்றாய
போற்றிடுமறுபான்மூவர்பொன்னடிசென்னிசேர்ப்பாம். (௨௩)

புண்டரீகமுனிவர்.

புரைதவிருலகமாதிபுராணமொன்றிருகைகூப்பிக்
கரைதரப்பொலிவாருக்குக்காயாரோகணமொன்றென்று
முரைசெயத்தவம்புரிந்தவுத்தமப்புண்டரீக
விரைகமழ்பதுமப்பூந்தார்முனிவனைவிளம்பிவாழ்வாம். (௨௪)

அதிபத்தநாயனார்.

தடிகடற்புகுதல்போலச்சைவமாங்கடலிற்புக்கு
முடிவலைவீசல்போலமுதிர்பத்திவலையைவீசி
நெடியமீன்கவர்தல்போலநிராமயவுமையோர்பாகத்
தடிகளாமீன்கவர்ந்தவதிபத்தர்க்கன்புசெய்வாம். (௨௫)

மற்றையடியார்கள்.

பொருள்பெறுநாகையாதிபுராணர்மெய்தீண்டிவெண்ணீ
றருள்சிவத்துவிசரன்னார்தளிப்பணியனைத்துஞ்செய்வோர்
மருடபுமற்றைச்சைவமாண்புடைப்பெரியோரியாருந்
தெருண்மிகமலியுமாறென்சிந்தையிற்குடிகொள்வாரோ. (௨௬)

வேறு - திருக்கூட்டத்தார்.

நிலவுதிருவெண்ணீறுங்கண்மணியும்புனைந்துமறைநெடுநூனுப்பட்
கலவுதிருவைந்தெழுத்துங்கணித்தருள்கூர்மாதேவன்கழல்சேவித்தே
யுலவுமவனுமமுழக்குபுதேவதீர்த்தத்தி ‡ னுதீசிக்கோட்டுக்
குலவுமணிமயமுத்திமண்டபத்தின்மேவுதிருக்கூட்டம்வாழ்க. (௨௭)

வேறு - பஞ்சாக்கரதேசிகர்.

நுதல்விழியின்றிநோக்குநோக்கினாலிருண்மலத்தின்
முதலறநீற்றியன்றேமுயங்கியவினையுந்தீர்த்துச்
சுதமிலின்புயிர்கருநல்கித்துறைசைவாழ்நமச்சிவாயன்
பதமுடிக்கணிந்தோமின்னும்பெறலெவன்பாரின்கண்ணே. (௨௮)

---

* பசுக்களைந்து-பசுத்துவங்களைந்து.

‡ உதீசிக்கோடு-வடகரை.

### வேறு.

### குருவணக்கம்.

திருந்தவொளிர்தருசிருவாவடுதுறைச்சுப்பிரமணியதேவனோடு
பொருந்தவமர்குருபரனம்பலவாணனென்னையுமொருபொருளாக்கூவி
யிருந்தனவும்வந்தனவுமிரியமுடியடிச்சூட்டியினிதிருண்டின்
பருந்தவெனையுங்கவர்ந்தானங்ஙனஞ்செய்தவற்கினியானாற்றல்யாதே. ()

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

---

## அவையடக்கம்.

பார்பூத்தகங்கைமுதற்பலநதியும்புகழ்சுவைத்தாம்பாலியாற்று
நீர்பூத்தபெருவளங்கூர்திருத்தொண்டைநன்னாட்டினிலவுமேன்மை
யேர்பூத்தகுடிமலிந்தபழவேற்காடெனுநகரிலென்றுமன்யாஞ்
சீர்பூத்தகாரணத்தாலோங்குசெல்வராயகோத்திரஞ்செய்நோன்பால். ()

பூமேவுதானுவகுலத்துதித்தவன்யாவருமதிக்கும்புகழின்மேலான்
பாமேவுபிரபலவிராமசாமிக்குரிசில்பயந்தமைந்தன்
றேமேவுவீரசைவசிகாமணிநல்லதிகாரச்சிறப்புவாய்ந்தான்
காமேவுகொடைத்தடக்கைவள்ளலப்பாத்துரைமகிபன் கருத்தினேர்ந்து,

### வேறு.

காமலிவளஞ்சானைக்காரோணத்தமரும்பெம்மான்
மாமலிசரிதந்தன்னைவடமொழிமொழிபெயர்த்துத்
தேமலிதமிழாற்பாடித்தருகெனத்தெரிந்துகேட்கப்
பாமலியனையான்செஞ்சொன்மருதியான்பாடலுற்றேன். (௩)

இருவருமுருவமாறியெண்ணினுண்முயன்றுந்தேருப்
பொருவரும்பெருமையாதிபுராணர்க்குப்புராணங்கூற
வொருவருந்துணியாரேனுமுணாத்திடுமுண்மைதேரின்
வெருவருங்கதிரோன்முன்னோர்விளக்கத்தாற்சுழற்றல்போலும். (௪)

உயர்ந்தவர்பாடலன்றியேனையருணாக்கும்பாட
னயந்துகொண்டிலமாலென்றுதியாகேசனவிலுமென்னி
லுயர்ந்தவிண்ணுலகர்பூசையுவந்துமண்ணுலகர்பூசை
நயந்துகொண்டிலையோவென்றுநான்கேட்கத்தெரியேன்கொல்லோ. (௫)

முன்னால்விண்ணாளிவேதன்முராரியாதியரடைந்த
தென்னான்மொய்வலியனைத்துஞ்சிறியதாமொருதுரும்பு
தன்னால்வெங்கண்டுநின்றதவாப்பெருநோன்மைநாதற்
கென்னாலிப்புராணஞ்சொல்லுவித்தலோரிரும்பூதன்றே. (௬)

காற்றுபல்குறையுமேற்றார்விகாரமுங்கலப்பக்கொண்டார்
வேற்றுமைவிலக்கல்செய்யாரல்வழிவிரவிநிற்பார்
சாற்றுமன்மொழியுஞ்சொல்வாரிலக்கணத்தலைமைவாய்ந்தார்
போற்றுமற்றவர்முன்யானெவ்வேதுவாற்புறத்தனாவேன். (௭)

அன்புசெயுயிரைக்கோடலன்றியவ்வுயிர்விராய
புன்புலான்முடையுடம்பும்புரிந்துமேலேற்றிக்கொண்டா
ரின்புசெய்மாட்சிசாறஞ்சரிதத்தோடினிதளாமென்
வன்பில்புன்மொழியைநாளுமிழித்திடமனங்கொள்வாரோ. (௮)

மறிதிரைக்கடறன்பாற்பாய்மாப்பெருநதிநீரன்றி
வெறியநீர்பாயாவண்ணமறித்திடைவிலக்குமென்னிற்
செறியருட்கடலுமேலோர்செப்புநன்மொழியேயேற்றுக்
குறியிலேன்பிதற்றும்புன்சொற்கொள்ளாதுவிலக்காநிற்கும். (௯)

நறுமலர்க்கொன்றையோடுநாற்றமிலெருக்கம்பூவு
மறுகணிசடைமேற்சூடியண்ணலாரமருமுண்மை
மறுவிலாப்பெரியோர்செய்யவாய்மலர்திருப்பாட்டோடு
வெறுவியகடையேன்செய்யும்பாடலும்விரும்பற்கன்றே. (௧௦)

மாசொடுகலந்ததேனுமதியினையிகழாரொன்சொ
லாசொடுகலந்ததேனுமருட்பெருங்காரோணத்தார்
தேசொடுகலந்ததாயபுராணத்தையிகழ்தல்செய்யா
ரோசொடுங்கலப்புறுப்பேரின்பமாம்பயன்வேட்டோரே. (௧௧)

மிருகமுற்பலவும்பத்திவிழைந்தவைமகண்டும்வானோர்
பெருகநஞ்சயின்றான்பாதப்பத்திமைபேணார்முத்திக்
கருகருமாகார்குற்றமளாயதிப்புராணத்தென்பா
ரொருகருமலக்கோட்பட்டாருரைப்பதீதொன்றுகொல்லோ. (௧௨)

அவையடக்கமுற்றிற்று.

வேறு. சிறப்புப்பாயிரம்.

நிலம்பூத்தபுகழ்நாகைக்காரோணத்தலத்தமருநிமலமூர்த்தி
நலம்பூத்தமான்மியமாம்வடமொழியைத்தென்மொழியானயப்பச்செய்
தான், புலம்பூத்தஞானகலைமுதற்பலவுமரிறபுத்துப்பொலிவிற்றேர்ந்தோ
ன், வலம்பூத்தசிராமலைவாழ்மீனாட்சிசுந்தரநாவலவரேறே. (௧)

சுறவேறுகடனாகைக்காரோணச்சிவபெருமான்றகவின்ஞான [தான்
நறவேறுமான்மியஞ்சேர்வடமொழியைத்தென்மொழியானலப்பச்செய்
உறவேறுபெரும்புலமையனைத்துமிவனுருக்கொண்டுற்றாலொப்பான்
சிறவேறுநாவல்லோன்மீனாட்சிசுந்தரமெய்ச்சீர்த்தியோனே. (௨)

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௨௩.

# திருநாட்டுப்படலம்.

கருந்தடங்கண்ணியோடுகாயாரோகணப்பிரானு
ரிருந்தருளிராசதானியெனப்புகழுடைகமுன்னுப்
பொருந்தவெண்ணில்லாத்தானம்பொலிதருதன்பாற்கொண்ட
பெருந்தகைச்சோழநாட்டின்வளஞ்சிலபேசலுற்றும். (௧)

அறிபலசமயத்துள்ளுமருந்தவச்சைவம்போலுங்
குறிபலவானோருள்ளுங்குலவுமாதேவன்போலு
நெறிகெழுசத்திமாருணிகழ்மலைமடந்தைபோலுஞ்
செறிபலவளநாட்டுள்ளுஞ்சிறந்ததுசோழநாடு. (௨)

உறுப்பினுணயனம்பல்வீயுள்ளரவிந்தநோன்புண்
மறுப்பரும்பொறியடக்கல்வாசிக்குங்கலையுண்ஞானம்
வெறுப்பில்பஃறுனத்துட்சோறளித்தன்மேதகவுற்றென்னச்
செறுப்பயில்பன்னுட்டுள்ளுஞ்சிறந்ததுசோழநாடு. (௩)

புண்ணியம்பயத்தலன்றிப்பொருவறப்பல்லாருடிக்
கண்ணியபயிர்வளர்க்குங்கணக்கிலாக்குடிஞையுள்ளு
மெண்ணியபொன்னிபோலொன்றிலையதுதழுவப்பெற்றுத்
திண்ணியவளத்தாலோங்கிச்செழிப்பதுசோழநாடு. (௪)

பயம்படுதருவுமைந்தேபசுவொன்றேகுடிஞையொன்றே
நயம்படுமுணவுமொன்றேபெற்றுநன்கடைந்தார்க்குள்ள
வயம்படுமறமுந்தெவ்விமற்றுங்கீழிழித்தல்செய்யும்
வியம்படுவாறுடெள்ளிமிளிர்வதுசோழநாடு. (௫)

முழுதுறுதீர்த்தமெல்லாமொய்சிவதீர்த்தமன்றி
யொழுகுறுபொன்னித்திர்த்தமுற்றமரிடங்களெல்லாஞ்
செழுவியகேத்திரங்கடிருந்தறம்பிறிதாநாளு
மெழுதருதானமாக்கொண்டிருப்பதுசோழநாடு. (௬)

ஏற்றஞ்சாறியாகராசரொழுவரும்வானநீங்கி
மாற்றஞ்சால்சிறப்புமன்புவழாமையுநோன்பின்வீறு
மூற்றஞ்சால்செல்வமாண்புமுற்றமையுணர்ந்துமேவத்
தேற்றஞ்சாறவமெண்ணில்லசெய்ததுசோழநாடு. (௭)

அன்னியநாட்டின்பாரமனைத்தும்வந்துற்றபோது
மன்னியதாங்கியாளுமன்னற்குமுன்போனல்கி
மின்னியமணியும்பொன்னும்படுகுழிமிதப்பக்கொண்டு
பன்னியபுகழாலோங்கிப்பரந்ததுசோழநாடு. (௮)

வருத்திடுபசியுள்ளாரைமறைநெறிதிறம்புவாரை
விருத்திடுபிணிக்கோட்பட்டுமெலிந்தறவாடுவாரைப்
பொருத்திடுசிவன்றாட்கன்புபூண்டிடாதவரைவானத்
திருத்திடுகொடையிலாரையில்லதுசோழநாடு. (௯)

ஆரணமுழக்கமெங்குமாகமமுழக்கமெங்குந்
தோரணநகரமெங்குந்துவன்றுமங்கலங்களெங்கும்
பூரணகும்பமெங்குந்திருவிழாப்பொலிவேயெங்கு
நாரணன்பொருவாரொங்குநலங்கெழுசோழநாட்டில். (கo)

மகபதியேதிவெற்றிமாய்த்திட்வளைகளெல்லா
மிகவிறம்வயிரப்பாறைக்கியலுமென்ருருங்கனுப்ப
நகவவைவிண்ணுரிஞ்சிநடந்துசீழ்த்திசையுற்றுங்கு
மிகவும்வெண்ணிறத்தகொண்மூக்குணகடன்மேவிச்சென்று. (கக)

குழிதரவாய்மடுத்துக்குறையறநாரந்தெவ்விப்
பழிதபக்கறுத்துமீட்டும்விண்ணெழீஇப்படருந்தோற்றங்
கழிதுயரொருமைநாகங்கனவளைக்கிளர்ச்சியோர்வான்
வழியனுப்பிடவெழூந்தமாநீலப்பாறைபோன்ற. (கஉ)

தெள்ளியகாலமென்னுஞ்சிறுவன்வெண்படம்விடுக்க
நள்ளியவதுமேற்போகிநயந்தொருநீலத்தாழி
யுள்ளியவிழூந்துமுற்றுங்கறுத்தெழுந்தவுமொக்கும்
வெள்ளியமுகிலாழிப்பால்விழாக்கறுத்தெழுந்ததோற்றம். (கங)

இவ்விதமெழுந்தகொண்மூவிரும்புவிவெதுப்பும்வேனில்
வெவ்வியலழிப்பானெல்லாமழித்திடவிழைந்தபெம்மான்
செவ்வியினிருவர்தம்மைமுந்துபுசிதைத்தல்போலக்
கவ்வியவெழுபரித்தேர்க்கடவுளைமாய்த்தமாதோ. (கச)

கதிர்வன்மாய்தலோடுங்கலப்புறும்ந்தகாரம்
பிதிர்தரவிளக்கிட்டென்னப்பிறங்குபன்மின்னுக்கான்று
முதிர்சினத்தமர்நடாத்தமூண்டுமாமுரசார்த்தென்ன
வதிர்தரவனைத்துமம்மாவடருருமுழக்கெழுப்பி. (கரு)

முரசினையறையக்கொண்டமூரிவான்குணிலேயென்னப்
பரசொருபசுவில்லிட்டுப்பருவரல்புரியுமாறு
விரசுவன்காலுமூர்தி * மெலிவு † கண்டொறுங்கிப்போக
வரசுசெயாணைமேற்கொண்டாகாயமுழுதும்போர்த்து. (கசு)

வழியடியவர்பாலென்றுமன்னுகாரோணநாதர்
பொழிதிருவருளேயென்னப்பொழிந்தனமழைமேன்மேலு
மொழிதராதுடற்றும்வேனிலுயிரொழிந்தோடிற்றம்மா
வழிதராதமருங்கொல்லோவாலம் ‡ உட்புகுந்தகாலை. (கஎ)

---

* ஊர்தி-மான். † மெலிவு-கானற்சலத்தின்பின்றொடர்ந்துமெலிதல்.
‡ ஆலம்-நஞ்சம்-நீர்.

நீறுமெய்விரவுகாயிற்கணுபலநிரம்பவீழ
மாறுசெய்மகவானங்கைவச்சிரஞ்சிதறிவீழ
மேறுநம்வயிரப்பாறையியற்றுவெஞ்சமராலென்று
கூறுபல்வரையுமுள்ளங்குளிர்ந்துமிக்குவப்புக்கொண்ட. (௧௮)

பெருமழைத்தாரையானைத்தொண்டையிற்பிறங்கிவீழ
விருநிலங்குழியுந்தோற்றமிகலிமுன்வேனில்செய்த
பொருவருங்கொடியவெந்நோய்போமிடமெல்லாந்தேர்ந்து
மருவுறக்கீழியாற்றமுயல்வதுமானுமம்மா. (௧௯)

மழைபொழிதாரையெல்லாம்வாய்ப்பெய்துவெந்நோய்தீர்ந்து
குழையுமண்வெறுத்துமேலாலோடிடக்கொடுத்துமேவுந்
தழைதருகொடுநோய்க்கோட்பட்டதுதணிந்தொழியப்பெற்றார்
பிழைதபுமருந்தென்றாலும்பேணுவதுண்டுகொல்லோ. (௨௦)

வரையகமொருவிக்கானமருவியங்ககன்றுமென்பா
னிரையகமியங்கியங்குநீத்திளங்கானல்சூழுந்
திரையகம்புகுந்துமாய்ந்துதேய்ந்ததுவேனில்வெப்பம்
புரையமைகொடுமையாளர்க்கிருக்கையும்பொருந்துங்கொல்லோ. (௨௧)

மறப்பகைமாற்றவேண்டுமென்றுமால்வணங்கிவேண்ட
விறப்பகலுமையோர்பாகன் * வேதவாகமபுராணப்
பறப்பினைநறுநீர்செய்யமற்றதுபரவியாங்குச்
சிறப்புறுமுகில்பெய்வெள்ளமெங்கணுஞ்செறிந்ததம்மா. (௨௨)

உரவர்யவரையளாவியொரீஇநறுமுல்லைபுக்கு
வரமேயபண்புமேவியஃதொரீஇமருதம்புக்கு
விரவேயப்பயின்றுபின்னர்நெய்தலில்விராயவெள்ளம்
பரகாயப்பிரவேசஞ்செய்பவர்திறங்காட்டிற்றன்றே. (௨௩)

வரையுறுகிளர்ச்சிநோக்கமைநாகமனுப்பப்பட்ட
புரையறுநீலப்பாறைபொருக்கெனக்கீழ்ப்படிந்தாங்
குரைமுகில்பொழிந்தவெள்ளமொய்யெனப்பரத்தலோடும்
விரையவங்குரித்தவெங்குமிளிர்பசும்புற்களாதி. (௨௪)

கோடிமற்றெனைவருத்துங்கொடுவேனில்வெப்பந்தீர்ந்தே
ஆடிமற்றுடம்புதண்ணென்றாய்நகப்பசந்தேனற்றா
னீடிநீவருந்தல்வேண்டாநிகழ்கருங்கொண்டாலென்று
கூடியமுகிலைத்தேற்றுங்கோளுமாம்பசந்ததோற்றம். (௨௫)

---

* வேதாகமபுராணங்கள் ஓர் கற்பத்திற் பருவதரூபமாய் நிற்கத்திருமால் வேண்டுகோளாற் சிவபெருமான் அதனை நீராக்கித்தரவது வேகாவிரியாகவந்ததென்பது.

விண்ணுமுன்விளர்ப்புமேவிவிரிகடறருநீருண்டு
கண்ணுமொண்பசப்புப்பெற்றுக்கதித்ததுவேனிலாலே
மண்ணுமுன்விளர்ப்புமேவிமழைபொழிநன்னீருண்டாங்
கெண்ணுமொண்பசப்புப்பெற்றதுணலறிற்பசுமையின்றே. (உசு)

பலசமயத்தின்கண்ணும்பயினர்செய்வணக்கமெல்லாம்
பலதலையணிமாதேவன்பாலேசென்றுறுதல்போலப்
பலநலநிலத்தின்கண்ணும்பசுமுகில்பொழிநீரெல்லாம்
பலபிரிவுடைக்காவேரிப்பாலேசென்றுற்றதம்மா. (உஎ)

ஒருங்குபகாரமாவாரொழுங்குபட்டியல்வரல்லார்
மருங்குறமுறித்துச்செல்வாரொன்பதுவயக்கிறுற்போ
லொருங்குபகாரமாயேயுற்றகாவேரிவெள்ள
மருங்குறமுறித்தலின்றியிடையருவொழுக்கின்மன்னும். (உஅ)

பல்வகைநாட்டினுள்ளும்பசுமுகில்பொழியுநன்னீ
ரொல்வகையமையவாங்காங்குறுமிதென்சிறப்பென்சொல்கேன்
புல்வளப்பெருநாட்டுள்ளும்பொழிந்தநீரிங்குமேவி
வெல்வளந்தழையாநிற்கமிகப்பயன்றருமெஞ்ஞான்றும். (உகூ)

குறிஞ்சி.

பிறைவளர்ந்தபுசோணுட்டின்மதிதொறும்பிறங்கப்பெய்யு
மழைவளம்புகல்வார்யாவர்வகுக்குமைந்திணையினுள்ளுங்
குறைவளமேன்மேலுண்டாங்கூடலின்புடைத்தாய்மற்றும்
விழைவளம்படுகுறிஞ்சிவளஞ்சிலவிளம்பலுற்றும். (௩0)

வேறு.

காந்துவெந்தறுகட்சதகோடிகைக்கழலா
தேந்துவேந்துவெம்பகைதவிர்த்திறைஞ்சுதலெண்ணி
நாந்துதித்திடுதம்புடைக்குமரவேணயந்து
போந்துதங்கிடத்தவம்புரிந்தனபலபொருப்பும். (௩க)

வள்ளியாரொடுங்குமரவேண்மகிழ்ந்தமர்தலினு
லெள்ளிவச்சிரமெடுத்திடுவெம்பகையிரியத்
தள்ளிமுந்துபுமகட்கொடுத்தனுமுளஞ்சமைய
வுள்ளிவேந்தருழ்ந்திறைஞ்சிடவோங்குவவோங்கல். (௩உ)

இறைபகைத்திறமிரித்ததையெண்ணுபுநாமுங்
குறையினட்புறலாமெனக்கருதியகொண்மூ
நறைமலர்க்கடம்பணியலானூர்திகணயந்து
சிறைவிரித்தகவும்படிசென்றுசென்றியங்கும். (௩௩)

முன்னம்வள்ளியார்கொடுத்திடமுருகனேற்றயின்ற
தின்னதாதலின்விருப்பம்வேறிலையெனவெண்ணி

யன்னவற்குணவாம்வகையிறவுளரமைப்பார்
மன்னமால்வரைச்சாரலிற்செந்தினைவளமே. (௩௪)

இதையுள்வேடுவராக்குகவலைகுரலினச்
சிதைவிலாதுகைத்தட்டையோடாவயிற்சென்று
குதைவரிச்சிலைநுதலுடைக்கொடிச்சியர்காப்பார்
முதையின்மற்றதிற்கலக்குமாறீட்டுமொய்தேனீ. (௩௫)

முந்தியானையைவேட்டவன்முயங்கிடமரி
னந்தியாநயப்பெய்தலாமென்றுளநயந்து
தந்தியாவையுமாவயிற்செறிவனதவாம
லுந்தியாரருவியிற்றுளைவனபிடியோடும். (௩௬)

தடுப்பருந்திறல்வேட்டுவர்மார்பிடைத்தைத்து
வடுப்படுத்துவமால்கரிக்கோடுமாத்திரமோ
வுடுப்புமென்றளிராக்கொளுங்கொடிச்சியருரத்தி
லெடுப்புவாய்ந்திணைதபுத்தெழுமிணைத்தடங்கோடும். (௩௭)

புன்மைசால்கிழங்ககழ்ந்திடும்போதெதிர்போது
மன்மைதீர்மணிசுனையிரும்பாலகற்றிடுவார்
வன்மைமேவியதாயினுமாண்பறியாரோன்
மென்மைமேவிழிபொருளினுமிழிந்ததாய்விடுமே. (௩௮)

முறிவிராயபைம்பொழிலிற்செம்முழுமணிநோக்கிச்
செறிவதீயெனக்குடாவடிவேறுகான்சென்று
பிறிவிலாவிரவழலெனப்பிறங்கவுள்வெதும்பு
மறிவிலாரொங்குச்சாரினுஞ்சுகமடையாரால். (௩௯)

அதிர்தரும்படியானைகண்முழங்கிடுந்தோறு
மெதிர்முழங்குவமால்வரைமாறுற்றதென்று
முதிர்சினங்கொடுபாய்தொறுமூரிவன்கோட்டி
னுதிர்தருந்தரளங்களாங்கிருளறவோட்டும். (௪0)

அழுமழக்கொள்ப்படுக்கைவீட்ரனளித்தமையாற்
செழுமகட்புணர்முருகவேளுறையுளைச்சேர்ந்து
கழுமணிப்படப்பாயன்மால்கண்ணுறங்குதலின்
முழுமலர்ச்செழுந்தோன்றிப்பாலுறங்குவமுகிலே. (௪௧)

தோன்றிதீயெனவதன்மருங்கொருபுடைதொக்க
வீான்றியங்கிமெய்கருகியதெனவுளமதித்துத்
தேன்றிரிந்துகொள்சிறுகுரங்கருவிநீரிறைப்ப
வேன்றியங்கிமற்றதுமுழக்கெடுப்பவோட்டெடுக்கும். (௪௨)

அன்னைபோல்பவனன்னையாயமர்தருசிலம்பு
முன்னைநாளுணச்சாரமூட்டியமுழுவரையும்

பொன்னைநேரருள்பெறவெறும்பருச்சித்தபொருப்புங்
கொன்னைமேவுறப்பெருந்தவஞ்செய்ததுகுறிஞ்சி. (சங)

காகமேவுறிற்கடுந்தழல்வீசிடுபெறம்பு
மோகமாகியீமுயங்கிடவருள்பொழிககமுஞ்
சோகந்திரநாவனையர்தமுடியடிச்சூட்டு
மேகநாயகர்வனையுங்கொண்டதற்கெவன்வேண்டும். (சச)

முல்லை.

தலையும்பாதமுமயனரிக்கரியவர்தருசேய்
நிலையுமால்வரைப்பெருவளநிகழ்த்துதற்கர்மோ
விலையும்பூவுமார்குழன்மடவார்தனித்திருக்குங்
கலையுமானுஞ்சேர்முல்லையின்வளஞ்சிலகரைவாம். (சரு)

வனவிருப்பனென்பதற்குமுப்பொருள்கொளமாயோன்
றினவிருப்பொடுமாண்டுபன்னுன்குகான்பிரிந்தான்
புனவிருப்பருப்பைந்துழாய்மாலிகைபூண்டான்
கனவிருப்புறவனமெனும்யாவையுங்காப்பான். (சசு)

அண்டரோத்திடக்கிடப்பவனெனலன்றியிருப்பா
னண்டரோத்திடவென்பதற்கிருபொருளமைய
வண்டரோத்திடுவைகுந்தத்தமர்வதல்லாம
லண்டரோத்திடவனத்தினுந்தெய்வமாயமர்வான். (சஎ)

மருவுதங்குலக்கலப்புறுநன்றியைமதித்து
வெருவுநேமியான்மேவுகான்மேவுவர்தொறுவர்
பொருவுதீர்தருதிருமகள்பொற்பினும்பொலியுந்
திருவமாதரார்போகமுன்னனிசெறித்துவந்து. (சஅ)

முப்பதிற்றிரண்டிலக்கயோசனைத்துணைமுயங்கு
மப்பயக்கடலுள்ளவன்கட்டுப்பட்டடிபட்
டிப்பர்தங்குடிற்பான்முதற்கவர்ந்தமையெண்ணி
லொப்பிலாய்ச்சியரழலிடப்படுஞ்சுவையுணர்ந்தே. (சகூ)

கரியமாயவன்றன்னிடங்கர்தலித்தமர்ந்து
பிரியமேவுறக்கவர்தன்மற்றிதுவெனப்பேணித்
தெரியவெங்கணுநவநீதந்திரட்டிவைத்தென்ன
வரியபைந்தழைக்கானகம்பரப்புவவாம்பி. (ருo)

பாயமேகலைச்சிற்றிடைப்பெருமுலைப்பணைத்தோ
ளாயமாதர்மற்றெண்ணிலரவரொலாந்தழுவி
நேயமேவமால்பல்லுருக்கொண்டுநின்றுங்கு
மேயகானகத்தளவறவிராயின்பூவை. (ருக)

அளவில்பூவைகள்ளவில்கண்ணர்களிருப்பமையு
மளவிலாத்தவமுனிபுரிதீக்கையாலாற்று

மளவில்பூசனைக்கெதிர்நிற்குமங்கணர்பொருவ
வளவில்பூந்துணர்நிரம்பியகொன்றைகளலங்கும், (௫௨)

நாறுகொன்றையுமற்றதனெருபுடைநயப்பக்
கூறுபூவையும்பொலிதரநிழல்பெறல்குறித்த
வேறுதன்றலைவனைத்தூநாவெறிந்துநின்றிடுதல்
பேறுகண்ணற்குச்சேவுமாதரன்றரல்பிணையும். (௫௩)

கன்றையுள்ளியகறவைசோர்பாலொடுட்கனியக்
கொன்றைவேய்ங்குழல்கோவலருதுவர்மாலை
மன்றையாட்டரங்காக்கியபிரான்மனங்கனிய
வொன்றைமேவுமாறுயருருதியதொப்ப. (௫௪)

சூதமுல்லையின்மதுக்கொளுந்தூப்பண்புகன்று
மாதர்வெண்டயிருடையொலிமாய்ப்ப * கைக்கன்று
போதவெங்கணும்பயில்வபூங்கோவிளங்கன்று
காதரந்தபுமந்நிலத்தஞ்சியகன்று. (௫௫)

துள்ளுமோர்புறமுயலினம்வற்றினுந்துடித்துத்
துள்ளுநவ்வியின்கன்றவற்றினுந்துடிதுடித்துத்
துள்ளுமானிளங்கன்றுகோவலர்மழத்துடித்துத்
துள்ளுமுல்லையினெற்றைக்குமிவ்வளந்தொலையா. (௫௬)

பரவுசாமை o கோத்திரவமாட்கம்பலபயறு
விரவுசொன்னன்மற்றவரையாதியபலவேறு
முரவுமேவுபல்பொலிபொலியாகிமிக்குறுவ
கரவுதீர்வரைபலகுடிபுகுந்தெனக்கானம். (௫௭)

மன்னுமாய்க்குலநாயனுருதித்தமங்கலமும்
பன்னுமேன்மைசால்பரம்பரன்திருநெடுங்களமுந்
துன்னுசானவிகண்டசோளீச்சரப்பதியு
மின்னுமுல்லையினுளவெனிற்பிறிதெவன்வேண்டும். (௫௮)

வெள்ளியங்கிரிமேவினேன்விழைதிருக்காட்டுப்
பள்ளியம்மையார்நீழலினுறைபவன்பதியு
மெள்ளிமாமலமிரித்திடுநியமமும்பிறவும்
புள்ளிமான்வனத்தனவெனிற்புகழ்பெரும்புகழே. (௫௯)

மருதம்.

நீடல்வாய்வணவளத்தெவன்சொற்றனனிகழு
மாடல்பாட்லோடமர்தருவேந்தனேயளிக்கக்
கூடலாவதற்கேதுவாய்நாடொறுங்குலவு
மூடன்மேவியமருதத்தின்வளஞ்சிலவுரைப்பாம். (௬o)

---

* கைக்கன்று-கைவளை. o கோத்திரவம்-வரகு.

வேறு.

உற்றபெருவன்ங்காக்குமுபேந்திரனாகியவிளவற்
பற்றமையுங்க்ருத்துடையபாகசாதனனடுத்த
செற்றவளப்பெருமருதந்தெய்வமாய்ப்புரப்பானென்
றற்றமின்முன்னுறவுமதித்தவாய்ப்பெருகுங்காவேரி. (சுக)

பெருவருவாயுடையார்கள்பேணுமலிருக்கவுமூழ்
தருவருவாய்பலவுண்டாற்றவாப்பெருக்கின்மிகச்சிறந்த
பொருவருமாநதியாயபொன்னியினும்பிரவதிமுற்
பருவருமாறெழுநதிகள்பலவந்துகூடிடுமால். (சுஉ)

அறிவுடையபெருஞ்செல்வரமைதருநற்பொருளனைத்துஞ்
செறிவுடையபயன்படுமாசெலுத்துவார்பல்வழியு
நெறியுடையகாவேரிநெடுநீத்தமத்தனையுங்
குறியுடையபன்மதகுங்கொள்ளைகொளச்செலுத்திடுமோ. (சுங)

முனுமதகுதொறும்புகுந்தமுழுப்புனல்பல்செறுக்கடொறுங்
கனுமெனச்சென்றுறப்பாய்ந்தக்கழனியினும்பிளவனைத்தும்
பதுமவறிகுறியுடைத்தன்பிளவுவிளைதரப்பாறு
மதுவெனப்பாற்றுபுகுழைத்ததரனடியார்மனம்பொருவ. (சுச)

பணைதொறுநன்னீர்புகுதப்பழையர்மனைதொறும்புகுந்து
பிணைமதுத்தம்வாய்ப்புகுத்திப்பெருங்களமர்நறுங்குல்லை
யிணைபுயமாலொருபிறப்பினெடுத்தபடைக்கல்லாம
லணையுமகள்குழையாளென்றுணர்ந்தலங்கைக்கொண்டணைந்தார். (சுரு)

புல்லியபுற்கொலையெனினும்பொருவரியகொலைக்காலன்
வல்லியலூர்திக்குறுத்தன்மாண்பெனவெங்கடாப்பியலிற்
சொல்லியவானுகங்கிடத்திச்சுடரோர்க்கானடுப்பொருத்தி
யெல்லியலுமேழிநுனியிடக்கைமருவுறப்பற்றி. (சுசு)

ஒருகுறுமுட்கோல்வலக்கையுறவாங்கிக்கடாத்தெழித்து
மருவுகுணதிசைநின்றுமேற்றிசைபோக்குபுமறித்தும்
பொருவில்வடதிசைநின்றுந்தென்றிசைபோக்குபுமறித்தும்
வெருவில்வலிக்களமரொரு o மிறைக்கவிப்போக்கெனவுழுதார். (சுஎ)

எண்ணில்பலவிளாக்கோலியியைந்துபடைச்சானெருங்கக்
கண்ணிலலமுகந்தேயக்கரைந்துபழந்தாண்மடிய
வுண்ணிலவுபுன்மூலமூழ்த்துமாய்தரமுயன்று
மண்ணிலுழுதனரகருதேய்த்தெனவண்சேறுசெய்தார். (சுஅ)

வரம்புகெடலாகாமைமதித்துழவர்கங்கரிந்து
நிரம்புவிதமேலுயர்த்திநிலத்தவன்மேடொழித்திடுவான்

---

o மிறைக்கவி-சித்திரகவி-அதுசுழிகுளம்.

கரம்புதவிர்கழனியளாய்க்காலூழ்த்தறவிரநெடும்
பரம்புமிசையிவர்ந்திருமாந்தூருவர்பல்களமரெலாம். (௬௯)

பொருவரியவளமருதப்புகழினொடுபிரதாப
மருவவெளிப்படுத்துநர்போல்வயங்கியவெண்ணென்முளையு
மொருவருஞ்செந்நென்முளையுமொருங்கெடுத்திந்திரற்றொழுது
திருவமிகக்கழனிதொறும்வித்தினார்செயற்களமர். (௭௰)

கலங்கனீர்தெளிதருதல்கண்டுமறுநாட்கவிழ்த்துத்
துலங்கமாணவரறிவின்றுணைதேர்ந்துநூல்பொருத்து
மிலங்குமாசிரியனெனவிளமுளையினளவறிந்தே
யலங்குநீர்பாய்த்திடுதோறவாய்க்கொடுக்குங்காவேரி. (௭௧)

அடங்காதபுனற்பொன்னியகலியகொள்ளிடமண்ணி
முடங்காவிண்ணுறரிசின்முள்ளிவாய்வடவாறு
தடங்காவொண்பாம்பணிமுற்சார்தருபன்னதியாதன்
மடங்காதுபல்லுயிரும்வண்மையினோம்புதற்பொருட்டே. (௭௨)

உழுநரிரவும்பகலுமொழியாதுபாய்த்துதலாற்
செழுவியவின்புனலுண்டுசெறிமேகம்பசந்ததுபோற்
கொழுமுளைகள்விளர்ப்பொருவிக்குலாய்ப்பசந்துவளர்ந்தனவாற்
பழுதகலும்பருவமெனப்பறித்துநடுவான்முயன்றார். (௭௩)

பருவமுறுநாறனைத்தும்பறித்தமையக்குணின்மோதி
மருவமுடிசெய்தெடுத்துவாணிகரோருழிப்பொருளைத்
திருவமிகப்பல்லிடத்துஞ்செறிப்பதுபோற்கழனியெலாம்
வெருவமையாவகையுய்த்துமேன்மேலுநடன்முயன்றார். (௭௪)

நட்டமுதலன்பமையார்நம்பெருமானுலயத்துச்
o சட்டவிராய்த்தாழ்ந்தெழல்போற்சற்றேதாழ்ந்தெழுந்தபயி
ருட்டழையவேரூன்றியொருங்குதழைந்தெழுகாலை
முட்டவும்வெங்களையெழுந்துமொய்த்தனவண்கழனியெலாம். (௭௫)

விளைநலஞ்செய்கல்விதகைமிடிபிணிகாமாதியெனத்
தளைகடொறும்பயிராக்கந்தபத்தபுத்துமேலெழுந்த
களைகளையும்பருவமிதுவெனக்களமர்கழறுதலு
மளைமயில்களெனப்புகுந்தாராற்றுக்காலாட்டியரே. (௭௬)

காமர்முலைபோலரும்பிக்கவின்றமுகம்போன்மலர்ந்த
தாமரைபற்றினர்களைவார்தைத்ததுமுட்கரத்தென்பார்
நாமவலியிலவெனினுநடுங்கவடர்த்திடுகாலைத்
தாமமையப்புரிதருதறகைப்பரோவெனப்புகல்வார். (௭௭)

---

o சட்ட-செப்பமென்னும்பொருளையுணர்த்தி நிற்பதோரிடைச்சொல்.

ஆம்பன்முதலழித்திடுவாராம்பன்முதலழிப்பதினுந்
தேம்புதுயராம்வனசச்சிறுமுதலுங்கடலென்பா
ராம்பல்பலவற்றினுமோர்புண்டரிகமதிகமெனுந்
தேம்புதலிலாவுணர்ச்சிதேக்கினாரலர்போலும். (எ௮)

மெல்லியலாளெனுமொருபேர்விழைந்தெவருஞ்சொலப்பட்டார்
வல்லியபுண்டரிசமுமாம்பலுமொருங்குவதைத்திடுவார்
சொல்லியமாலயன்முதலோர்தொலைதரத்தொல்லோனட்ட
புல்லியவோர்துரும்புகொலோபோந்தவிவரதுதெளியேம். (எ௯)

இறுவதுசத்தியமெனினுமேறூர்வார்தாளடைந்து
பெறுவதுபெறுதிழிந்தார்மிதிப்பதுபெற்றேமிதுவோ
வுறுவ!துவென்றம்பலுந்தாமரையுமோவிடுவதுபோற்
செறுவதின்மற்றம்மலரைத்திராவண்டோவிடுமால். (௮௦)

பணையுடலிற்பயிருயிரின்பசுங்கதிராமனந்தபுக்கும்
பிணைபொறியைந்துங்களையும்பெற்றியிற்சைவலங்குவளை
யணைபதுமங்கொடிவள்ளையனிச்சமடியறக்களைந்தார்
கணையிகலும்விழியாற்றுக்காலாட்டிமார்பலரும். (௮௧)

கன்முதலோர்நான்கிடத்துங்கலவறல்பாய்ந்தினிதோம்பு
றென்முதலுக்கழிவுசெயனினைந்துசூழ்தரமுளைத்த
புன்முதல்யாவையுங்களைந்தார்பொருகயற்கண்மடமாதர்
* சொன்முதனித்தியமென்றுதுணிந்துணர்தலெளிதேயோ. (௮௨)

இந்தவிதங்களையனைத்துமெறிந்துகடைசியரகன்றார்
சந்தமிகுபயிரெல்லாந்தளைதோறுந்தளையாய
பந்தமறவுயிரொளியேபாரிப்பதெனப்பசுமை
நந்தவொளிபடைத்தெழுந்தநானிலத்தியாவருமகிழ. (௮௩)

ஊறுதவிர்பயிரனைத்துமொருங்குகருக்கொண்டீன்ற
மாறுபடுமதியோன்றன்மலர்களைந்தவிவற்றெடுப்பின்
வீறுதபுத்திடுவலெனவிழைகிரணநனிபரப்பி
யேறுபரஞ்செயமுனங்கொளெடுப்பொழிந்துதாழ்ந்தனவே. (௮௪)

மாதர்முலைபோலிளமைமருவவெடுப்பாய்நிமிர்ந்து
போதமுதிர்தருபொழுதுகீழிறங்கிப்போய்த்தாழ்ந்த
மேதகவினவைமுதிராப்பொழுதுவிளைத்திடுமின்ப
மாதரவினிவைமுதிர்ந்தபொழுதினுக்கிடுமின்பம். (௮௫)

கதிர்கமலங்கட்டபகைகணித்துவெயினனிபரப்பி
முதிர்வுமிகப்புரிந்தவனிமுயங்கிடச்செய்ததுதெரிந்து
பிதிர்தலிலாவலிமள்ளர்பிறங்குகுயங்கையேந்தி
யதிரவறுத்தரிசெய்தர்ர்கதிராரியாகுவதரிதோ. (௮௬)

---

* சொன்முதல்-மாயை.

அரியெனும்பேர்க்கிளையயவிடைக்கட்டமைத்துக்களமடைந்து
பெரியவனாயினுமுயரப்போர்புரிந்தார்பெருமள்ளர்
தெரியமுனமாக்கியவேசிதைத்தல்வழக்காகுமெனப்
பரியகடாப்பிணைத்துநிலம்பரப்பிமிதித்திடவிட்டார். (௮௭)

முன்னியவிப்பியினின்றுமுத்தெடுத்துக்கொள்வதெனத்
துன்னியவைகளைந்தகற்றிச்சொற்றூற்றிக்குவித்தளந்து
மன்னியவாறினிலொன்றுமன்கவரவறமாதி
பன்னியவிந்தெஞ்சியவைபரப்புவர்தம்மனைக்கொடுபோய். (௮௮)

இந்தவிதஞ்செந்நெல்வளமீட்டுநெருங்கரும்புடைத்துக்
கந்தமிகுகட்டிவளங்கவருநருங்கனியாதி
முந்தவளமபொழில்வளங்கண்முகக்குநருமாய்த்துவன்றிச்
சந்தமிகுகுடிபலவுந்தழைப்பனதண்ணடைதொறும். (௮௯)

நெய்தல்.

ஆரூர்வாஞ்சியம்வீழியாவடுதண்டுறைகுடந்தைப்
பேரூர்மாயூரமுதற்பிறங்குதலம்பலபெற்ற
நீரூர்தண்மருதவளநிகழ்த்துநராரிரங்கல்வளச்
சீரூர்தண்கழிநெய்தல்வளஞ்சிறிதுசெப்புவாம். (௯௦)

வேறு.

எல்லாச்சுவையுந்தனைவிரும்பவிருக்குஞ்சுவையும்பலநதியி
னெல்லப்புனலுந்தனைவிரும்பவிருக்கும்புனலுமுடைமையினு
லெல்லாத்திணையுந்தனைவிரும்பவிருக்குந்திணையீதென்றளிப்பா
னெல்லாப்பொருளுங்குளிர்ந்துபதமியலவியற்றும்புனற்கிறைவன். (௯௧)

மீனங்கவர்தலுடல்பிளத்தல்விரைந்துப்பிடுதலுணக்கிடலத்
தானங்கலவுபுள்ளோப்பல்விற்றலிலவயிற்சற்றேனு
மூனங்கலவாமையிற்புதல்வியுமையாயினளையனுமணந்தான்
வானம்பரவவெனச்செருக்குமாண்பார்பரதர்பலர்வாழ்வார் (௯௨)

வலையர்குரம்பையிடுபோந்தின்மடல்காற்றறையுண்டெழாவண்ணம்
விலையில்பவளக்கொடிகள்பலமேலாற்படர்ந்துநெருங்குவன
வலைகளொலித்தோர்காலெழினுமகம்புகாதுதடுப்பமுன்றிற்
றலைநின்றிடுவனநிநெருங்கிநெருங்கக்காய்க்குந்தடந்தாலம். (௯௩)

உயிரிற்கலந்துமுயிர்செய்வினைதனக்கின்றாகவுயிர்க்கொழிக்குஞ்
செயிரிற்றவிர்ந்தபெருமானிற்றிளாசார்களாதங்கினுமாங்குப்
பயிலுற்றிடுமீனுணங்கன்மணந்தாம்பற்றுமலதற்கொழிக்கு
மயிலுற்றமைந்தாலெனமுரண்முள்ளமைந்தமடற்கேதகைபலவும். (௯௪)

உப்புவிலக்கியப்புமட்டேயுதவுமுகிலின்சுவைபொருத்த
வப்புவிலக்கியுப்புமட்டேயமைத்துக்கொடுப்பருமணாது
செப்புபுனலிற்படிக்கலக்கும்பன்றூள்கழிந்துசேர்ந்தாலும்
புப்புகலப்பிற்குறைவர்கொலோபண்டைநட்பின்பயனுணர்வார். (௯௫)

சூழுமணிகொள்வலைஞர்சிறுதூரமியங்கப்படவியக்கி
யாழுங்கடலிற்கவர்தருமீனனைத்துமனையபடவேற்றி
வாழுங்களிப்பின்மீடருங்கான்மற்றைப்படவுபொலிகாட்சி
தாழுந்தாராகணமியக்குந்தடவிமானம்பலபோலும். (கூசு)

வெள்ளமருவுமோட்டாமைமேலோர்நோன்பிற்பெறுமடக்கங்
கொள்ளுமமைதியாலினைதேர்குருகுகவராவிதம்பயிலு
முள்ளாபலமீன்களுங்கீழோருரனிலாமையாலியற்று
துள்ளல்புரிந்துமாயுமெனிற்றுள்ளல்கலிக்கலால்யார்க்காம். (கூஎ)

இந்தக்கரையினுள்ளபொருளெல்லாங்கவர்ந்துசெலுநாவா
யந்தக்கரையிற்கழித்தவணவனைத்தும்வாரிக்கொடுவந்து
முந்தப்பறம்புபோலவிவண்முயங்கக்குவிக்குமுரைத்தமொழி
யுந்தக்கொடுபோய்ப்புகன்றுவேறுரைமீண்டுரைக்குந்தூதரொன. (கூஅ)

ஒருகாலுயர்ந்தபொருளேற்றுமொருகாலிழிந்தபொருளேற்று
மொருகாலிரண்டுமல்லாதவேற்றுமுழிதந்திடுநாவா
யொருகாலுயர்ந்தபோகமுமற்றொருகாலிழிந்தபோகமும்வே
றொருகாலிரண்டுமல்லதுமேற்றுழிதந்திடுமாருயிரொக்கும். (கூகூ)

தெரியமூடைபறிக்குமொலிசெழுநாவாயிற்செறிக்குமொலி
விரியவலைகள்வீசுமொலிவிடாதுபடுமீனிழுக்குமொலி
யுரியபலமீன்பிளக்குமொலியுப்பிட்டவற்றையுணக்குமொலி
யிரியவருபுள்ளோப்புமொலியேமூமேழுகடலொலியே. (க00)

ஓடுகலங்கடேராகவுற்றமகரங்கயமாக
நீடுதிரைகள்பரியாகநெடுமீன்கொல்வோராளாகக்
கூடுமயிலைவாளாகக்குறியாகவப்பார்பொருநெய்த
ஞடுமிதனுலரசரொலாநயந்தாங்கமர்த்தன்மேற்கொண்டார். (க0க)

முத்தமெனமீன்றருயுதிர்புன்னைகத்தரும்புமுகந்திடுவார்
சித்தமுவக்குமரும்பெனவொண்முத்தமனைத்துஞ்செறித்திடுவார்
பித்தமதியென்றிகழ்வதலவுயர்வுதாழ்வுபெற்றமைந்த
தத்தம்வினையாற்படுபயன்மற்றெவராலளக்கத்தக்கதே. (க0உ)

கூறுமாமைப்பரத்தியர்வாய்குமுதநாறுமொண்முறுவ
னாறுதளவமுகைநாறுமைம்பானறுங்கேதகைநாறு
மூறுமதுச்சண்பகநாறுமுடம்பூமுழுதுமுணங்கன்மீன்
வேறுதலைமேனாறுமெனில்வினையின்றிறனோவியப்பிற்றே. (க0ங)

* தாலத்தமைந்தசாதி ೦ எலாந்தங்கள்சாதியெனக்கவருஞ்
சீலத்தமைந்தநுளையர்கனச்சிலைதாண்மிதித்துக்கடற்குளித்துக்
கோலத்தமைந்தபேழ்வாய்ப்பல்லிப்பிவாரிக்கொடுவருவார்
ஞாலத்தமைந்தகிணற்றகத்தகவருங்கருவிநயம்போன்றார். (க0ச)

* தாலம்-பனை. ೦ சாதி-கள்.

சுழியுங்கழியிற்பொலிநீலத்தோட்டுமலரிற்சுரும்புழக்க
வழியுஞ்சுவைத்தேன்மதுப்பாய்ந்துவாரிப்புனலினுவர்மாற்றும்
பொழியுமுகிலப்போதெடுத்துப்புயலேமாற்றுமெனப்புகறன்
மொழியும்பெருமான்முடிப்பதனையேனோர்முடிப்பாரெனல்போலும். ()

பொருளிற்பெரியராயிருந்தும்பயன்படாரெப்போதினுமப்
பொருளிற்சிறியராயிருந்தும்படுவார்பயனெப்போதுமென
றெருளிற்பிறிதுவேண்டாதுதெரிக்குமுவர்நீர்த்தடங்கடலுந்
தெருளிற்றவிராச்சுவைநறுநீர்படுசிற்றூறற்கேணியுமே. (கoசு)

வீசுவலையிலகப்படுதலின்றிவெளிப்பட்டிடுமீனைப்
பேசுபுகழ்சாலதிபத்தப்பெருமான்றிருக்கையால்விடுத்த
மாசுதவிர்ந்தமீனேநம்வலையும்பாசவலையுமறத்
தேசுமலிந்ததெனத்திமிலர்சிந்தித்துருகிநின்றிடுவார். (கoஎ)

மாலுமயனுங்காணரியவள்ளற்பிரானைநள்ளிருளிற்
சாலும்பரவையார்மனைக்குத்தனித்தூதேகமுனம்விடுத்த
வாலும்புகழ்சாலாரூரரடியேனென்னுமதிபத்தர்
கோலுங்குலத்தார்பயிலுவதங்கிலமேற்கூறலெவனினியே. (கoஅ)

முல்லைவாயில்சாய்க்காடுமுதுபல்லவனீச்சரமறைக்கா
டெல்லையில்லானகத்தியான்பள்ளியியலுந்தருமபுரந்
தொல்லையமையும்வேட்டகுடிதூயதாயதெளிச்சேரி
யல்லையனுக்குமினும்பலகொண்டமைந்தநெய்தற்றவஞ்சிறிதோ. (கoகூ)

பாலை.

மன்னுமிராசதானியெனவழங்குமொருமாப்பெயர்பூண்டு
மின்னுநாகைக்காரோணம்விளங்குதன்பாலுறக்கொண்ட
முன்னுநெய்தற்பெருவளத்தென்மொழிந்தாமுடன்போக்கொழியாத
பன்னுசிறப்பினுறுபாலைநிலத்துவளத்துஞ்சிலபகர்வாம். (கக0)

காலைமாலையிரண்டொழியக்கடுவேனிலினண்பகலாய
வேலையுதித்துக்காரணத்தாம்வெம்மையுறுகாரியமரிய
பாலைதெரித்தேயமருநடுப்பகலிற்பிறத்தல்பழுதாகா
மாலையுணர்ந்துமறவரவண்வாழ்வார்கொற்றியருள்பெறலால். (ககக)

சொல்லச்செயுமோர்நானிலமுந்தொக்கசுரமாதலின்மறவர்
வில்லைக்குனித்தாறலைத்தெல்லாவளமுங்கவர்ந்துமிசைந்திடுவார்
சில்லைப்பிறரதுணிலடைவதீயவினையேயென்றிகந்து
கல்லைப்புசித்துவாழ்வடவருக்கருதுமொருமாமுனிவரன்போல். (ககஉ)

செழும்பாடலத்தும்மலர்பொழியுஞ்செந்தேன்வறுங்கூவலைநிறைக்கும்
விழுந்தாமலகக்கனியதனுள்வேண்டுபொழுதெலாமுதவு
மெழுந்தார்தரமேற்பழுத்திடுபேரீந்தும்தில்வீழ்ந்தற்றுருகுங்
கொழுந்தார்கோங்கம்பஞ்சுருக்குங்கொழுநர்த்தொடர்வார்பதங்களிக்க.

முருங்கைமலராகியநீறுமுற்றப்புனைந்துசுரும்பாய
வொருங்குமிளிர்கண்மணியணிந்துகாயாஞ்சடையுமுறச்சுமந்து
நெருங்குவெயிலினிற்றலினுநெடியதவமென்றுறுபயனு
மருங்குவேம்புபலபழுத்துச்சிவலிங்கங்கள்வழங்கிடுமே. (௧௧௪)

திணைமயக்கம்.

வரையாதியநானிலத்தாரும்வந்துவந்துகொற்றியடி
விரையார்மலர்தூய்த்தொழுந்தோறும்விலக்காதவர்தோண்மாலையிடு
முரையார்வாகைபலதழுவவுற்றசுரச்சீரொன்னுரைத்தாங்
கரையாவளஞ்சேர்நிலநான்குங்கலந்தவளமுஞ்சிறிதுரைப்பாம். (௧௧௫)

வரையிற்கரியும்வனப்புலியுமருவிமறையோர்சிலதினத்துப்
புரையிற்றவிர்ந்ததமைப்பிரிக்கும்பொருமறீரக்கலந்துவக்கும்
விரையிற்பொலியுங்கொடிமுல்லைவேங்கைக்கிளையிற்றுய்ப்படர்ந்து
தரையிற்சிறகர்வண்டுவீழ்ந்தலைத்தறவிர்ந்துவயங்கிடுமே. (௧௧௬)

மாலைமௌவன்மதுவருந்திவனத்தாமரைக்கண்விடியல்புகு
மாலைவண்டுபரத்தையரிலகன்றுமைந்தர்மனைக்கிழத்தி
மாலையிலத்துப்புகல்காட்டும்வனத்தான்பொழிபானிலவென்று
மாலைமுளரியிதழ்மூடல்வாயிற்புதவுமூடல்பொரும். (௧௧௭)

வயலிற்கயல்வாரிதிமடுத்துச்சிற்றின்பத்தின்வதிதருவோர்
பெயர்தற்கரியபேரின்பம்பெற்றுத்திளைத்தாற்போன்றுவக்கு
முயர்விற்பொலிகேதகைமலர்நீரொண்டாமரையின்மிசைவீழ்ந்து
மயர்விற்றவிருமடியர்சிவபெருமாற்கெடுத்தறனைமாற்றும். (௧௧௮)

தேம்பாடலக்கொம்பிடைஞாழல்செறியும்வண்டுந்தளவளியுங்
காம்பார்வரைக்காந்தட்சுரும்புங்கஞ்சத்தறுகாற்புளுங்குரவத்
தாம்பாண்மிஞிறுமளாயொலிப்பவலங்குபரத்தையொருத்திநலங்
கூம்பாமனத்திற்கொளப்பலருங்கூடிப்பூசல்செயல்பொருவும். (௧௧௯)

இந்தவண்ணம்பெருவளஞ்சார்ந்தெல்லாக்குடியுமெஞ்ஞான்றுந்
தந்தமொழுக்கந்தவறாதுதழுவப்பொலிசோணாட்டுவள
முந்தமொழிவான்பலர்முயன்றுமுற்றமொழிந்தாரலொன்னி
னந்தமுணர்விற்கடங்குவதோநகரவளத்துஞ்சிறிதுரைப்பாம். (௧௨௦)

திருநாட்டுப்படலம் முற்றிற்று.

ஆக படலம்-௨-இ-திருவிருத்தம்-௧௯௩.

## திருநகரப்படலம்.

வந்துவானவர்தொழுதெழவானகரமர்ந்த
விந்துசேகரச்சுந்தரவிடங்கர்தன்னிடத்து
முந்துகாதலின்மர்தராமாதவமுயன்ற
நந்துசீர்துநாகபட்டினத்திருநகரம். (௧)

ஈட்டவல்லதுபல்வகைக்குடிகளுமீட்டி
யூட்டவல்லதுபல்பெரும்போகமுமூட்டிக்
காட்டவல்லதுபரமனைக்காட்டியொண்கயிலை
நாட்டவல்லதுநாகபட்டினத்திருநகரம். (௨)

புன்மைமேயதுசிறிதுமில்லாததுபொருளால்
வன்மைமேயதியாவையும்வாழ்தரத்தாங்கும்
தன்மைமேயதுதயையெனப்படுவதுதவாத
நன்மைமேயதுநாகபட்டினத்திருநகரம். (௩)

தேமபுகின்றவர்வறுமையிற்சிதைகுநர்சிறுமை
யோம்புகின்றவர்பிணியினல்வருந்துநரொழுக்கந்
தாம்புகுந்திடாமனத்தினரிவரிலாத்தனியூர்
நாம்புகழ்ந்திடுநாகபட்டினத்திருநகரம். (௪)

துன்றுவெள்ளநீர்மேலெழுகாலத்துந்தொலையா
தென்றுமுள்ளதாயிருத்தலாலிறையமர்தலினு
லொன்றுபேரொளியாற்கயிலாயமேயொக்கு
நன்றுமேவியநாகபட்டினத்திருநகரம். (௫)

வேறு.

நாகமாநகரமூன்றுளவவற்றுணஞ்சமஞ்சமுதுடையதுமற்
றேகமாம்விண்ணிலிருப்பதுநடுங்கியிரியுநஞ்சுடையதுபிலத்தின்
மோகமாயிருப்பதிதுவிடநோன்மைமுழுவதுமுருங்கிடமுருக்கும்
பாகமாரமுதமுடைத்தெனிலிதற்குப்பகர்ந்தனவுவமையாவனவோ. (௬)

அன்றியுநாகபுரமொருமூன்றுளலங்குறநடுவமர்தலினு
லொன்றியவிதுவேசிறப்புடையதுமற்றுரைத்ததுமுகமனேயென்னி
னன்றியனுன்குமுகமொழிபொதுவேநடுமுகமொழிபெருஞ்சிறப்பே
யென்றியலுணர்ந்தோருரைப்பதுமற்றென்றியம்பிட வேண்டுமென்னுரை
[ப்பீர், (௭)

பின்னருநாகபுரமெனுமூன்றுட்பிறங்குமித்தலத்தினையடைந்தா
ரொன்னருஞ்சாலோகாதியேயடைவாரிழிந்ததுசனவினுங்குறியார்
மன்னருமிரண்டுள்வதிபவரிதன்பால்வந்துவந்திறைஞ்சுவரொன்றுன்
முன்னருமிதனுக்குவமையென்றென்றுமொழிவதெவ்வண்டத்துமின்றே,

மீட்டுமொண்ணாகபுரமெனுமூன்றுள்விரிஞ்சன்மாலிந்நகர்க்கன்றிக்
காட்டுமந்நகரமிரண்டற்குமறந்துகனவினுங்கைகுவித்தறியார்
பாட்டுவண்டுளரும்பொழில்சுலாமிதற்குப்பன்முறைவணங்குவரொன்னி
னாட்டுநற்பிரமலோகம்வைகுந்தநகரினுஞ்சிறந்ததீதொன்றே. (௯)

மற்றுமொண்ணாகபுரமெனுமூன்றுண்மார்க்கண்டர்முதலியமுனிவ
ரொற்றுவெண்டரங்கமெறிந்தெழுகாலையேகுறும்வன்மைமிக்கிருந்துஞ்
சற்றுமவ்விரண்டினடைதரல்கருதார்தவாமலிங்கமர்ந்தனரொன்னிற்
கற்றுமிக்குணர்ந்தீர்நகர்க்குவமைகளாதரினதுவலாலியாதே. (௰)

அருவத்துநீயுநாமுமன்னியமாவதன்றி
யுருவத்துமவ்வாறென்னவோங்குமாத்தலமுமுண்டாற்
பருவத்துமடந்தாய்பூமேற்பசுவன்றிவான்மேற்றங்குந்
திருவத்தோர்பசுவைக்கொண்டுசிருட்டிசெய்தலமுமுண்டால். (கஎ)

உற்றவன்பினர்செய்வேவியொன்றுளநாமைவேவிப்
பொற்றளியாதிகொண்டுபொலிதருதலமுமுண்டா
லற்றமிலன்புவாய்ந்தாரியாவரும்புகலூரென்று
பெற்றவண்சிறப்பினோங்கிப்பிறங்குறுதலமுமுண்டால். (கஅ)

கொடுமைசெய்களிற்றைமாட்டிக்குலவுநீமூர்த்தியின்ற
வடுவறுகளிறுபோற்றிவழிபடுதலமுமுண்டா
னெடுமறையனைத்தும்வெவ்வேறுருக்கொடுகிரம்பப்போற்றப்
படுவரமிதப்பநல்கிப்பதிபெரும்பதியுமுண்டால். (கக)

விடாவடைவடிவுமற்றும்விரும்பிநாமமுதுசெய்து
படாவடையாமலன்பற்புரந்தவான்பதியுமுண்டா
லிடர்தபுதிருவாசப்பேரியன்முனிவரற்காவின்ப
மடர்திருநடனஞ்செய்தவரும்பெருந்தலமுமுண்டால். (சo)

பண்ணியகலைகள்போலப்பகராறுபத்துநான்கு
புண்ணியவாடல்செய்துபொலிதருதலமுமுண்டான்
மண்ணியமணிநேரன்புவாய்ந்தவளொருத்தியாற்ற
வண்ணியகபோலக்கிள்ளோடமர்தருதலமுமுண்டால். (சக)

திருகுகோட்டுதெளுக்குற்றசென்னியும்யானைக்குற்ற
பெருகுதோலுடம்புந்தீர்த்துப்பிறங்கொருதலமுமுண்டா
லுருகுமோர்கௌரிக்காமூவுருவுகொண்டுற்றநாந்தோ
மருகுமோர்கானையாகியமர்தருதலமுமுண்டால். (சஉ)

ஆயிலாரிறும்பூதெய்தாரரிமதர்மழைக்கட்பாவாய்
தாயிலாநமக்குவேயேதாயாகுந்தலமுமுண்டா
ஞெயிலாவொருநமைப்போனுவலருஞ்சிறப்பிற்றுகி
மாயிலாக்குறும்பலாவொன்றமர்வளத்தலமுமுண்டால். (சஙு)

தழுவியசிலையிராமனரக்கனைத்தடிந்தபர்வங்
கழுவியவுவந்துபோற்றுங்காமருதலமுமுண்டால்
வழுவியவரக்கன்கைக்குவராதுமாபலமேயாகிச்
செழுவியநமதுகோசஞ்செறிதருதலமுமுண்டால். (சச)

இவைமுதற்றலமனேகமிக்கயிலாயம்போலு
நவையறுமிவற்றுண்மேலாநாமமர்தானமொன்று
குவைமலர்க்குழலாயஃதுகுறித்தகாரோணமாகுஞ்
செவையுறக்குறிப்போர்க்கெல்லாச்சித்தியுமெளிதினல்கும். (சரு)

நாடுமிக்கயிலையாதிரவின்றபஃறலங்கட்கெல்லாம்
பாடுகாரோணமேன்மைபடைத்ததெத்திறனாலென்னிற்
கூடுபேரண்டமெல்லாங்குலையுநாண்மூர்த்தியாவு
நீடுமத்தலத்தேவந்துநிரம்புதலாலென்றோர்தி. (௪௬)

அத்தலத்திடையுதித்தாரத்தலத்திடைவசித்தா
ரத்தலத்துயிர்விடுத்தாரத்தலத்தாசைவைத்தா
ரத்தலத்தெல்லைசூழ்ந்தாரத்தலத்தலர்தூய்த்தாழ்வா
ரத்தலப்பெருமைதேர்ந்தாரனைவருமுத்தராவார். (௪௭)

கருதினவருணாகைக்காயாரோகணத்தலத்தி
லொருகணம்வசிப்பாரேனுமுறுபலன்பெரியதாகின்
மருவுமற்றதன்மேலாகவசிப்பவர்க்குரைப்பதென்னே
பொருவில்பஃறலத்தும்வைகும்பயனெலாம்பொருந்துவாரால். (௪௮)

அத்தலத்துயர்ந்ததானமகிலத்தமில்லையாகு
முத்தலங்களினுமொத்ததிதுவென்றுமொழிவாரில்லை
கைத்தலமழுமானேந்துமெம்மையேகிகருங்கண்டாய்
மைத்தலஞ்சனமுமோவவயங்குகார்க்கூந்தனல்லாய். (௪௯)

பலவிரித்துறைவதென்னைபகருமத்தலத்தைச்சார்ந்தார்
நலமருவெமைச்சார்ந்தாரேகவின்றதற்கையமில்லை
நிலவுமிவ்விசேடத்தாலேகிரம்பியபிரியம்வைத்தோ
மலமரலன்றிநீயுமமைத்தனையறிதியென்றான். (௫௦)

தலவளகந்தியெம்மான்சனற்குமாரனுக்குச்சொற்ற
நலமுறவெடுத்துச்சொற்றநயந்தவன்விழைவுநோக்கிக்
குலமுனிபுண்டரீகன்குறிமுதற்காட்சிபெற்று
நிலவியதுரைத்தவாறுதெரிதரநிகழ்த்தலுற்றும். (௫௧)

தலவிசேடப்படலம் முற்றிற்று.

ஆ படலம்-எ-இ திருவிருத்தம் - ௪௬௩.

## புண்டரீகமுனிவர் முதற்காட்சியுரைத்தபடலம்.

நலமலியுநந்திபிரானுடேசனற்குமரமுனி
பொலமலியுஞ்சிவராசதானியெனும்புரத்தினுக்குக்
கலமலியுங்கடனாகைக்காயாரோகணமெனும்பேர்
நிலமலியும்படிசொல்லென்னிகழ்த்துகெனநோர்ந்துரைப்பான். (௧)

அறமனைத்துங்குடிகொளுங்கையம்பிகையண்ணலைவணங்கி
மறமனைத்துந்தவிர்தலத்தின்மான்மியங்கேட்டுளமகிழ்ந்தேன்
பிறமனைத்தும்புணர்வினையத்தலத்தடைந்துசேர்ந்தவர்யார்
நிறமனைத்துந்தருமதுவுமுரைத்தியெனநிகழ்த்திடுவான். (௨)

புரையெறியும்பெருங்குணத்திற்புண்ணியப்பூங்கொம்பேகேள்
வரையெறியும்பன்மணியுமால்யானைக்கோடுகளும்
விரையெறியுமொண்மலருமேதருசந்தனக்குறடுந்
திரையெறியும்யமுனையெனுந்திருத்தகுமாநதிக்கரையில். (௩)

சாதமறைமுழங்கொலியுஞ்சாலையழலோம்பொலியும்
போதவமரராயவியூண்புசிக்கவழைத்திடுமொலியு
மேதமின்மங்கலவொலியுமென்றுமெழுகடலொலியாம்
வேதபுரமெனும்பெயரின்விளங்குமொருதிருநகரில். (௪)

வழிவழிநம்மடிக்கன்பேவயக்கிவருபெருங்குணத்தா
லிழிவுசிறிதேனுமுறாதெஞ்ஞான்றுமுயர்வேயுற்
றொழிவரியகண்ணோட்டமொப்புரவாதிகடழுவிக்
கழிபுகழினனிபொலிந்துகமழ்கற்ககோத்திரத்தில். (ரு)

மறைமுழுதும்வடித்துணர்ந்தானங்கமுமாண்புறத்தெரிந்தா
னிறைதருமாகமக்கடலுநீந்தினனல்லொழுக்க
முறைநெறியிற்றலைநின்றான்முனிவருநந்தமையுணர்ந்து
கறைகெழுபல்பவமுமறுகருத்தமனென்றொருமறையோன். (௬)

அந்தமுனிவரன்றவத்திலான்றபாற்கடலுதித்த
சந்தமதியெனவுதித்தான்சதுர்வேதமுதலாக
வந்தகலைபற்பலவும்வடித்துணர்ந்துதந்தையினு
நந்தவறிவினிற்சிறந்தானல்லொழுக்கந்தலைநின்றான். (எ)

நம்மடியர்தமைக்காணினாமென்றேயுபசரிப்பான்
செம்மலர்மேலயனுதித்தேவருளுமிணையில்லான்
விம்மலறுபெருந்தவமேவிளைந்ததனால்வருமுவகைப்
பொம்மல்படைத்துயர்ந்தோங்குபுண்டரீகப்பெயரான். (அ)

அன்னமுனிவரன்றந்தையாயகருத்தமற்பணிந்து
சொன்னபவத்துயரகற்றித்தூயசாயுச்சியமா
நன்னரமைமுத்தியினைநயந்தளிக்குங்கடவுளெவன்
மன்னவுரைத்தருளென்றான்மற்றவனுமகிழ்ந்துரைப்பான். (௯)

உரவில்விடயாதிகளினுழவிளமைப்பருவத்தே
கரவுதவிரின்பமுத்திகாதலித்தாயம்முத்தி
விரவுதிறலினனீயேவீடுமுதல்யாதானும்
பரசிவனையல்லாதுபாலிப்பாரிலையுணர்தி. (க0)

சங்கரனாலெவ்வுயிர்க்குந்தாவில்சுகங்கொடுத்தலினாற்
பங்கவியசனந்தவிர்க்கும்பண்பினாலுருத்திரனே
யங்கணருள்பொழியம்பைசமேதனாயமர்தலினாற்
றுங்கமிகுசாம்பனெனச்சொல்லுவாரறிவுடையோர். (கக)

நிலமுரத்துத்தரித்திடலுநீர்குளிர்ந்துபதஞ்செயலுங்
கலவழல்சுட்டொன்றுதலுங்கால்சலித்துத்திரட்டுதலும்
வலனமைவிண்ணிரந்தரமாயிடங்கொடுத்துமருவுதலு
மலமரவிலருட்பெருமான்கட்டளையென்றறிமைந்த. (௧௨)

இரவிமதிமுதலாயகோள்கடகவியங்குதலுங்
கரவறமீன்புணர்பரவைகரைகடவாதடங்குதலும்
புரவமையும்புவனங்கள்போவதுவுமாவதுவு
மரவணியுஞ்சிவபெருமானாணையெனவறிமைந்த. (௧௩)

மறைகளவன்வாய்மொழியேமறைகளவன்வந்தியரே
மறைகளவன்பாதுகையேமறைகளவன்காற்சிலம்பே
மறைகளவனூர்பரியேகாணாதுமயங்குதலு
மறைகளெனிற்சிவபெருமான்மான்மியநானென்னுரைக்கேன். (௧௪)

எங்குமவன்றிருமுடியேயெங்குமவன்றிருமுகமே
யெங்குமவனுலோசனமேயெங்குமவன்குழைச்செவியே
யெங்குமவன்செவ்வாயேயெங்குங்கையேபதமு
மெங்குமெனிற்சிவபெருமானேற்றநானென்னுரைக்கேன். (௧௫)

புனையுருவெட்டொன்பதுமுற்புணர்ந்துமோருருவுமிலன்
வினையொருநான்கொன்றியற்றிமேவினுமோர்வினையுமிலன்
புனையிழையோர்பான்மருவப்பொருந்தினும்விகாரமில
னனையபிரானுண்மைநிலையாரியம்பவல்லவரே. (௧௬)

மண்ணிடையைந்தாயமர்ந்தானீரிடைநான்காய்வதிந்தான்
கண்ணிடைதீயிடைமூன்றாய்க்காலிடைமற்றேரிரண்டாய்
விண்ணிடையொன்றாயமைந்தானாலும்விளம்பியவை
யெண்ணிடைவதல்லாமலின்னனெனவுணர்வனவோ. (௧௭)

கூற்றுவன்செய்கொடுந்தண்டங்குதித்துய்யக்குறித்தவர்க
ளேற்றுமிசைவருபெருமானடியன்றியெண்ணுவரோ
போற்றுமறையாகமபுராணமெலாம்புகல்பவர்தோங்
காற்றுவலியமைகாலகாலனெனத்துதித்தலினால். (௧௮)

எண்ணியபூங்கணைமதவேளிரவுபகலாவியற்றுங்
கண்ணியவெந்துயரனைத்துங்கடந்துய்யவுளங்குறித்த
புண்ணியர்களவனையன்றிப்பிறரையும்பூசிப்பர்கொலோ
தண்ணியநூலெலாங்காமதகனனெனமுறையிடலால். (௧௯)

மேயபலதுயரமெலாம்விரைந்தெழுவான்றேற்றிடுவித்
தாயபிறப்பொழித்திடுவானமையவுளத்திடைக்குறித்த
தூயமதியினர்சிவனையல்லாதுதுதிப்பர்கொலோ
பாயமறைபிறப்பிலியென்றெடுத்துரைக்கும்பான்மையினால். (௨௦)

அரியகடவுளராயவரிபிரமாதியர்க்கெல்லாம்
பெரியபிரான்சங்கரனேயென்றறிஞர்பேசிடுவார்
தெரியமுரசறைந்ததெனச்செகமுழுதுமவாய்க்கேட்க
வுரியமறைமாதேவனெனுந்திருப்பேரோதுதலால். (உக)

பிரணவத்தினுரியபொருள்பிறவொன்றுபேசிடுவார்
முரணவித்தற்காகமங்கண்முதலாயவேண்டுபவோ
கரணவிகற்பங்கடப்பாய்காவதமெண்ணிலகமழுந்
திரன்மிகுத்தசெழுங்கொன்றைமாலிகைசேர்தரக்கண்டும். (உஉ)

வேதகாயத்திரியின்பொருளாகும்வித்தகரார்
போதநாயகனானபொங்கொளிச்சம்புவையன்றி
யேதநீவாதமரும்யாவரையும்புகன்றிடலா
மோதவாம்பற்கனெனுமொருமொழிநள்ளமையாதேல். (உ௩)

மும்மறையுண்டுமறையின்முனிவிலெழுகாண்டத்திற்
செம்மைதருநடுக்காண்டஞ்சேர்ந்தவெழுசங்கிதையி
லம்மநடுச்சங்கிதையினுதியீரெழுத்துநடுப்
பொம்மலுறவமர்மனுவின்பொருளாவானெவன்மைந்த, (உ௪)

திருத்தமிகுமறைமுடிபாய்த்திகழ்தருகாலாக்கினிசா
ருருத்திரப்பேருபநிடதமுதலாயவுரைப்பதெலாம்
வருத்தமறவுலகனைத்துமிளைப்பொழித்துமாதேவன்
பொருத்தமுறமெய்ப்பூசுபுண்ணியநீறேபிறிதோ. (உ௫)

பிரியமிகவனைத்தினுக்கும்பிரமாணமாயமறை
தெரியவெடுத்தினிதுரைத்தல்சிவலிங்கார்ச்சனையொன்றே
யுரியவெனப்பிறர்வடிவமுரைத்ததுமற்றுண்டுகொலோ
வரியதவத்திருமைந்தவறைவதெவனிதன்மேலும். (உ௬)

ஆதலினம்பரசிவனையரிபிரமாதியர்பல்லோர்
காதலிற்பூசனைபுரிந்துகருதியதெய்தினரின்னு
மேதமறயானைமுதலெறும்பீறுதியபலவுட்
போதமுறப்பூசித்துப்பொலிந்தவைக்கோரளவுண்டோ. (உ௭)

இன்னுமுயர்பரசிவனையிருதிணையினுயிரனைத்து
மன்னும்வழிபாடியற்றிவயங்கியவைக்கறிகுறியா
மின்னுபலதலம்பொலியுமன்றிமிளிரனையபிரா
னுன்னுமொருவரைப்பூசையுஞற்றியதுமுண்டுகொலோ. (உ௮)

விச்சுவமென்றெடுத்தியம்பவிளங்குவானொருமுகுந்தன்
விச்சுவத்திற்கதிகனெனவிளங்குவான்பரமசிவ
னெச்சமெனயாவர்களுமியம்புவார்மாயவனை
யெச்சவதிபதிசிவனேயெனப்புகலுமெம்மறையும். (உ௯)

பரசிவனேபிரமமெனப்பன்மறையுமெடுத்தோது
முரனிலாரையும்பரமென்றேதிடுவதென்னையெனில்
விரவுமுபசாரமேயன்றியுமேவுயிர்ப்பரப்பின்
றாமுணர்ந்தும்போதுமெனச்சாற்றுவார்சான்றோரே. (௩o)

படைத்தலொடுகாத்தலுநம்பரமசிவன்புரிதொழிலே
படைத்தலயன்றொழிலென்னிற்பாறியவோர்தலையின்னும்
படைத்தறனக்கியற்றுகிலான்மால்காப்பனெனப்பகரிற்
படைத்தமகாருறுப்பழிவுமுடம்பழிவும்பார்த்திருந்தான். (௩௧)

எம்பெருமானித்தியமுமேனையோரனித்தியமு
நம்பமையமறையாதியெடுத்துநவின்றிடவேண்டா
கம்பமுறவருகற்பகாலங்கடொறுங்கவர்ந்த
வம்பதுமன்முதலியர்தந்தலைத்தொடையேயறிவிக்கும். (௩௨)

ஆயமலரவனாதியமரரெலாம்பசுக்களே
மேயபசுபதிசிவனேவிளம்புவதெனின்னுங்கே
ணேயமிகுமாதேவநின்மலன்வான்பரவையிடை
மாயவனாதியரொருதிவலையாமென்றுணருதியால். (௩௩)

அந்தமாதேவனேயகில்காரணன்காண்டி
பந்தமுமற்றஃதொழியப்பற்றுமொருபெருவீடு
நந்தவவனருளன்றிநண்ணார்நண்ணுவர்நெடுவா
னுந்தவமைபசுந்தோலிற்சுருட்டும்வலியுளராவார். (௩௪)

மன்னியவப்பரசிவனையவனமர்மாத்தலத்தடைந்து
நன்னியமத்தொடுபோற்றிக்கருதியதுநன்கடைவாய்
முன்னியநின்கருமமிடையூறின்றிமுற்றுகவென்
றன்னியமில்கருத்தமனன்கருளிவிடைகொடுத்தனனே. (௩௫)

வேறு.

தந்தையாருரைத்தவார்த்தைதலைக்கொடுபுண்டரீக
னிந்தைதீர்தலத்தின்மிக்கதெதுவெனநினையுங்காலை
முந்தையோர்பலருங்காசிமுழுநகரடைதியென்னச்
சிந்தைகூர்களிப்பினோடைத்திருத்தலம்வந்துபுக்கான். (௩௬)

ஆனந்தவனத்துமேயவளமெலாமமையநோக்கி
யானந்தம்பயப்பதற்கோரையமின்றென்றுதேர்ந்தே
யானந்தவறமுண்டாக்குமற்புதக்கங்கையாடி
யானந்தவுருவமாநம்மருட்குறிபணிந்தெழுந்தான். (௩௭)

கங்கையினன்னீராடல்காலங்கடோறுஞ்சார்ந்து
செங்கையின்மழுமானேந்தித்திகழுநங்குறிசேவித்த
லங்கையிற்கண்ணாய்நீயாமன்னபூரணியைப்போற்றல்
சங்கையினியமங்கொண்டான்றவத்துயர்புண்டரீகன். (௩௮)

இந்தநன்னியமம்பூண்டேயிராயிரவருடங்காறு
நந்தவெம்பொறியடக்கலாதியநயந்துமேவும்
பந்தமின்முனிக்குக்காட்சியளித்தேமல்லேமாக
வந்தநன்முனிவனுள்ளத்தவலத்தாற்கவலலுற்றான். (௫௯)

இரங்கிடுகாலைவாமதேவமாமுனியாங்கெய்தி
வரங்கிளரொருநீநெஞ்சமாழாந்ததென்னையென்னப்
பரங்கிளருடம்பினோடுமுத்தியிற்படர்தல்வேட்டேன்
கரங்கனன்மழுவேந்தண்ணல்கருணைசெய்திலனாலின்னும். (௬0)

அதுகுறித்திரங்குகின்றேனையனேயென்றானன்னான்
விதுமுடிப்பெருமானீங்குவீந்தார்க்குத்தன்சாருபங்
கதுமெனக்கொடுப்பதன்றிக்கருதியதளித்தல்செய்யான்
மதுமலர்ச்சூதக்காஞ்சிமாநகர்குறுகென்றான். (௬௧)

மொழிபுகழ்வாமதேவமுனிவன்சொலுள்ளங்கொண்டு
கழிதவப்புண்டரீகன்காஞ்சிமாநகரஞ்சென்று
பழிதபுகம்பையாதிப்பற்பலபுனலுமாடி
யிழிவறுசூதநீழலெம்மையாங்கிறைஞ்சினானே. (௬௨)

கறைதபுகாமக்கண்ணியெனும்பெயர்கலந்துவாழு
மறைபுகனிலையும்போற்றிவழூத்துமத்தலத்தின்கண்ணே
முறைமையினொருகாரோணமூர்த்தியைத்தாபித்தன்பிற்
பொறைமிகவாண்டுபன்னீராயிரம்பூசித்தானால். (௬௩)

ஆங்குநாங்காட்சிநல்கேமாயினேமதுதெரிந்து
பாங்குசால்புண்டரீகன்படருற்றுத்துயருங்காலை
யீங்குமேவினருடம்போடுமுத்தியெய்தாதாகும்
வீங்குபோகாதியாவும்வீசுதல்கூடுமோர்தி. (௬௪)

ஆதலிற்கும்பகோணமடுத்துநீபூசிப்பாயேற்
காதலிற்பெறுவாயென்றுகருதசரீரியானு
மோதலிற்களிப்புமேவியொருகும்பகோணஞ்சார்ந்தான்
போதலிற்கருதன்முற்றப்புணருமென்றுள்ளங்கொண்டே. (௬௫)

மன்னுமத்தலத்தின்மேலாமாமகதீர்த்தமாடித்
துன்னுநந்திருமுனாம்பொற்றாமரைப்புனலுந்தோய்ந்து
பன்னுநங்குறியும்போற்றிமங்களப்பெயர்பரித்து
மின்னுநின்றனையும்போற்றிமற்றவும்விருப்பிற்றாழ்ந்தான். (௬௬)

எண்ணியவாங்குங்காயாரோகணவிலிங்கந்தாபித்
தண்ணியவன்பினெண்பானுயிரவருடம்பூசை
பண்ணியமுனிவனுக்குப்பருவம்வந்துறுமையாலே
கண்ணியதருளாவண்ணமிருந்தனங்கருங்கட்பாவாய். (௬௭)

இத்தனையாண்டுப்பூசையியற்றியுமிருவர்தேரு
வத்தனையடியர்க்கெய்ப்பில்வைப்பெனவருளனாதி
முத்தனையடையப்பெற்றேமலமென்றுமுனிவுன்வாடிப்
பித்தனைநிகர்ப்பமேன்மேற்பேதுறுகின்றகாலை, (சஅ)

கண்ணுவமுனிவன்றோன்றிக்கருதியதடையவேண்டி
லெண்ணுவதினியொன்றின்றியிரங்குகீழ்ப்பரவைக்கோட்டி.
லண்ணுவமானமில்லாவாதிபுராணஞ்சார்ந்து
பண்ணுவதாங்குச்செய்யிற்பலித்திடுநினைத்ததென்றான். (சகூ)

முனியுரைதலைமேற்கொண்டுமொய்வளக்குடந்தைநீத்தே
யினியதுசெய்வேனென்னாச்சிவராசதானியென்னும்
பனிமலர்ப்பொழில்சூழாதிபுராணமாத்தலம்படர்ந்து
துனிதவிர்தேவதீர்த்தமுதற்பலபுனலுந்தோய்ந்தான். (ருo)

பொருந்தவங்கமருமாதிபுராணப்பேரொமையுமேன்மைக்
கருந்தடங்கண்ணியென்னக்கலந்தமர்நினையும்போற்றித்
திருந்தும்வண்சறுவதீர்த்தத்தென்மேற்காச்சிரமஞ்செய்தாங்
கருந்தவர்தொழுங்காரோணவிலிங்கமும்பதிட்டையாற்றி. (ருக)

அந்தமாவிலிங்கத்திற்குமளப்பருமன்புபொங்கச்
சந்தமென்மலர்களாதியாவையுந்தழீஇப்பூசித்துப்
பந்தமுற்றொழியுமாறுபரவிநன்கமர்முனிக்குக்
கந்தமென்மலர்ப்பூங்கோதாய்காட்சிதந்தருளினேமால். (ருஉ)

காட்சிதந்தருளலோடுங்கதுமெனவடியில்வீழ்ந்து
மாட்சிசாலன்பர்வாழ்வேவருபவப்பிணிமருந்தே
மூட்சிசால்விருப்பிற்பன்னாண்முயன்றனனின்றாள்காணப்
பூட்சியோட்டியேனின்னைப்புணர்திறமருளாயென்றான். (ருங)

முன்னியபுண்டரீகமுனிவநம்மூன்றாங்காட்சி
மன்னியகாலத்தெண்ணம்வாய்த்திடப்பெறுவாயென்று
நன்னியமத்தவற்குநாஞ்சொல்லிமறைந்தேம்யாரும்
பன்னியவிலிங்கத்துள்ளாற்பனிவரைபயந்ததோகாய். (ருச)

உரைத்தருளியசொற்கொண்டேயுறுவரோறுபோல்வான்
விரைத்தபூம்பொழில்சூழாங்கேமேவிநோற்றிருந்தான்மாண்பாற்
புரைத்தநாமெழுவாய்க்காட்சிபுணர்த்தியதுணர்தியென்று
னரைத்தசாந்தளாயகொங்கையம்மையுள்ளுவகைபூத்தாள். (ருரு)

பந்தமில்புண்டரீகப்பனவனுக்கெழுவாய்க்காட்சி
தந்தமையெடுத்துச்சொற்றாஞ்சிவராசதானிமேய
வந்தமிலனையமூர்த்தியணிகிளரிரண்டாங்காட்சி
நந்தநன்கருளுமாறுநாமினியுரைக்கலுற்றாம். (ருசு)

புண்டரீகமுனிவர்முதற்காட்சியுரைத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம்-அ-இ-திருவிருத்தம்-ருகக.

# புண்டரீகமுனிவரிரண்டாங்காட்சியுரைத்தபடலம்.

பொருவுதவிர்சனற்குமரனந்திபிரானடிவணங்கிப்புண்டரீகன்
வெருவுதவிர்சிவராசதானியாச்சிராமத்துவிருப்பின்மேவி
மருவுதவிராவிரண்டாங்காட்சிபெற்றவரலாறும்வகுத்தியென்ன
வொருவுதவிர்நயசுருணத்தனையன்மனமகிழ்ச்சிமிகுந்துரைக்கலுற்றான்.()

சிற்றுதரம்வருந்தாமலண்டபகிரண்டமெலாஞ்செழிக்கவீன்றுஞ்
சற்றுமொருதளர்ச்சியுறாதிளங்கன்னியாயமருஞ்சயிலப்பாவை
கற்றுநவில்புகழ்முனிக்குநீயிரண்டாங்காட்சிதந்தகருணைகேட்டும்
பற்றுமிகுந்தனனெனப்பல்லுலகுமுய்யவிடமுண்டபரமன்கூறும். (௨)

மாண்டதவப்புண்டரீகப்பெருமாமுனிகிரியைவழுவாதாற்ற
நீண்டமனமுடையானாய்வைகறையிற்றுயிலெழுந்துநிகரிலாமை
யாண்டநறுந்தேவதீர்த்தங்குடைந்துவெள்ளியநீறணிந்துமேன்மை[வான்
பூண்டமணித்தொடைபுனைந்துபிடகைகொடுநந்தவனம்புகூஉப்பூக்கொய்

நந்தியாவட்டமாதளைசந்துகூதாளநரந்தநாவல்
புந்திகூர்மாலூரமந்தாரமாஞாழல்புன்னாகஞ்செவ்
வந்திபாடலங்கன்னிகாரமாமலகமார்மாயோன்காந்தி
முந்தியாம்விழைகொன்றைதேங்கொன்றைவகுளநீர்முள்ளிகாஞ்சி. (௪)

சிந்துவாரங்குரவஞ்செவ்வகத்திநீர்மிட்டான்செருந்திவேங்கை
நந்துநாயுருவிபொன்னாவிரைகுருந்துவன்னிகுசைநாணல்காயா
முந்துமோரிதழ்க்கமலம்வழைகொக்குமந்தாரைமுளரிதான்றி
யுந்துபொன்னூமத்தைகூத்தன்குதம்பைசெவ்வரத்தமுயரசோகம். (௫)

மருவருக்கம்வெட்பாலைவெள்ளிலோத்தம்பூளைமாவிலிங்கம் [ளா
கருவிளம்பன்னீர்திலமார்பலாசு பட்டிபருத்திவெண்காக்கணஞ் செங்கீ
யொருகுவளைசேதாம்பல்சதகுப்பைவெட்சிதுழாயோங்குவாகை
கருநிறத்தமலர்ச்செம்பைகண்டங்கத்திரிகிளுவைகரந்தைகாரை. (௬)

கொழுந்துவிளாவலரிதுரோணங்காந்தள்வெட்டிவேர்கோட்டந்தாழை
யெழுந்துபொலிவிலாமிச்சவேர்மஞ்சணாத்திகடம்பிரவிகாந்தி
செழுந்தகைவெற்றிலையறுகுகருங்காலிகுளவிபச்சைசிறந்தசாலி
தழுந்தரமாரழிஞ்சில்வழுதுணைமயிலையொண்பாரிசாதந்தாளி. (௭)

வதரியெலுமிச்சைபுலிதொடக்கிநறுமல்லிகையவாங்குச்சிப்பு
லிதமிகுசண்பகமாதிப்பற்பலவுமிதப்பக்கொய்தெடுத்துக்கொண்டு [ஞ்
கதமிலொருதலையமைத்துமாலையு மிண்டையுந்தொடையுங்கண்ணித்தாரு
சுதமினமையலங்கரிக்கத்தக்கபடிமுயன்றமைத்துத்தொகுத்தபின்னர். ()

வண்டுபடுமார்ங்கண்ணிவளவர்பிரான்முனிவர்பிரான்மாண்புதேர்ந்து
கொண்டுபரிசனம்பூசாதிரவியமுனேனையவுங்கொடுத்துவேண்டக்
கண்டுமகிழ்ச்சியிற்றழுவிக்கதிர்முதிர்முன்மஞ்சனநீர்கனிவிற்றெவ்வீ [டு.
யண்டுநிறைதொறுநிரப்பித்துடிகருப்பூரம்பொடித்திட்டமைத்துக்கொண்

பலநிவேதனமமைக்கச்சிலரையேவிப்பசுங்கர்ப்பூரமாதிப்
பலவிராய்ச்சாந்தமைக்கச்சிலரையேவிப்புனிதம்பாத்திரங்கள்
பலவும்வாய்த்திடவியற்றச்சிலரையேவிக்கனிவுபரவப்பூக்கள்
பலவிராம்புனன்மீட்டுங்குடைந்துநீற்றொடுகண்மணியராய்த்தரித்தே. ()

தெளிவளராய்பதமைந்துமுளத்தெண்ணியன்போடுநந்திருமுன்போந்து
களிவளர்நம்மனுவைப்பெற்றுவிதிவழியேபுண்ணியாகவாசனஞ்செய்
தளிவளர்கௌவியபூசையாற்றியமுதோரைந்துமமையப்போற்றி
யொளிவளரொன்பதுகும்பநிறீஇத்தொழுதுதழற்கருமமுமாற்றினனே. ()

ஒருமருப்பன்முதலாய்துவாரவானவர்பூசையுவந்துசெய்து
பொருவரியகருக்கிரகம்புகுந்துவரநதிபூசைபொலியவாற்றிப்
பெருவலியிற்பூதசுத்திதானசுத்திமனுச்சுத்திபெருக்கம்வாய்ந்து
மருவுதிரவியசுத்திலிங்கசுத்தியோரைந்துமாண்பினாற்றி. (கஉ)

சொற்றபாத்தியமுமாசமனமுநல்லருக்கியமுந்தூய்தாப்பண்ணி
யுற்றவாதாரசத்திமுதற்சத்திமண்டலமீறுறப்பூசித்துப்
பற்றவாவாகனமுந்தாபனமுமுளத்தன்புபதியவாற்றி
மற்றவாறைந்தன்மேலெட்டங்கநியாசமுநன்மாண்பினாற்றி. (கங)

கூறுசந்நிதானமொடுசந்நிரோதனமவகுண்டனமுஞ்செய்து
பேறுதருநற்றேனுமுத்திரைமுற்பலவும்பிறங்கநல்கி
வீறுகெழுபாத்தியமாசமனமருக்கியங்கொடுத்துவேலையேழு
மாறுகொடுமுழங்கியனவியமுழங்கவபிடேகமாண்பிற்செய்வான். (கச)

ஆன்றநறுந்தயிலமாநெல்லியரிசனங்குடஞ்சுட்டமைந்தவைந்து
சான்றவமுதைந்துநெய்பாறயிர்சுவைத்தேனயிரரம்பைதழைவருக்கை
யென்றநறுஞ்சூதமுயர்கருப்பஞ்சாறிலிகுசத்தினெடுத்தசாறு
தோன்றநரந்தக்கனிமாதுளங்கனிதமரக்கனியிற்றொகுத்தசாறு (கரு)

மேயவிளநீரடிசில்சந்துதபனங்கங்கைவில்வச்சாறு
பாயசகத்திரதாரைசிருங்கம்வலம்புரிமுறைமைபயப்பவாட்டி
நேயமுறவாட்டுதொறுமிடையிடைச்சுத்தோதகநன்னிவேதனாதி
யாயபுரிந்தொற்றுடையிட்டுமிளிர்பரிவட்டமலங்கச்சூழ்ந்து. (கசு)

தூயவுபவீதமெடுத்தணிந்துமணிமுடிகுழைபொற்சுடர்க்கேயூர
மாயவொளிபடுவயிரகடகமணிமதாணியொளிராழிநாண்மு
னேயமலிதரச்சாத்திநீற்றொடுசாந்தணிந்துதொடைநிரம்பச்சூட்டிப்
பாயநறுந்தூபமொளிர்தீபமெடுத்துறவயக்கிப்பண்புமேவ. (கஎ)

நாடுதளவரும்பனசுத்தோதனமொண்பருப்படிசினன்பாற்சொன்றி
நீடுகுளப்பொம்மல்புளிபடுமிதவைதிலமூரனெய்யினோடு
கூடுசருக்கரைவல்சிமரிசயினிததிமடைகுய்கோலச்செய்து
வாடுதலில்சுவைக்கருனைபாகரிலட்டுகந்தோசைவளங்கூர்பிட்டு (கஅ)

பண்ணியமோதகமுழுந்தவடையினியநோலைமற்றும்பகரபூபந்
தண்ணியதெங்கிளநீரின்குளநீர்வண்பழநீர்மோர்சார்ந்தநீர்
கண்ணியவொண்சுத்தநீரிவையனைத்து மொரோவொன்ருக்கனிவினல்கிப்
புண்ணியமாரருக்கியந்தாம்பூலமுகவாசமுறைபொலிவினீந்து. (௧௧)

விரைகெழுதூபங்கொடுத்துமேலடுக்குதீபமுதல்விளம்பாநின்ற
புரையில்பலவாகியவாராதனமும்புரிந்துமணப்பூக்கலேவிக்
கரையுநிராஞ்சனஞ்செய்தபின்பளிதவிளக்கெடுத்துக்கனிவுமேவ [தி
வுரைபருத்திவித்தொடுவேப்பிலைசுழற்றியெதிர்துவெண்ணீறுளிரச்சாத்

திருந்துதருப்பணங்கவிகைவெண்கவரியாலவட்டஞ்சிவிறியாய
பொருந்துமிவைநேர்வயக்கிப்புதுமலரக்கதைசாத்திப்புனிதந்தீரா
திருந்துதிகழருக்கியமுமீந்துபலமலரிடக்கையேந்திச்சன்ம [ணி.
மருந்துபுரையைந்தெழுத்தும்வலக்கையிற் கண்மணிமாலை வாங்கியெண்

ஆயவினிதாகியநம்மடிமலரிற்சாத்தியபினட்டாங்கத்தி
னேயமிகப்பணிந்தெழுந்துதுதித்துவெளிவந்தொருசார்நிலவமேவிப்
பாயநமதருளுருவங்குறித்தமர்ந்துபின்னெழுந்துபணிநின்ருர்க்கு
மேயபிரசாதநல்கிவிதிப்படிநின்னையும்பூசைவிரும்பிச்செய்வான். (௨௨)

காலைவளச்சுரதீர்த்தம்படிந்திவ்வாறியற்றியவக்கருத்தமன்சேய்
பாலைநிகர்மொழிமடவாய்முனிதீர்த்தமுழுகுபுநண்பகலாமுச்சி
வேலையின்முன்சொற்றபடியெமையுநினையும்பூசைவிழைந்துசெய்வான்
மாலையில்வண்காகநீர்தோய்ந்துபூசனைபுரிவான்மகிழ்ச்சிபொங்க. (௨௩)

பொய்யினொடுகூடாதபுண்டரீகப்பெயரோன்புக்கிலாய
மெய்யினொடும்வீடடைவான்சருவதீர்த்தம்படிந்துமேலோங்கன்பின்
மொய்யினொடுவேண்டுவகொண்டத்தயாமப்பூசைமுயன்றுசெய்வா
னெய்யினொடாங்குழலாய்நித்தியமிதுநைமித்தியமுநிகழ்த்தக்கேண்மோ.

பனிவரையின்முளைத்தமலர்ப்பசுங்கொம்பேநமக்கன்புபரிப்பார்தம்மிற்
புனிதநனியுடையவனம்மடியவரைநாமென்றேபுந்திசெய்வோ
னினியபுனலுடளிப்போன்முனமொழிந்தவளவன்வருமிடையூறேட்டி
முனிவனுளமெப்படியப்படிநடக்குமொருவிரதமுன்போற்பூண்டான். ()

வேறு. [டைப்

திருகுகோட்டுச்செழுந்தகர்த்திங்களில், வருகுணத்தநெய்வான்றிருநாளி
பெருகுவாசக்கொழுந்துபெருக்கியே,யுருகுமன்பினுஞற்றுவன்பூசனை. ()

கொழுவிமிற்பெருங்குண்டைமதிவரு,செழுமுறத்திருநாளிற்சிறப்புறத்
தழுவுசாந்தந்தகக்கொடுபோற்றுவான்-வழுவிலாதமுனிமலைமங்கையே()

மேயதூயமிதுனமதியிடை, யாயவன்றிலடைதிருநாள்வயிற் [னே,
பாயமூன்றுபழமுங்கொண்டேத்துவான், மாயவாழ்க்கைமதியாமுனிவ

கவைபடுங்காற்கடகமதிவரு, நவையிலாதவுடைகுளநாள்வயிற் [லிஞய்
செவையினும்பயங்கொண்டுசிறப்பிப்பான், குவையருமலர்கொண்டகுழ

பரவுகின்றபஞ்சானனத்திங்களில், வரவுமேவியமாயவனுளிடை
விரவுசீரயிரான்மிகப்போற்றுவான்,புரவுமேவிப்பொலியுங்கைமாதராய்()

விரைநறுங்குழற்கன்னிமிளிர்மதிக்,கணைசிறப்பிற்கடைக்குளநாள்வயிற்
புரையிலாதவபூபத்திற்பூசிப்பான்,வரையுதித்தபைந்தோகைமயிலனாய். ()

தொக்கமேன்மைத்துலாமதிவாய்ப்பகை, யுக்கசூலமுறுந்திருநாளிடைத்
திக்கவாவுபதத்திற்சிறப்பிப்பா,னக்கதாமரைபோன்முகநங்கையே. (௩௨)

தேட்டனென்றுசொலப்படுந்திங்களி, லிட்டமாமறுநாளிலிலகுறப்
பட்டதீபம்பலகொடுபூசிப்பான், வட்டமாமுலைவாள்விழிமாதராய். (௩௩)

குனிசிலைப்பெயர்கொண்டமதியிடைப்,புனிதமாகியசெங்கைபொருந்துநா
ளினியவானநெய்கொண்டினிதேத்துவான்,கனியுநாணக்கரையுமின்சொல்
லினாய். (௩௪)

திரையுலாமகரப்பெயர்சேர்மதிப்,புரையிலாதகொடிறுபுகுந்தின[ரத்தாய்.
முறைசிறந்தசெந்தேன்கொண்டுவெப்பிப்பான்,றரைமுன்யாவையுந்தந்தவுத

கோலமேயகுடப்பெயர்த்திங்களின், ஞாலமேத்துங்கொடுநுகநாளிடைக்
காலவாயநெய்க்கம்பலஞ்சாத்துவா, னேலமார்ந்தகருங்குழலேந்திழாய்

விடையமைந்துவெடித்தெழுமீன்மதிக், கடையெழுஞ்சனிநாளிற்கனிவுற
வுடைதராததயிர்கொண்டுவெப்பிப்பா,னடையினோதிமநாணுறநாட்டுவாய்.

இந்தவாறுநைமித்தியமென்பது,நந்தநாளுநடாத்துந்திறலினன்
பந்தமோவப்பனவர்குலமெலா,முந்தவாற்றுதவத்தின்மூளைத்துளான், ()

பிணையுமின்னவைபேணுவதன்றியுந்,துணையிலாதவத்துங்கமுனிவர
னணையுநாளொன்றனுக்கிலக்கம்மிரண்,டிணையிலாதவெழுத்தைந்துமெண்
[ணுவான்.(௩௯)

புண்டரீகன்பொலியும்பெருந்தவங், கண்டவானவர்கோனுட்கவலுரு
வண்டரோடினிதாய்ந்துசிதைத்திடும்,வண்டவாவுகைமாதரைக்கூவினான்.

அரம்பைமேனகையாதியமாதரார்,வரம்பையோவியமாமைசுமந்துளார்
திரம்பைநாகஞ்சிதைத்திடுமல்குலார்,நிரம்பைமுன்னருற்றீதுநிகழ்த்து
[வார். (௪௧)

வேதனுவியலைத்திடல்வேண்டியோ,வோதமீதிலுறங்குமுகுந்தனு [யோ.
மாதகாதெனவாற்றுதல்வேண்டியோ,மாதவத்தனைவாட்டுதல்வேண்டி

இன்றுநீவிரெந்தெம்மைவிளித்தது,குன்றுசெற்றகுலிசப்படையினு [ன்.
யென்றுகூறலுமிந்திரனோதுவ,தொன்றுகேண்மினென்றோதுதன்மேயினு

குணகடற்பெருங்கூலத்தொருதலம்,புணருமாதிபுராணமெனும்பெயர்த்
தணவுமத்தலத்தாய்புண்டரீகன்செய், மணவருந்தவமாற்றுதிர்போமென்
[றன். (௪௪)

என்றுகூறலுமித்துணையோவெனு,நின்றுநக்குநிலத்தரமங்கைய [யார்.
ரன்றுவந்தனராதிபுராணத்தைச்,சென்றுசேர்ந்தனர்வென்றிடுஞ்சிந்தை

புண்டரீகமுனிவன்முன்போயினர், பண்டவாதவிசைபலபாடினு
ரெண்டவாதநடமுமியற்றினர்,தண்டமீதுவிழுந்துதழுவினர். (சசு)

நம்மையேயுளங்கொண்டுநயந்திடுஞ்,செம்மையாளனிச்செய்கையுணர்ந்தி
லான்,கொம்மைவெம்முலைக்கோடுறத்தாக்கவுந், தம்மைவாட்டுதறியுமொ
[த்தானரோ. (சஎ)

கண்டமங்கையர்நாணங்கதித்திடக்,கொண்டலூர்திதிருமுன்குறுகினர்[ர்,
விண்டவாவத்தல்ப்பெருமேன்மையாலொண்டவாமலுறையுமுனியென்ற

இனியியற்றுவதென்னையெனக்கவன்,றனியமோவியவாண்டளப்பாஞெடு
ம், புனிதவானவரும்புடைசூழ்வரப், பனிமலர்த்தலையான்பதஞ்சார்ந்தன

தானவேந்தன்வரவுதகத்தெரிந், தான்வேதனவரொடுமேவியே [ன்.
மீனவேலைவிழிதுயில்பைந்துழாய்க், கானமார்பனைக்கண்டுரையாடினன்.

அன்னரோடுமனையனம்பாலடைந், துன்னருந்தவத்தோங்குமொருமுனி[ம்
முன்னமேவிமுழுதருள்செய்யென, நன்னர்யாமவரோடங்குநண்ணினே

புண்டரீகன்பொருக்கென்றெழுந்தொரு, தண்டநேரத்தரையிற்பணிந்தன
னண்டருக்குமணுகருங்காட்சியான், கண்டதென்றனமென்றுகளித்தனன்.

உறுவகேண்முனுரைத்தபடிமற்றேர், மறுவில்காட்சியில்வாய்ப்பநின்னெ
ண்ணமே, பெறுவையென்றறப்பேசிப்பல்லாரொடு, மறுவிலாதமர்நாம
[றைந்தாமன்றே. (ருங)

பொங்குநீகேள்விப்புகரின்முனிவரன், றங்குமோகைதவாதுதலைக்கொளத்
தெங்குவார்பொழில்சூழத்திருநக,ரங்குமேவியருந்தவமாற்றினன். (ருச)

பற்றுநீத்தபடிமையர்யாவரு, முற்றுநோக்கியுறுவதித்வெனுக் [லுவாம்.
கற்றுமேவிரண்டாவதுகாட்சியைச், சொற்றுளாமினிக்காட்சியுஞ்சொல்

புண்டரீகமுனிவ ரிரண்டாங்காட்சியுரைத்தபடலம் முற்றிற்று.

ஆ படலம்-கூ-இ-திருவிருத்தம்-ருஎச.

## புண்டரீகமுனிவர்மூன்ருங்காட்சியுரைத்தபடலம்,

மாதவச்சனற்குமாரனந்திவானவனைப்போற்றி
மூதறிவுடையனுயமுனிவற்குமூன்ருங்காட்சி
மேதகுபெருமானல்குகருணையும்விளம்புகென்னச்
சீதளவதனங்காட்டிமகிழ்ச்சியிற்செப்புகின்ருன், (க)

சராசரமனைத்துமீன்றதாயிளங்கொடிவணங்கி
நிராமயபரமானந்தநிருமலபுண்டரீகன்
பராவநீமூன்ருங்காட்சிபாலிப்பின்முந்துதந்த
புராதனசரிதங்கூறென்றிரத்தலும்புராணன்கூறும், (உ)

ஒருவினம்மிரண்டாம்பாதமுளங்கொடுகருமமாற்றிப்
பொருவருநாலாம்பாதமெய்யொடும்புணர்தல்வேட்டான்
கருவடர்புண்டரீகன்கருதினீதிறம்பூதின்னு
மருமலர்க்கிழவனுதியெவர்க்கும்வாய்த்திடுவதன்றே. (௩)

அம்மையென்றுலகமேத்துமருட்பசுங்கொம்பேமிக்க
செம்மைகொள்புண்டரீகன்றிகழ்மனவாக்குக்காய
மும்மையுமுலகமாயமூன்றினுமுய்த்தல்செய்யா
னம்மையேகுறித்துநிற்பானிருவினைநலிவுந்தீர்ந்தான். (௪)

பொறையுருவமைந்தகோதாய்பொறியைந்துமடக்கிநாளு
நிறைதவஞ்செய்தலன்றிநிரம்புநங்குறியைப்போற்றி
முறையுறச்சூழ்தலோடுமுழுகுதீர்த்தமும்யாவோரு
மறைசெய்கேத்திரமுஞ்சூழ்வானருந்தவமுருக்கொண்டன்னான். (௫)

திரைசெய்தீர்த்தங்களெல்லாஞ்சென்றுசென்றன்பினூடிக்
கரைசெய்வெண்ணீறுபூசிக்கண்மணிமாலைபூண்டு
புரைசெயைந்தெழுத்துமெண்ணிப்போக்கருங்கனிவுபொங்க
விரைசெயங்கதுப்பினல்லாய்மேதகநமைப்பூசிப்பான். (௬)

அலங்குநங்கோயின்மேவியலகிடன்மெழுகன்மற்று
மிலங்குபஃறீபமேற்றலாதியவியற்றுவாரை
விலங்குவெங்கரணமொன்றிவிரும்புமைஞ்சுத்தியாற்றித்
துலங்குநம்பூசைசெய்துதொழுதுதோத்திரஞ்செய்வாரை. (௭)

வளியிருவழியுஞ்சேறன்மாற்றுபுநாப்பணூடி
யுளியெழவெழுப்பிநம்மையுணர்ந்தனரிருக்கின்றாரை
விளிவின்முப்பொருளுமோர்ந்துவெவ்வியபாசநீங்கிக்
களிகொளநம்மோடொன்றாதோன்றிவாழ்கலப்பினாரை. (௮)

கண்டிடுதொறுமார்த்தாண்டன்வரவுகாண்கமலப்போது
கொண்டிடுவிகசிதந்தன்குருமுகத்தியல்பேதோன்ற
மண்டிடுமிடியன்செம்பொன்வைப்பெதிர்கண்டாற்போன்று
விண்டிடுமுகமனோடுவிரைந்தெதிர்தழீஇயுவப்பான். (௯)

இன்னணமொழுகுந்தூயோனிறையவன்முன்றாங்காட்சி
நன்னர்யாம்பெறுவதெந்தஞான்றெனவுள்ளத்துள்ளி
முன்னருஞ்சறுவதீர்த்தமுழுகுபுகரைமேல்வந்து
பன்னருமாங்குமேவுநங்குறிபரவிப்போற்றி. (௧௦)

ஓங்குதென்கரைப்பாலெய்தியுயர்குணதிசையைநோக்கிப்
பாங்குசேர்சுகாசனத்துப்பண்புமேவுறவிருந்து
வீங்குநான்முகன்மால்வேதவேதாந்தமுணரொணாத
தேங்குபேரொளியாநம்மைச்சிந்தையிற்பதித்திருந்தான். (௧௧)

என்றுமோர்பொழுதேசற்றுண்டிரவுணப்புண்டரீக
னன்றுதொட்டொருநாள்விட்டுமைதரவிருநாள்விட்டு
மொன்றுறமுந்நாள்விட்டுமொருங்கொருபக்கம்விட்டு
நன்றொருமதியம்விட்டோராடாதுசிறிதுண்பானால். (௧௨)

அயனமொவ்வொன்றுநீத்துமொவ்வொராண்டமையநீத்தும்
பயன்மிகவடையுமாண்டுபன்னிரண்டொருங்குநீத்தும்
வியனுறநூறுநீத்துஞ்சிறிதுணாவிழையுமன்னா
ளியலுமெவ்வுணவுநீத்தானிருந்தனன்கற்றானைத்தே. (௧௩)

இவ்வண்ணமிலக்கமேலோரிருபானாயிரமாண்டெல்லை
யவ்வண்ணமாயநம்மையகங்கொடுபுண்டரீகன்
மெய்வண்ணத்தவத்துமேவமேற்பொங்கியெழுந்ததம்மா
செவ்வண்ணத்தீயினோடுஞ்செறிபுகைப்படலமென்மேல். (௧௪)

தடநெடும்புகைமேற்பொங்கித்தானமுற்புவனமெல்லாம்
பூடருபுவெதுப்பலோடும்பண்ணவர்நடுநடுங்கிக்
கடவுவெண்களிற்றான்பாதங்கலந்தனரிறைஞ்சிக்கூற
மடனின்மற்றவனோர்காலமகதியாழ்முனிவன்வந்தான். (௧௫)

வந்தமாமுனியைத்தாழ்ந்துமணஞ்செய்கற்பகத்தார்வேந்த
னிந்தவான்றாமமேவற்கேதுநீயுரைத்தியென்ன
நந்தநான்முகத்தான்வாழுநகர்நின்றும்வருதல்செய்வேன்
சந்தமார்புண்டரீகன்றரைத்தலைத்தவஞ்செய்கின்றான். (௧௬)

அன்னவன்றவத்தாலாயதூமமென்றறைந்தாராங்கு
முன்னமேயுணர்ந்தேனென்றுமொழிந்தனனெழுந்துபோனான்
கொன்னவில்குலிசத்தோளான்குலவரம்பையரைக்கூவிப்
பன்னரும்புண்டரீகன்பயிறவஞ்சிதைப்பீரென்றான். (௧௭)

செழுமணிவயிரத்தூணைச்சிதலரித்திட்டாலு
முழுமுதற்பரனையாலமுயன்றெழுந்தடர்ந்திட்டாலும்
வழுவின்மற்றவனைக்காமன்மலர்க்கணைமயக்கினாலும்
பழுதிலம்முனிவனோன்புபாறுறாதெம்மாலென்றார். (௧௮)

இனியெவன்செய்துநாமென்றிலேகர்தங்கூட்டத்தோடும்
பனிமலர்க்கிழவன்பாங்கர்ப்படர்ந்தவன்பாதம்போற்றி
முனிவரன்றவத்தாலாயமுழுப்புகைமுருக்குந்தன்மை
நனியெடுத்துரைத்தான்வானநாட்டவன்கேட்டவேதன். (௧௯)

விரையவிந்திரனோடும்பால்வேலையினடுவட்பச்சை
வரைபலகமலம்பூத்துமாநாகமிசைக்கிடந்தாற்
புரையநம்மாணைதாங்கிவிழிவளர்புயலைச்சார்ந்தா
னுரையமைவணக்கஞ்செய்தாங்குரைத்திடலுற்றான்மன்னோ. (௨௦)

திருமகண்மணாளகேண்மோதிரைக்கடல்வளாகத்துள்ளா
லொருமுனிதவஞ்செய்கின்றானுறுபுகைப்படலையாலே
கருகியவனைத்துமோர்ந்துகண்டுயில்கின்றாயென்னப்
பருவரலொழிமினென்றுபகர்ந்தனனெழுந்தானன்றே. (௨௧)

மாயவன்பிரமனாதிவானவரொடும்விரைந்து
தூயநந்திருமுன்வந்துதொழுதுவிண்ணப்பஞ்செய்ய
நேயமால்விடைமேற்கொண்டுநிரம்பியவவர்களோடும்
பாயபல்கணமுஞ்சூழமுனிவன்முன்படர்ந்தாமன்றே. (௨௨)

காட்சிதந்தருளுநம்மைக்கண்டுவல்விரைந்தெழுந்து
பூட்சியோடடையுமுத்திபொருந்தியதின்றென்றுன்னி
யாட்சிகொடவத்தான்பல்காலடிமிசைப்பணிந்துசூழ்ந்து
மீட்சியிலெதிர்நின்றோவாத்துதிபலவிளம்பலுற்றான். (௨௩)

எவனருள்வலியாற்பந்தமெனைத்துமெவ்வுயிர்க்குமெய்து
மெவனருள்வலியாற்பந்தமெனைத்துமெவ்வுயிர்க்குமாயு
மெவனருள்வலியாலோவாவின்பமெவ்வுயிர்க்குமேவு
மவனொருநீயேயன்றியாருளாரறவேற்றண்ணால். (௨௪)

எவனுடையாணையாலேமதிகதிரியங்காநிற்குங்
கவனவாந்திரைநீர்வேலைகரைகடவாதுமேவும்
புவனங்களனைத்தும்வைத்தநிலைமையிற்பொருந்தாநிற்கு
மவனொருநீயேயன்றியாருளார்மிளிர்முக்கண்ணாய். (௨௫)

அதிசயம்பயக்குநாராயணவுபநிடதம்யாரை
மதியினிற்குறித்தியாவர்வணங்கினுமவ்வணக்கந்
துதிகெழுநினவேயென்றுசொலுமுனைக்குறித்துநாயேன்
விதியிற்செய்வணக்கம்வேறுமேவுமோவிமலவாழ்வே. (௨௬)

சாதலும்பிறப்புமில்லாய்தணத்தலும்புணர்வுமற்றாய்
காதலும்வெறுப்புந்தீர்ந்தாய்நினைத்தலுமறப்புங்காணாய்
நோதலுங்களிப்புங்கூடாய்நுண்மையாயதிதூலத்தா
யாதன்முன்னொடுபின்சாராயடியனிற்புகழாநின்றேன். (௨௭)

விரிதருபடைப்புக்காப்புவிளைத்திடுதேவர்நாளுந்
திரியில்சட்டுவமேபோன்றுசெயற்படச்செயற்படுத்தி
யுரிமையிற்காலநோக்கியொழித்துமீட்டுறுத்தல்செய்தும்
புரிதருவிகாரஞ்சற்றும்புணராய்நிற்புணர்வான்வேட்டேன். (௨௮)

அரிதனைத்தனையலாரையளிவினைமுதலாச்செய்துந்
தெரியொர்பாற்படைத்திரண்டாம்வேற்றுமைப்பொருளாச்செய்து
மெரிகணைசெய்துமூன்றாம்வேற்றுமைப்பொருணீயென்றும்
புரிபடையருளிநான்காம்வேற்றுமைப்பொருள்புணர்த்தும். (௨௯)

செறியிளைப்பொழியவைந்தாம்வேற்றுமைப்பொருளுஞ்செய்து
நெறிகொளத்தழுவியாறும்வேற்றுமைப்பொருணிறைத்துங்
குறிகொண்மார்பமர்ந்தேயேழாம்வேற்றுமைப்பொருளாக்கொண்டு
மறிபெயர்ப்பொருளேநின்னையடைதரமுயலாநின்றேன். (௩0)

மாயவன்வந்துவேண்டமலரணைப்பொருட்டுமேய
தூயனைமகவாத்தந்துஞ்சுந்தரமுகங்கணன்கு
மேயவப்பிரமன்வேண்டவிண்டுவைமகவாத்தந்தும்
பாயகாரணமாய்நின்றபரமநிற்பழிச்சாநின்றேன். (௩௧)

திருமேனியோரொட்டுள்ளுஞ்சிலீமுகமொருமூன்றாக
விருமேனியுருளையாகவியவையொன்றாகமற்று
மொருமேனியிரதமாகவொன்றுதானவர்கள்சோரப்
பொருமேனிலாஞ்சோமூன்றும்பொடித்தாய்நிற்புணர்தல்வேட்டேன். ()

சயந்தனமறைத்துவைக்குந்தானமுஞ்சடைமுற்பூண
னயந்தபல்கலங்கள்வைக்கும்பேழையுநகுதாண்மேலா
வயங்குபொற்கழலிற்பூண்டுமருவலும்பிலமாச்செய்து
சயங்குலவடிகேணின்னைச்சார்தரமுயன்றுநின்றேன். (௩௩)

படுசுவையுணவுநல்குமட்டிலும்பகைபோய்ப்பாற
விடுகணையிட்டுவைக்குமாவமும்விரும்பிளஞ்சே
யடுபசிப்பிணிதவிர்க்குமருமருந்தன்னசெப்புந்
தொடுபயக்கடலாக்கொண்டதூயநிற்றொழுதல்வேட்டேன். (௩௪)

நகுசடைமுடியாய்போற்றிநஞ்சுண்டுமுடியாய்போற்றி
ககுபநல்லுடையாய்போற்றிகாண்டிபற்குடையாய்போற்றி
செகுமழுப்படையாய்போற்றிசிதைவளம்படையாய்போற்றி
மிகுதிறலேற்றாய்போற்றிவிரிந்தநீரேற்றாய்போற்றி. (௩௫)

சூலவெம்படையாய்போற்றிதொக்கதோலுடையாய்போற்றி
ஞாலமுண்விடையாய்போற்றிநதிமதிச்சடையாய்போற்றி
யாலமுண்டுடையாய்போற்றியலருளத்தடையாய்போற்றி
மாலமர்புடையாய்போற்றிவான்புகழ்நடையாய்போற்றி. (௩௬)

மறைமுதற்கலையாய்போற்றிவண்மதிக்கலையாய்போற்றி
யிறைமையிற்கலையாய்போற்றியிரசிதக்கலையாய்போற்றி
நிறைதிசைக்கலையாய்போற்றிநிலவுகைக்கலையாய்போற்றி
யறையொளிக்கலையாய்போற்றியரவமேகலையாய்போற்றி. (௩௭)

வரிசிலைமலையாய்போற்றிவயங்குகமலையாய்போற்றி
யுரியவமலையாய்போற்றியொண்டாழைமலையாய்போற்றி
புரியகமலையாய்போற்றிபுயலெனுமலையாய்போற்றி
யரியொடுமலையாய்போற்றியலரகமலையாய்போற்றி. (௩௮)

திருநகரரசாய்மன்னுஞ்சிவராசதானியென்னு
மொருநகரரசேபோற்றியும்பர்நாயகனேபோற்றி
பெருமறையின்னுர்தேருப்பேரருளாளபோற்றி
பொருவிடைப்பாகவாதிபுராணநாயகனேபோற்றி. (நுக)

பொருவரும்வளஞ்சாலாதிபுராணத்தினினிதுமேவி
மருவுயிர்தழைப்பநல்கிவாழ்கருந்தடங்கணம்மை
யொருபுறத்தமையக்கொண்டவுத்தமயோகிபோற்றி
பெருமையிற்பொலிகாயாரோகணப்பெருமானேபோற்றி. (சo)

என்றுநைந்துருகிக்கண்ணீரிழிதரவெதிர்நின்றானை
நன்றுளக்கருணைபொங்கநாமிருகரத்தால்வாங்கி
யொன்றுதலமையக்காயத்தொடுமாரோகணஞ்செய்தோமோர்
கன்றுதலின்றியொன்றாய்க்கலந்தின்பந்துளைந்தானன்றே. (சக)

இன்னதுகண்டவானோரிணர்மலர்மாரிபெய்தார்
பன்னகக்கிடக்கையானும்பங்கயத்திருக்கையானுந்
தன்னிகர்புண்டரீகமுனிவரன்சார்ந்ததெண்ணி
யன்னமென்னடையாயொல்லாவழுக்காற்றுண்முழுகினாரால். (சஉ)

வெங்கதிரவனுஞ்சீதமதியெனமெய்குளிர்ந்தான்
மங்கலமலரளாவிமந்தமாருதமுலாவிற்
றங்கணர்கருணையென்னுவிருந்ததென்றுடியாடித்
துங்கநன்முனிவரொல்லாந்தோய்ந்தனருவகைவாரி. (சஙு)

அறிவினிற்சிறந்தோர்பன்னாள்வருந்தியுமமையுமாறு
முறிவருமெமதுநாலாம்பாதமேமுயங்கிவாழ்வார்
செறிவலிச்சீயம்யானைத்திறன்மருப்புறவேரன்றிப்
பிறிதுமொன்றவாவுங்கொல்லோபிறழ்கருந்தடங்கணல்லாய். (சச)

பொருவரும்புண்டரீகன்புணருமினையமுத்தி
மருவியதினையவாதிபுராணத்தின்வலியாலென்பார்
பெருகுமிச்சறுவதீர்த்தப்பிறங்குமான்மியத்தாலென்பார்
வெருவருமினையமூர்த்திவிளங்கிடும்விசேடத்தென்பார். (சரு)

இத்தரம்புகன்றுவானோரிலங்குமச்சறுவதீர்த்தத்
துத்தமமேவமூழ்கியொளிருநக்குறிபூசித்துத்
தத்தமதிருக்கைசேர்ந்தார்தவலருமுனிவர்பல்லோ
ரத்தலமகலாராகியருந்தவம்புரிந்துவாழ்ந்தார். (சசு)

அன்றுதொட்டனையதீர்த்தமரும்புண்டரீகதீர்த்த
மென்றுபேர்புனைந்ததின்னுமெய்ம்மையேயென்றுகூற
வொன்றுவெண்கமலம்பல்லவுருகெழவலராநிற்குங்
கன்றுபல்லுயிருமின்பங்கலவநோக்கிடுகணல்லாய். (சஎ)

முன்னியபுண்டரீகமுனிவரன்சரிதங்கேட்டு
மன்னியசறுவதீர்த்தம்வாஞ்சையினுடியெங்கு
மன்னியமில்லாநம்மையன்புறப்பூசைசெய்வார்
மின்னியவடிக்கலப்பின்மேவுதலுண்மையாமால். (சஅ)

புண்ணியம்பாவமில்லையெனப்புகல்பொல்லாமூர்க்கர்
மண்ணியமணியேபோலுமாதவப்புண்டரீகன்
கண்ணியசரிதங்கேளார்கேட்பினுங்கையார்மேலோ
ரண்ணியதீங்கேசார்வரவரொடுமறைந்துளோரும். (சக)

விரும்புறமுன்னமாதிபுராணமென்பெயர்மேவிற்று
விருஞ்சிவராசதானியெனும்பெயர்பின்னராய
தரும்புகழ்மைகாயாரோகணப்பெயரமைந்ததஃது
கருங்கணுய்மரீஇயிற்றுற்பின்காரோணமெனவோவொன்றுன். (ருo)

என்றலுமுமைமகிழ்ந்தாள்காயாரோகணமெனும்பேர்
நன்றினிதமைதற்கேதுவுணவொன்றுனந்திப்புத்தே
ளொன்றியபுண்டரீகனுற்றதையெடுத்துச்சொற்றும்
வென்றிசைதேவதீர்த்தமான்மியம்விளம்பலுற்றும். (ருக)

புண்டரீகமுனிவர்மூன்றுங்காட்சியுரைத்தபடலம் முற்றிற்று.
ஆ படலம் கo-இ திருவிருத்தம் சுஉரு.

## தேவதீர்த்தப்படலம்.

தாவிரும்புகழ்ச்சனற்குமரன்றக்கவர்
நாவருநந்தியைநயந்துபோற்றுபு
தேவதீர்த்தத்துமான்மியமுஞ்செப்பென
வோவருமகிழ்ச்சியினுரைத்தன்மேயினுன். (க)

மலைமகளாகியவன்னைவானதிக்
கலைமதியொடுபுனைகடவுட்டாழ்ந்தெழா
வலைகடனுகைக்காரோணத்தற்புத
முலைவறக்கேட்டுமிக்குளமகிழ்ந்துளேன். (உ)

மறிதிரைப்பெருங்கடல்வரைப்பில்யாருநன்
னெறிகடைப்பிடித்திலர்நியமநீத்தன
ர்றிமறையவருநின்னடியிற்பத்திமை
செறிதரக்கொண்டிலர்கலியின்றீமையால். (ங)

குறையறமார்பகங்கொண்டநூலலான்
மறைமுதனூலெலாமதித்துக்கொண்டிலர்
நிறைபுகழ்நீற்றினைநீத்துவேறுவே
றுறைதரவிலாஞ்சனைநுதலுறுத்துவார். (ச)

நீறுமெய்ப்பூசுமந்தணருநேரதன்
மாறுவாயாற்பிறபெயர்வழுத்துவார்
வேறுரைசெய்தலுமெய்மையோவதற்
கூறுறவுள்ளத்திலுன்னல்கோடியே. (ரு)

அந்தணரொன்பதற்கமைந்தகாரணஞ்
சிந்தையிற்கொளாரிடுகுறிசெய்தாரினு
நந்தியதீத்தொழினயந்துளாரொனல்
வெந்தொழின்மேற்றெனவிருப்பிற்கொண்டுளார். (சு)

இழிதொழிலியற்றியும்யாவர்மாட்டும்வெம்
பழிபடுபட்டிமையாதிபண்ணியு
மொழிவறவுறுமுதல்விற்றுமோகையிற்
கழிபொருளீட்டலேகருத்தமைத்தனர். (எ)

பொருண்மறையவர்க்ளிப்புன்மைமேவலால்
வருணமாச்சிரமமும்வழீஇமற்றியாவரு
மிருண்மிடற்றுன்னடியெண்ணலோவினர்
மருண்மனத்துதரமோம்புதலின்மன்னினர். (அ)

மன்னவர்நெறிமுறைமாறுநூலுணர்
முன்னவருளுமுழுதொழின்முயற்சிசெய்
பின்னவருளுஞ்சிலரன்றிப்பேதறீஇ
யென்னருநெறிமுறையிகந்துமேவுவார். (கூ)

மற்றிவராயுளுஞ்சிறியவல்வினை
யொற்றியநோய்களோபெரியவொன்றுபு
முற்றியவறுமையான்மூடப்பட்டுளார்
பற்றியஞானமுமணுவின்பாலதால். (கய)

ஆதலிற்பிறப்பிவரகன்றுமுத்தியிற்
காதலிற்புகுவதெக்காலமன்றியுஞ்
சாதலிற்பெருந்துயர்தருபல்கும்பியும்
போதலிற்றளருமேபுடைவறத்தலால். (கக)

ஆணத்திற்பெருந்துயரனைத்துந்தீரக்கா
ரோணத்தின்வசித்துணைப்போற்றலொன்றுகொன்
மாணத்தினகப்படுமற்றுமுண்டுகொ
லேணத்தின்கரத்திறையியம்புகென்றனள். (கஉ)

என்றலுந்திருவுளமிரங்கியெம்பிரா
னன்றலினமதுகாரோணத்தல்குபு
பொன்றலிலாநமைப்போற்றலன்றியு
மொன்றலினென்றுளதுரைப்பக்கேட்டியால். (கஙு)

வினைதபுநமதுகாரோணமெய்ப்பெயர்
புனைகுறிக்கழற்றிசைப்பொருந்துநீரது
தனையருந்தவத்தரோசாரத்தக்கது
வனையினம்போலுயர்மாட்சிமேயது. (கச)

ஆதிநாளுமினிதமைக்கப்பட்டது
நீதியாடினர்க்கெலாநிரப்புநீரது
காதிமாபாதகங்காற்றவல்லதா
லோதிமாமுகிலனாயுளதொர்தீர்த்தமே. (கரு)

அறுபதின்றலையிடுமாறுகோடியென்
றுறுபெருந்தீர்த்தங்களொருங்குதொக்கது
மறுவறநினைப்பினும்வழுத்தக்கேட்பினுங்
கறுவறக்காணினுங்கதிகொடுப்பது. (கசு)

அதுநிகர்தீர்த்தமற்றகிலத்தில்லையான்
மதுமலர்க்குழலினாய்மற்றதன்சிறப்
பிதுவெனவுரைக்குநரேவர்யாமலாற்
புதுமையதறச்சிலபுகலுவாமரோ. (கஎ)

கூறுமுப்பத்துமுக்கோடித்தேவரு
நாறுகற்பகத்தொடைநயந்தவேந்தனு
மூறுதேமலர்த்தவிசுளானுந்தார்க்கிய
னேறுமாயனுமற்றையாருமுன்னைநாள். (கஅ)

இரணவேலவுணரோடேற்றுவென்றிட
மரணநீத்தமர்பெருவன்மையெய்துவா
னரணமாமருந்துபெற்றருந்தலெண்ணினார்
சரணமேவினருளந்தவாதகாட்சியாய். (கக)

புரைதபுமந்தரப்பொருப்புநாட்டினார்
விரைதரவரவநாண்விழைந்துபூட்டினார்
தரைபுகழ்பெருமதித்தம்பங்கூட்டினார்
கரைபொருதிரங்குபாற்கடலைவாட்டினார். (உ0)

ஓடதிகொடுத்தனருறக்கடைந்திட
நாடருஞ்சுவைக்குடநன்கெழுந்ததா
லாடல்சாலமரர்களதுகைப்பற்றினார்
வீடருமவுணரைவெரீஇயினாரரோ. (உக)

கலிமிகுமாற்றலர்காணவும்பமேல்
வலிமிகுபுயத்தவர்வெளவினென்செய்வா
மொலிகடல்வரைப்பகத்தாறுறுதுணைப்
பொலிவிடமெதுவெனப்புந்தியாய்ந்தனர். (உஉ)

கடையெழுவெள்ளமுங்கலங்கக்கண்டுவெந்
தடைபவர்தமைப்புரந்தழிவிலர்தமர்
மிடைவளத்திருநகர்வேறுகண்டிலே
முடையவர்செறிந்தகாரோணமொன்றலால். (உ௩)

என்றுதம்முளங்குறித்தெய்தினுரவண்
வென்றுயர்தீர்த்தத்தின்விழையுந்தென்கரை
நன்றுயர்சுதைக்குடநயந்துவைத்தனர்
துன்றுவண்புனல்படிந்துணறுணிந்தனர். (உ௪)

எண்ணியபடியிருந்தடத்திறங்கினு
ரண்ணியசங்கற்பமறைந்தமூழ்கினுர்
தண்ணியவெண்பொடிதயங்கப்பூசினுர்
புண்ணியமலிதரக்கரையிற்போதுமுன். (உ௫)

இருஞ்சுதைக்கும்பமோரிலிங்கமாகநா
மொருங்குளத்தெண்ணினுமொளியிலிங்கமாய்
மருங்கிருளறுத்ததுவயங்கக்கண்டுளா
லருங்குரைத்தெனப்புகுந்தமர்ந்துளேமரோ. (உ௬)

உலைவில்கன்ருப்புதட்பிழுக்கையோர்மகண்
முலையளந்திடுமொருகருவிமொக்கணி
யலைவறவிவையெலாமமருநாஞ்சுதை
நிலையகும்பத்திடைநீங்குவேங்கொலோ. (உ௭)

வானவர்சுதைக்குடமருங்குவந்தனர்
தானகுமிலிங்கமாய்த்தயங்கக்கண்டன
ரானதொன்றிஃதெனவறியகிற்றில
ரீனமிலுளத்திகைப்பெய்தினுரரோ. (உ௮)

செறிதருவானவர்திகைப்புமாற்றிட
வறிதருமவ்விலிங்கத்துநின்றியாங்
குறிதருமான்மழுக்கொண்டகையொடும்
வெறிதருகூந்தலாய்வெளிவந்தாமரோ. (உ௯)

வெளிவருநம்மடிவீழ்ந்துபண்ணவ
ரொளிவருசோதியேயெங்கடெய்வமே
யளிவருகருணையேயமலமேயெனத்
துளிவருங்கண்ணொடுதுதிசெய்தாரரோ. (௩௦)

துதிபுரிபவர்முகநோக்கித்தூயவித்
திதிபெறுதலத்திடைச்செறிந்தவாலுகப்
பொதியெலாமிலிங்கமாய்ப்பொலியுமென்றிடி
லதிசுவைச்சுதைக்குடமயலொன்ருகுமோ.

ஏற்றஞ்சாலமுதகடேசமென்றொரு
தோற்றஞ்சால்பெயர்பெறீஇத்தலங்குமித்தல
மாற்றஞ்சாறுதியொடுவணங்குவார்க்கரு
ளூற்றஞ்சால்வினையொழித்துதவுநாளுமே. (௩௨)

வண்பதுமாசனனாதிவானுளீ
ருண்பதுபோயதென்றுளம்புழுங்கலீர்
பண்பதுபராயவித்தடத்துநின்றுமோர்
நண்பதுசால்சுதைக்குடநன்றீகுவாம். (௩௩)

என்றொருசுதைக்குடமெழநினைந்தன
மன்றொருங்கட்டெலழுமமுதவிந்துவி
னன்றொருங்கெழுந்ததுநயந்துகண்டனர்
பொன்றொருதினமுமின்றென்றுபுங்கவர். (௩௪)

வெருவமுதெதிர்ப்படுஉவெறுத்தல்சாலமு
தருவருளாற்றரலமைந்ததன்றெனா
மருதுநிற்பார்களைவாங்கியுண்டுமெய்
மிருவலிபெறுமினென்றியம்பினுமரோ. (௩௫)

அருண்மறுத்திடுவதற்கஞ்சிவானவர்
தெருள்சுதைக்குடத்தினைச்சென்றுபற்றினர்
வெருளறயாவரும்விரும்பியுண்டனர்
மருளில்யாமாவயின்மறைந்துளேமரோ. (௩௬)

மறைமுடிவயங்குநாமறையக்காண்டலு
நிறைவெருக்கொண்டதுநீங்கிப்பின்னரு
முறையினத்தடம்படீஇமுன்னினார்க்கெலாங்
கறைதபுகருணைக்காரோணம்புக்கனர். (௩௭)

ஆண்டுநம்மையுமருளமைந்தநின்னையும்
பூண்டுபேரன்புளம்போற்றியாங்கோரீஇ
மீண்டுவந்தமுதகடேசமேவினார்
தூண்டுகாதலின்மிகத்துதித்துப்பூசித்தார். (௩௮)

விடைகொடுதேத்தமதிருக்கைமேவினார்
குடைபவர்பாதகங்குமைக்குமப்புனல்
கடையுருத்தேவபுட்கரணியாயது
நடைகொளிவ்வேதுவாலுணர்திநங்கைநீ. (௩௯)

தேவதீர்த்தப்பெயர்செறிந்தவாவியுள்
யாவர்போய்க்குடையினுமியைந்தவெவ்விய
பாவநூறுயிரகோடிபாறிடு
மேவமால்வளாவருவிமலையின்னுங்கேள் (௪௦)

வேறு.

ஆயவெங்கதிரொனவொருபொழுதுசெய்யரசும்
பாயதாரகைக்கணநடுப்பொலிதருபண்புந்
தூயவானவர்தம்பசியவித்திடுதுணிவு
மேயசீதளகலைமதியென்பவன்மேனுள். (சக)

பரமடந்தையர்ப்புணர்தலிற்படுபழிபாவந்
திரமடைந்திடுமென்பதுதன்னுளந்தெரிந்துஞ்
சிரநெடுந்துயர்விளைத்திடுகருமலச்செருக்கால்
வரமிகுங்குருமனைநலம்புணர்வதுமதித்தான். (சஉ)

ஆன்றசாலிமுற்பற்பலருயர்புற்றதறிந்துஞ்
சான்றபேரொழிற்றாரையுஞ்சந்திரனழகே
மான்றவுள்ளத்துமதித்தனள்வருபழிமதியா
டோன்றவாண்டளப்பாற்பிழைத்திடுவதேதுணிந்தாள். (சங)

இருதிறத்தருமின்னராயொழுகுழியொருநா
ளொருகழைச்சிலைகோட்டியொண்சுருப்புநாண்பூட்டிக்
குருமலர்க்கணையெடுத்தெடுத்தளப்பிலகூட்டித்
தெருமரச்சமர்செய்தனன்மாரவேள்சினந்து. (சச)

வருமலர்க்கணைபாய்தலுநெஞ்சமாழாந்து
கருகிருட்கதிரரசனில்லமையத்திற்கசிந்து
வெருவரச்சென்றுதாரைமென்மலர்க்கரம்பிடித்தா
னருவருப்புறுதவளுமற்றவனுடனணைந்தாள். (சரு)

கொண்டுபோயொருதன்மனைக்குறுகிமெல்லமளி
மண்டுவான்பரியங்கத்தினிருத்துபுவரம்பு
விண்டுமேல்விழாமெய்யுறத்தழுவிவாயூற
லுண்டுதேக்கியொண்முகத்தொடுமுகமியைத்துவந்தான் (சசு)

முத்தமுண்டனனிளமுலைவருடினன்முழுதுஞ்
சித்தமின்புறவாக்கலைநெகிழ்த்தனன்செழும்போ
தொத்தவொண்கடிதடத்தளைவிடுத்தனனுவப்புற்
றத்தகைப்படுங்கடலகத்தழுந்தினனுலோன். (சஎ)

மதியழிந்தொருமதிகுருமனையொடிவ்வண்ணங்
கதியமைந்தவர்போன்றுபன்னாளுளங்களிக்க
விதிகொளந்தண்ன்மனைவியைக்காணலன்வெருவித்
திதியமைந்தவைப்பெங்கணுந்தேடினன்றெரிந்தான். (சஅ)

பாவகாரியீதாற்றியதென்னெனப்பதறித்
தேவர்வேந்தனேடொருழியடைதரத்திரட்டி
மேவவெவ்வியமதிபுரிசெயலெலாம்விளம்பி
யாவநாந்துறவடைகுதுமினியெனவறைந்தான். (சகூ)

குரவன்வாய்மொழிசெவித்துளேகுறுகலுங்கொதித்துப்
பரவுவானவர்யாவருமிகமனம்பதறிக்
கரவணுகியமதியினைப்புடைத்திவட்கழித்து
விரவுதுன்பமுங்கழிக்குதுமெனவெகுண்டெழுந்தார். (ருo)

அதுதெரிந்துமிக்கஞ்சுபுவிதிர்விதிர்ப்படைந்து
விதுபளிங்கமரிடம்புகூஉவவனடிவீழ்ந்து
கதுமெனச்சுரர்வளைந்துபோர்குறித்ததுகாய
விதுவெனவதென்றவனுமற்றவுணருக்கிசைத்தான். (ருக)

தீயதானவர்வட்டுடையிறுக்கினர்சினத்திற்
பாயமாமுகரோமமுமுறுக்கினர்பலகை
யாயவாள்சராசனமுதல்யாவுங்கையமைத்தார்
மாயவான்சமர்குறித்துவானுடைவளைத்தார். (ருஉ)

திதியளித்தவர்வளைந்தமைதெரிந்துகண்சிவந்து
பொதிகுடச்சுதையெடுத்தயின்றமரராய்ப்பொலிவார்
கொதிசமர்த்திறற்கோலத்திற்குறைவறக்கொண்டு
மதிபிழைப்பதின்றெங்கெனவாளமரோற்றூர். (ருங)

சிலைவளைத்தனர்செறியநாணேற்றினர்திக்கின்
மலைபிளப்புறமாமதயானையுமயங்கித்
தலைவிதிர்த்திடநாணொலியெழுப்பினர்சலதி
யலைமுழக்கமுமச்சுறத்தோள்புடைத்தார்ப்பார். (ருச)

ஒன்றுபத்துநூறுயிரமெனக்கணையுகைப்பார்
சென்றுசென்றுவாள்வீசுபுசாரிகைதிரிவா
ரன்றுவாள்வெட்டுப்பலகையிற்றகைந்துசென்றடர்ப்பா
ரின்றுவென்றிமற்றெமதெனநெடுமொழியிசைப்பார். (ருரு)

பரியுகைப்பவர்பரியுகைப்பவரொடுங்கழைகொல்
கரியுகைப்பவர்கரியுகைப்பவரொடுமுருளைக்
கிரியுகைப்பவர்கிரியுகைப்பவரொடுஞ்செங்க
ணரியுகைப்பவரரியுகைப்பவரொடுமமர்த்தார். (ருசா)

மண்ணிடைப்புகும்வாளராக்குலம்பலவயங்குங்
கண்ணிடைப்புகுமழைக்குலத்திடைப்புகுங்கார்கோ
ளெண்ணிடைப்புகுந்திசையெலாம்புகுமிருதிறத்தார்
புண்ணிடைப்புகுந்தருவியபொருதிறற்பகழி. (ருஎ)

முடியமுத்தியமணிபலதெறித்திடமுழுதுங்
கடிமணிக்குழைசிதர்ந்திடத்தோள்வளைகழல
வடிபிடித்தனர்மேலெடுத்தறைந்திடுமள்ளர்
தடியிடைக்கதிர்ச்சாலிகொன்மள்ளரும்போன்றூர். (ருஅ)

மொழிந்தமள்ளர்களறைதலுமுற்றியசெந்நெல்
கழிந்தவையிணைமேலெடுத்தெறிதிறங்கடுப்ப
வழிந்தநெஞ்சிலாவொருவனையொருவர்தொட்டறைந்து
பிழிந்தவாற்றல்செய்தெடுத்தெடுத்தெறிவர்மேற்பிறங்க. (ருகூ)

தோளிழந்தவரிழந்தனர்தும்பைமாலிகையுந்
தாளிழந்தவரிழந்தனர்தழங்கொலிக்கழலும்
வாளிழந்தவரிழந்தனர்பிடித்தவன்கையு
நாளிழந்தவரொனுவிருதிறத்தருணலிந்து. (கூ0)

ஆவமாகிமெய்சிவப்பவும்விழிச்சிவப்பழியா
ரோவமேயெனநிற்பினுநிற்பரஃதொழிந்து
மேவமுன்வைத்தபாதம்பின்வைத்திடாவிறலார்
பாவமுந்தருமமுஞ்சமராடியபடியார். (கூக)

ஒருவர்தண்டமற்றொருவர்கைத்தண்டத்தாலுடைய
மொருவர்தோமரமொருவர்தோமரத்தினாலொழியு
மொருவர்வெஞ்சரமொருவர்வெஞ்சரத்துடைந்தோடு
மொருவராற்றன்மற்றொருவராற்றலிற்றனையுதிரும். (கூஉ)

படையிழந்தவரொண்ணிமெய்ப்புதைபடைபறித்துத்
தடையிலாதெதிர்சமர்செயவம்மினென்றழைப்பார்
படைபறித்தவருளுஞ்சிலர்கோணுதல்பார்த்துத்
தடையிலாதுடற்புண்ணிட்டுநிமிர்த்தனர்சார்வார். (கூரு)

மேயவாகவப்பூமியின்மதிதரவீழ்ந்த
பாயகேடகம்பரிகலம்பரந்துவீழ்மூளை
யாயசொன்றிமற்றதன்மிசையீருளம்பருப்பு
நேயமென்றசைநிணமெலாநிரப்பியகறிகள். (கூச)

என்புவற்றல்வீழரக்குநீரினிதுபெய்கிருது
வன்புமேயதோன்றூடியபரிவட்டமாக
வன்புமேவியசயமகணிவேதனமமையும்
புன்புலாலுடல்சாய்ந்தவர்பணிபவர்போன்றார். (கூரு)

இந்தவாறமர்நிகழ்வுழியுலகெலாமேங்கச்
சந்தநான்முகனறிந்தவணடைந்தமர்தணித்துப்
பந்தமேவியமதியிணைக்கூயவற்பார்த்து
நந்தநீயெவன்செய்தனையென்றிதுநவில்வான். (கூகூ)

கற்றகல்வியும்பரிதியோடெண்ணிடுகணிப்புஞ்
சொற்றகோள்களுளொன்றெனத்துலங்கிடுமாண்பு
மற்றமோவவெவ்வுணவுநன்றாக்கிடுமமைவும்
பெற்றநீயெவன்செய்தனையறிவிலாப்பேதாய். (கூஎ

ஈரநெஞ்சிலாமுருடருமிதுசெயத்துணியார்
வீரமொன்றிலாவலியுருமேல்விளைந்திடுமே
பாரமோவுருப்பர்தகந்தடிக்குமேயயலார்
தாரம்வௌவினோர்நரகன்றிச்சார்வதுமுண்டோ. (சுஅ)

தீயசெய்தனைதாரையைவிடுமதிசெத்தோ
ஞயசெய்கையையுமிருடனிருந்துமென்றறைந்தான்
தூயதேவர்கள்குரவனைப்பிழைத்தவித்துட்டன்
மேயவேள்வியிற்பாகமெய்தானெனவிதித்தார். (சுகூ)

நிலைகலங்கியவிமகரனெடிதுயிர்ப்பெறிந்து
தலைவனைந்தொருதாரையைவிடுத்தனன்வியாழங்
கலைசொலுங்கமுவாய்செய்துகைக்கொடுபோனு
னலைவில்வானவர்யாருந்தம்மிருக்கைசென்றடைந்தார். (எ0)

முத்தவாணகைத்தாரைசின்னாளிற்சூன்முதிர்ந்து
வித்தநேரொருமைந்தனையீன்றனள்வெய்யோ
னொத்ததானவனென்மகனெனவழக்குரைத்தான்
சுத்தவாரியன்றன்மகனேயெனச்சொற்றான். (எக)

இருவருங்கலாய்த்தின்னணமாடுறுமேல்வை
மருமலர்த்தவிசோன்முனம்போலவேவந்து
குருமலர்க்குழற்றாரையைநேர்வரக்கூவிக்
கருவில்யாவராலமைந்ததிக்கான்முளையென்றான். (எ௨)

என்றுகாலையிலறிந்திலாய்போலவிங்கென்னை
யொன்றநீவினுவியதெவன்மதியெனவுரைத்தா
ளன்றவன்மதியாலெனல்குறிப்பினாலறிந்தான்
வென்றதானவன்பாலுறமகவினைவிடுத்தான். (எ௩)

அன்னமூர்பவன்றனமர்வளநகரடைந்தான்
பின்னமேவுறுத்தீவினைபெருகலான்மதியோன்
முன்னமேவியதேசுமுற்றொழிதரமுன்னி
யென்னகாரியஞ்செய்தனமென்றிழித்திருந்தான். (எ௪)

மதலையாம்புதனைத்தழீஇமகிழ்தலினிந்த
விதலைதீர்திறமின்றெனமெலிந்துளத்தெண்ணி
முதலைசூழ்புவித்தீர்த்தங்களிடைச்சென்றுமூழ்கி
னதலைவாந்துயர்தீர்க்குமென்றவணிவந்தடைந்தான். (எ௫)

தூயகங்கைமுற்றீர்த்தங்களனைத்திலுந்தோய்ந்தான்
காயமேவொளிமுன்னையிற்பொலிதரக்காணான்
மேயபாதகம்வீந்திலதின்னுமென்செய்வா
மாயமோவிஃதென்றமுதிரங்கினன்மதியோன். (எசு)

அந்தவேலையின்மகதியாழ்முனிவரனடுத்தான்
முந்தமேவியயாவையுமறிதரமொழிந்து
சந்தமேவவனடிமிசையழுதுதாழ்ந்தெழலும்
[..]வாறுவதுண்டெனவணையவனவில்வான். (௭௭)

[..]கடற்கணாகைக்காரோணத்தைக்குறுகி
[..]ணவுதேவதீர்த்தத்துநீமூழ்குவையாகிற்
புணரும்பாதகமெவ்வளவிருப்பினும்போகு
[..]மணருமாறுநீமுன்னையிற்பொலிவையென்றுரைத்தான். (௭௮)

[..]சொற்றவாசகங்கேட்டலுமுவகையிற்றுளைந்தே
[..]மேதமினாகைக்காரோணம்வந்தடைந்தா
[..]லுற்றவானவர்பலர்குழீஇக்குடைவதுமுணர்ந்து
வெற்றதேவபுட்கரணியாதெனவினாயினனே. (௭௯)

[..]துதானெனநிகழ்த்தினருவகையிக்கெய்திச்
சாதுவானவரவரொடுமெத்தடம்படிந்தான்
[..]துதீவினைவேரொடுங்கருகியதுடனே
[..]துமுன்னையினுருப்பொலிந்தெழுந்தனனுவந்தான். (௮0)

வெய்யபாதகமுழுகுமுன்விடுபடப்போக்கி
[..]யமுன்னையிற்பொலிவுநன்கருளியதென்னில்
[..]வையமெங்கணுநாடினுமிதுபொருஉம்வாவி
செய்யவாயினுயுண்டுகொல்செப்புவதினியென். (௮௧)

அரவினால்விடுபட்டவனுத்தலங்காலோன்
புரவினாலுயர்நற்றிருக்கோயிலுட்புகுந்தே
[..]வினாற்புரிகண்டத்தெம்மிணையடியிறைஞ்சி
[..]னாற்பொலிவின்னையும்வழுத்தினனுமையே. (௮௨)

[..]ருநாதங்குறிப்பதிட்டையுமினிதுறச்செய்து
[..]ருநதுபூசனையொருமதிசெய்தனன்போற்றத்
திருந்துபலவரங்களுந்தந்துதேவரோடளாவி
[..]ருந்துவேள்வியிற்பாகமும்பெறும்படியளித்தோம். (௮௩)

[..]செபாம்பல்கண்முகமலர்ந்திடவெழும்வீபத்
[..]செப்முன்னையிற்சிறப்படைந்துவப்புறப்பணிந்து
[..]ணாசெய்நாமருள்விடையொடுந்தன்பதம்புகுந்து
[..]செய்தன்செயல்புரிந்துவாழ்ந்திருந்தனன்களித்தே. (௮௪)

மன்னுதேவதீர்த்தப்பெருமான்மியம்பகரி
[..]ன்னுதாலளவிட்டெவர்நவின்றிடவல்லார்
[..]தனினுமமுதினுநனிசுவைபடுமா
[..]னுமொன்றெடுத்தியம்புதுமினிதுகேட்டிடுதி. (௮௫)

வே று.

பின்னுநானுமருங்குல்விமலைகேள், பன்னுமண்ணுலகெல்லாம்பரிப்பவன்
பொன்னுநேரில்குணத்தன்புரூரவா, வென்னுநாமத்தரசனிருந்தனன். ()

மதிக்குலஞ்செய்தவத்துறவந்தவன், விதிக்கொடுந்திக்குமேவும்புகழினன்
றுதிக்கிரங்குநந்தாரொடுழுவாழ்க்கையா, ஞதிக்குமன்பினுயிரினிதோம்
[வான். (அ௭)

அறியுமேன்மையமைச்சர்புரோகிதர், செறியுந்தானைத்தலைவர்சிறந்துற
நெறியுமாலெனநேர்ந்துதழுவித்தோர், மெறியுஞ்செங்கோலினிதுசெலுத்
[துநாள். (அ௯)

மீனவார்கடல்சூழ்புவிவேந்தகே, ளானவேட்டவினையதுதாழ்த்தலாற்
றுனவாரணமாதிதழைத்தெழூஉ, வீனமாற்றுமென்றுரிறைஞ்சிச்சிலர். ()

கேட்டவேந்தன்கிளர்ந்ததுதாழ்த்திடி, லூட்டவாம்பயிராதியொழிதரும்
வாட்டமல்லதென்மன்னுயிர்க்குண்டெனு, வேட்டமாடும்விருப்பினெழுந்
[தனன். (க0)

அரையிற்காழுரியாடையுடுத்தினன், விரையக்கச்சுடைவாளொடும்வீக்கி
னன், கரையுமெய்யிற்கவசம்புனைந்தனன்,புரையிலாத்தலைச்சாத்தும்பொ
[ருத்தினன். (கக)

முதுபெரும்பகையாளர்முடித்தலைக், கதுமெனக்குரம்வைத்துயிர்காற்றிடு
வதுகடுப்பின்மறலுங்கொடியகாற், றதுதிறம்புமடற்பரியேறினன். (க௨)

கூற்றம்பல்லுருக்கொண்டன்னகொள்கையர், சிற்றமின்றியுந்தீயெழநோ
ரேற்றமிக்கவிருந்திறல்வீரர்க, ளூற்றமிக்கவுவகையின்முந்தினர். [க்குவா

காயுஞ்சீற்றமும்போந்தின்கருக்குநேர், வாயுமுள்ளால்வலைதருதோகையு
மேயுஞாளிக்குலம்பலவீண்டின, தோயும்வார்வலையாளருந்துன்னினர். ()

மிடலொடுங்கலில்வெம்பகையோருயி, ரடல்செயும்படையாள்கைப்புரு
வா, விடலிலார்தொடர்வீரனெனப்படுங்,கடலொடும்பெருங்காட்டிட்புகு
[தனன். (க௫)

ஒடியெறிந்தனர்வாருமொழுக்கினர்,கடியவார்வலைசூழவுங்கட்டினர்[ஞர்
அடியெறிந்துதுவன்றியவேடர்கள், வெடிகொளும்பல்விலங்குமெழுப்பி

சிங்கம்யாளிசினக்குந்தரக்குமா, தங்கமெண்குதவாவலிச்சல்லியங் [ள
துங்கமான்கருங்கேழற்றொடக்கத்த, வெங்கண்மாக்கள்வெருவியெழுந்த

கூடிச்சென்றுசுரிகையிற்குத்துவார்,நாடிப்பாய்ந்துலைவநாந்தகம்வீசுவார்
தேடித்தேடிச்சிலைக்கணைஅற்றுவார், வாடிச்சோரவிவ்வாறமராற்றினர்.

வாலிழந்தனபல்லவலிநடைக், காலிழந்தனபல்லகலங்கிமெய்த்
தோலிழந்தனபல்லதுடிதுடித், தோலிழந்தனபல்லவுடன்றரோ. (கக)

துடித்திடுஞ்சிலதோகையெடுத்துமன், ணடித்திடுஞ்சிலவாரயிலாதியைக்
கடித்திடுஞ்சிலகானகர்துள்ளெழ, வெடித்திடுஞ்சிலமிக்கபன்மாக்களுள்.()

இன்னவாகவனத்துவிலங்கெழூஉப், பின்னமாகிப்பெயர்தருகாலையிற் [ன்.
சொன்னவார்கழற்றுன்றல்புரூரவா, மன்னனேர்ந்துவடிக்கணைதூவினு

புலிமுகத்திற்புகுந்தோர்நெடுங்கணை, வலியிற்பின்சென்றுவாலடித்தோன்
றுவ, மெலிவிலாவிவ்விலங்குக்கிரட்டைவா, னலியுமாறுற்றதென்னென
நாடவே. (சo௨)

ஏற்றயானைமுகத்திலிருகணை, யேற்றவுள்ளானுழைந்தும்வெளியினுந்
தோற்றநான்குமருப்புச்சுமந்ததெத்,தோற்றமென்றுதுணிதரவாய்வரால்.

மடங்கலேயெனவல்விரைந்தேகியோர், மடங்கன்மார்புகிழித்ததொர்வன்
கணை,மடங்கல்கூடாவலிசாலொருநர,மடங்கல்கீண்டவலியபுண்மானவே

கணைபொன்றுய்ப்பக்கடுகிமதிக்கண்வாழ், துணையணைந்திடமேற்செலுஞ்
சூழ்ச்சிபோ, லிணையும்வேகத்தெழுந்துமேற்றுவுவ, பிணையொடும்பயில்
[பெட்பில்குரங்கமே. (சoரு)

மோகவான்முனிந்தாலுமுனிவுவீண், போகமேன்மயிர்க்கேடகம் போர்த்
தென, வாகநீண்மயிராருங்குடாவடி, வேகமாறும்விடுகணையொன்றனுல்.

கோடிழந்தனகுஞ்சரமார்பகத், தோடிழந்தனவேங்கையுயிர்திறற்
பாடிழந்தனபஞ்சானனம்பெருங், காடிழந்தனமொய்த்தகவரியே. (சoஎ)

வாளியோயினும்வைநுதிவேல்விடு, மீளியோயினும்வெவ்வியகட்கமா
மாளியோயினுமாங்காங்குப்பற்றிடு, ஞாளியோய்விலதாயினநாடினே. ()

சூலடைந்தபிணைவைத்தொலைத்திலான், மாலடைந்தபறழும்வதைத்திலா
னேலடைந்தவுழுசினமாக்களே, வேலடைந்தவிருந்தென்றுநூறுவான், ()

மேயவித்திறம்வேட்டைவினைமுடித், தாயமன்னனடுபரிமேற்கொளாப்
பாயவெம்பசிபற்றிவருத்தலாற், றேயமாநகர்துன்னமுடுக்கினன். (ககo)

பரிவிரைந்துபடருநடவையோர், விரிகிளைத்தருநீழலோர்வேதியன்
சரிவருத்தந்தணிப்பக்கிடந்தனன், புரிநிறத்திற்புரவிமிதித்ததே. (ககக)

உளைவயப்பரியோரடிவைத்தலும், வளைமருப்பெருமைப்பகடூர்பவன்
விளைநயப்புறமேவுநகர்செல்வா, விளைதிறத்தினனீரடிவைத்தனன். (கக௨)

கண்டமன்னன்கலங்கிக்கவன்றனன், மண்டவந்ததுவன்பிரமக்கொலை
யெண்டவாவிதற்கென்செயலென்றுசீர், கொண்டமாதவர்கூட்டங்குறுகு
[வான். (ககங)

அண்மையோர்பொழிலாங்குவசித்திடும், வெண்மைதீர்விசுவாமித்திரன்
முத, லொண்மையோர்திரளுற்றுப்பணிந்தன, னெண்மையோவநடந்தது
[யம்பினன். (ககச)

கேட்டமாதவர்கேழ்கிளர்வேந்தநின், வாட்டமோவுமறையவனுக்கிடு
காட்டகத்துக்கடனுரியோர்க்கொடு, நாட்டமேவநடத்துதிநன்றரோ. ()

பின்னர்நீபரிமேதமகம்பிணை, நன்னர்மேவநடத்திடுவாயெனின்
மன்னரோறனையாய்வந்ததீங்கொடு, முன்னராற்றியதீங்குமுருங்குமால்.()

என்றுகூறவிறைஞ்சினனேகினன், பொன்றுவேதியனுக்குப்புரிகட
னன்றுசெய்நரைக்கொண்டினிதாற்றினு, னென்றுமாமகஞ்செய்வதற்கு
[ன்னினன். (கக௭)

அளவிலாமறையந்தணரைத்தழீஇ, யளவிலாச்செம்பொன்வாரியளித்தன
னளவிலாவறமாக்கும்பரிமக, மளவிலாப்புகழானினிதாற்றினன். (கக௮)

அதுபுரிந்துமகன்றிலதாய்ப்பழி, கதுவிநீழலிற்பற்றக்கலங்கியே [னன்.
யெதுசெய்துய்வலினியெனவேதங்கள், சதுவுமோர்ந்ததவுமியற்சார்ந்த

முன்னடந்ததனைத்துமொழிதலு, மன்னமாதவனுள்ளத்தினுய்ந்தனன்
பின்னமின்றிப்பிறங்குபன்னூல்களுஞ், சொன்னதீர்த்தங்கள்யாவுந்துளை
[யென்றான். (க௨0)

தூயகங்கைமுதற்பலதோயமு, மாயவன்பினணைந்தணைந்தாடினான் [ன்.
பாயசெம்பொன்முற்றானமும்பண்ணினன், றீயதாய்த்தீர்தரக்கண்டிலா

கிட்டும்வாசமராற்றற்கெனக்கெழீஇ, யொட்டுங்கோபித்துடன்றெழுமார்
பகந், தட்டும்போக்குத்தடுக்குந்தடம்புயங், கொட்டுமார்க்குங்குதிக்கும
[திர்க்குமே. (க௨௨)

பெயர்விலாதபிரமகத்திக்கெவன், செயுலெனுவுளந்தேம்பிக்கவுதமி
யுயர்நதிக்கரையுற்றகவுதம, னயர்வில்பாதமடைந்தனனண்ணலே. (க௨௩)

அன்னமாதவற்கோதியமுதன, னென்னபாதகமேனுமுள்ளெண்ணலை
யின்னநீருங்கழுவாயியம்புது, மன்னவென்றுவகுத்துரையாடுவான். ()

செறிவளங்கொடென்றேசத்துள்யாவரு, மறிபுலிக்கொடியான்றிருநாட்
டிடைக், குறிகொள்கீழ்கடல்வேலையிற்கோலமார், நெறியினின்றுநிலவுங்
[காரோணமே. (க௨௫)

கேடுபோக்கிடுங்கேத்திராசமென், றூடுநாமத்தொடுமத்தலமுறும்
பாடுசாலதினுள்ளதுபாரொலா, நாடுவானவதீர்த்தநராதிப. (க௨௬)

அந்தத்தீர்த்தத்தடைந்துமுழுகுறி, னெந்தப்பாதகமுங்கழிந்தேகிடு
மந்தத்தானத்தமரிலிங்கந்தொழி, னெந்தப்பேறுமெளிதிற்கைகூடுமே, ()

அடையின்னேயென்றரசனையேவினன், மிடையுமோகைதுளும்பிடவேந்
தனுங், கடையுறுத்திருக்காரோணத்தெய்தினன், குடையுந்தெய்வப்புனல்
[குடைந்தானரோ. (க௨௮)

குடைந்தபோதேகொடும்பழிமாய்ந்தது, மிடைந்ததேசின்விளங்கியெழு
ந்தன, னடைந்தவோகையனுய்நம்மெதிரடைந், துடைந்தநெஞ்சினுருகித்
[தொழுதனன். (கஉகூ)

ரேயமேமிகநின்னையும்போற்றினன், றூயதெய்வச்சுவைப்புனற்றென்க
ரை,மேயகும்பத்தலமும்விழைந்துதாழ்ந், தேயவங்கணிருந்தனனென்ப
[வே. (கங௦)

இதுதெரிந்திலனித்தனைநாளெலா, முதுகொடுந்துயர்மூழ்கலுற்றேனந்
வெதுவிரும்பினுமீயுமித்தேமெனுப்,பதுமமாதிபலகொடுபூசிப்பான்.[தோ

பரவுசெம்பொன்பரப்பியுயர்கருக், கிரகமோடத்தமண்டபங்கேடிலா
வரனிலாவியமாமண்டபம்மெழில், விரவவாற்றினைக்கும்விளைத்தனன்.

மலழயுரிஞ்சுமதிலைந்தெடுத்தனன்,றழைபொற்கோபுரம்பல்லசமைத்தன
ன், விழையுந்தூண்பலமேவியமண்டபம், பிழையில்யாவும்பெருகவியற்றி
[னன். (கஙங)

அருள்விராயவமுதகடேசத்தும், பொருள்விராயபலவும்புரிந்தனன் [ன்
றெருள்விராயவண்டெய்வப்புனற்குக்கா, மருள்விராயபடியும்வகுத்தன

விளைநிலங்களுமேதகுசோலையு, மிளைகொணந்தவனமுமியைபெருங்
களையமைந்தகனகப்பணிகளு, மளையும்பட்டுடையாதியபல்லவும், (கஙரு)

குடைவெண்சாமரைகோணுததண்டங்கோ,ணடைதருந்தண்டமான்றபல்
பாத்திர, முடைதராச்செம்பொனூர்தியுமற்றுநன், னடைகொள்வேந்தன
[மக்குறநல்கினன். (கஙசு)

அந்தமாத்தலத்தன்பின்வசிப்பவர்க், குந்தவேண்டுவயாவுமுதவினு
னந்தமாரருள்பெற்றுநலம்விராய்ப், பந்தமோவியபார்த்திபனேகினன்.()

தேவதீர்த்தப்பெருமையைச்செப்பினு,மேவவின்னும்விளம்பிலனேகமாம்
பாவமற்றதன்பேர்சொலப்பாறிடு, மோவநேருமொளியிழைமாதராய். ()

என்றுகூறவிறைவிமகிழ்ந்தன, னன்றுவானவதீர்த்தநலஞ்சொற்று [ம்.
மொன்றுமாமுனிதீர்த்தத்தினுண்மையுங், கன்றுசோகங்கழியப்புகலுவா

தேவதீர்த்தப்படலம் முற்றிற்று.

ஆ படலம் கச-இ-திருவிருத்தம்-எகூச.

## முனிதீர்த்தப்படலம்.

நலமலிசனற்குமரனந்திதன்மலர்ப்பாதம்
புலமலிதரப்போற்றிப்புகர்தபுமுனிதீர்த்த
வலமலிமான்மியமும்வகுத்தருளென்றிரப்பப்
பலமலிதவத்தனையான்பன்னுவனுவப்புற்றே. (க)

ஒருபரசிவக்குறியையுன்னிடமனமுண்டு
பொருவருமரியதுதிபுரிதரவாயுண்டு
மருவருச்சனைபுரியவளவியகையுண்டு
திருவுருநோக்கிடுவான்சிறப்புறுவிழியுண்டு. (ச)

மற்றவன்புகழ்கேட்கவார்தருசெவியுண்டா
லற்றமதறப்பழகவவனடியவருண்டு
சொற்றபத்திமைபுரிந்துதொழுதிடத்தலையுண்டு
கொற்றமென்பாலன்றிக்கொடுநமற்கெவனென்பான். (ரு)

பண்ணவனடிப்பத்திபசுமரத்தறையாணி
வண்ணமென்றிடவுளத்துமருவிடக்காசிமுத
லண்ணலந்தலமனைத்துமடைந்தடைந்துறப்போற்றிக்
கண்ணகன்கடலூரைக்குறுகினன்காதலொடும். (சு)

தலையமைகடலூரிற்றற்பரசிவலிங்க
மலைவறப்பூசைபுரிந்தன்புறவமர்காலைக்
கொலையமைபிணர்க்கோட்டுக்கோட்டுவெம்பகடேர்ந்து
மலைகருமலைபோலவந்தனன்கூற்றுவனே. (எ)

கூற்றுவன்வரல்கண்டுங்கொண்டகொள்கையிற்சிதையா
னாற்றுவதருச்சனையேயன்றிமற்றொன்றுமிலான்
மாற்றுவதிலையாகவந்தெனைத்தன்னுலகத்
தேற்றுவதறிவாமென்றிருந்தனன்மார்க்கண்டன். (அ)

கண்டகண்மிகப்புலிங்கங்கான்றிடக்கடுங்கோபங்
கொண்டவனுயுருமிற்குளிறுபுகொதித்துறப்பி
யெண்டகநான்வந்ததெண்ணலைசிறுபிள்ளாய்
வண்டமர்குழல்பாகற்போற்றுபுவதிகின்றாய். (கூ)

அரியயன்முதலாயவமரர்முற்பல்லோரும்
விரிதருமெனதாணைகடந்திலர்மெய்ம்மையிது
புரிதருபூசையைக்கண்டஞ்சுபுபோனுவலோ
தெரிவினைதரவம்மோவென்றனன்சினமறலி (க௦)

பரசிவனடிப்பூசைபண்ணிடுபெருநோன்பி
னுரவமைநெறியினன்யானுனக்கெளியவனல்லேன்
புரவமையாதபிறர்போலெனைநினையற்க
திரமுறவந்தவழிச்செல்லெனமுனியுரைத்தான். (கக)

என்னுடைவலிசிறிதுமெண்ணலைசிறுபிள்ளா
யுன்னுடையெழுத்தொழிந்ததுணரொணநமன்சொற்றான்
முன்னுடைத்தலையெழுத்தேமுன்னினையுளத்தமைத்த
மன்னுடையைக்தெழுத்துமதித்திலைபோலுமென்றான். (கஉ)

ஓவருமாபாசமுள்ளதென்றான்மறலி
யேவருமாபாசமிரிப்பதற்கடைவானைத்
தாவருமாபாசஞ்சாடெனச்சார்ந்தவெனக்
காவருமாபாசமாமெனமுனியுரைத்தான். (கங)

தண்டமொன்றுளதுதலைதகர்த்திடுவேனெனவே
தண்டவன்றோளியமன்சாற்றினன்முனிவரைக்கோ
தண்டமுளானடியேசார்பெனச்சார்ந்துபுரி
தண்டமுன்னினதுவலித்தண்டமென்செய்யுமென்றான். (கச)

சூலமொன்றுளதெடுத்துத்துளைப்பனின்னிறமென்றா
ஞாலமுண்டவன்றிருக்கையமர்தருதிரிசூலங்
காலமொன்றுமுனைத்தும்வாய்ப்பெய்துகழிக்குமது
போலவொன்றிலையென்றான்புன்னகைமழமுனிவன். (கரு)

இளைத்திலன்மொழிப்போரிலெனச்சினந்தலைக்கொண்டு
வளைத்தவன்மருப்பெருமைப்போத்தினைமறலூர்த
விளைத்ததுதன்கழுத்தின்மணியொலிவிடைக்கழுத்திற்
றளைத்தபொன்மணியொலியுஞ்சாருமென்றனன்முனிவன். (கசு)

வம்மெனவந்திலைநீமாய்வதின்னேசரதங்
கொம்மெனவுணர்கென்றானுயிர்சொடுப்பவனுயிரைத்
தம்மெனுமொருநீயோதகவலவெனுநாறோ
விம்மெனுமுனந்தெரியுமெனமழமுனியுரைத்தான். (கஎ)

என்றலுமுலகமெலாமிரிந்துலைதரமுழங்கி
யொன்றலில்பெருஞ்சினங்கொண்டுறுதழல்விழித்தோற்றிக்
கன்றலில்புகையுயிர்த்துக்கரும்பகட்டினைநீங்கி
யன்றலினணுகுற்றானருளமையாமடங்கல். (கஅ)

நமனணுகுதலோடுநமனெனக்கருதாவுத்
தமனுளம்பதைபதைத்துத்தாரைகணீர்பொழிய
வெமனுனையலதிலையென்றிலிங்கத்தைத்தழுவினனங்
குமனொருமுதல்வெளியேகுதிகொளும்படியழைப்பான். (ககூ)

திரிபுரமுழுதெரித்தசிறுநகைப்பரவோலங்
கரிவிறலறக்கீண்டுகவரதள்வரவோல
மரிமகனுடலழித்தவழல்விழியரவோலங்
கிரியரவொடுதிருமால்கெழுவொருசரவோலம். (உ0)

சங்கரநினக்கபயந்தற்பரநினக்கபயம்
பொங்கரவாபரணப்பூரணநினக்கபயஞ்
செங்கரவழலேந்துந்திகம்பரநினக்கபய
மிங்கரவத்தொடுகூற்றெய்தினனினக்கபயம். (உக)

எனமுறையிசிகாலத்தெரிவிழிநமனுய
முனகன்வெங்கொடும்பாசமுனியுடன்மிசைவீச
வனகனும்வெளித்தோன்றியடியெடுத்துதைத்திடலுங்
கனவரையெனவீழ்ந்தான்கடுஞ்சினக்கூற்றுவனே. (உஉ)

அஞ்சுதலிலனுகிப்பூசனையினிதாற்று
மஞ்சனைமுகநோக்கிநித்தியமுறவழங்கி
யெஞ்சியகூற்றுவனையெழுப்பிநம்மடியாரைத்
தஞ்சமென்றடையென்றுசாற்றுபுவிடுத்தனனே. (உங)

பூசனைபுரிகாலைப்போற்றுதல்செய்யாது
பாசம்வன்புறவீசிப்படர்புரிபாதகத்தாற்
காய்சினவலியிழந்துகவலையுண்மிகத்துளைந்து
தோய்சலதிப்புடவித்தலம்பலதொழனினைந்தான். (உச)

ஆனந்தவனமாதியலகில்பஃறலஞ்சென்று
தானந்தமில்லாதசயம்புவைப்பூசித்து
மூனந்தற்கொழியானுயொருகரும்பகட்டூர்தி
கானந்தப்பெருகுபுனல்யமுனையங்கரையுற்ருன். (உரு)

வளிதடவினும்பாமேகதிகல்யாழ்முனிவ
னொளிகிளராங்கெதிரவுவந்தவனடிதாழ்ந்து
களிகிளர்செருக்கின்முனநிகழ்ந்தவெலாங்கரைந்து
தெளிதலமொன்றறியச்செப்புதியெனக்கென்ருன். (உசு)

வேறு.

புன்னையங்கானல்சூழும்பொருகுணகடற்றீரத்தி
ன்னையோர்பாகத்தெம்மானமர்தருதலமொன்றுண்டாற்
றன்னையேநிகர்வதென்றுந்தணவருஞ்சிறப்பினேங்கும்
பொன்னையேபொருவயாரும்பொதிதருந்திருக்காரோணம். (உஎ)

கேத்திரம்பலவற்றிற்கும்விசேடமாங்கிளர்ச்சியாலே
கேத்திரராசமென்றுங்கேத்திரவரமேயென்றுங்
கேத்திரத்தியல்புணர்ந்தகிழமையருரைப்பரந்தக்
கேத்திரமருவியுள்ளபுனலெலாங்கெழுமவாடி. (உஅ)

கருந்தடங்கண்ணியோடுகருணைசால்காரோணத்தா
ரிருந்தநற்றளிமுன்போற்றியேனையதளிகளெல்லாம்
பொருந்துறப்போற்றிக்கஞ்சப்பூவினுன்பூசைசெய்த
பெருந்தகைநடுத்தலேசமெனும்பெருந்தளியைச்சார்ந்து. (உகூ)

அந்தணனமைத்ததீர்த்தத்தாடியந்நடுத்தலேசச்
சுந்தரன்பாதம்போற்றித்தொழுஉப்பலபணியுஞ்செய்யி
னெந்தவல்வினையுந்தீருமெய்துவைவலிபோவென்ருன்
சந்தமிக்குய்ந்தேனென்றுதாழ்ந்தனன்விடைகொண்டானல். (௩0)

விடைகொண்டுகடாவுகைக்கும்வெந்திறற்செய்யகோலான்
கடைகொண்டுவெல்லலாகாக்காரோணநகரமேவி
யடைகொண்டுமலருங்கொண்டவமரர்தந்தீர்த்தமாதி
பிடைகொண்டுமிளிரும்பல்லதீர்த்தமும்விரவிமூழ்கி. (ருக)

கறைதபுநீறுபூசிக்கண்மணிமாலைபூண்டு
முறையினைந்தெழுத்துமெண்ணிக்கருந்தடங்கண்ணுண்மோகத்
திறையவர்முன்னமேகியிறைஞ்சுபுசுறைக்கடேசப்
பிறைமுடியவர்முற்கும்பமுனியீசீரீருப்பேணி, (ருஉ)

வணங்குபுநடுத்தலேசமருவிநன்பிரமதீர்த்தத்
திணங்குறமூழ்கியண்ணலெதிர்சென்றுபணிந்துபோற்றிக்
குணங்கிளர்மலர்முன்னாயகொண்டுறப்பூசையாற்றி
மணங்கமழன்புபொங்கமற்றுமின்னனசெய்வானால். (ருரு)

ஏறுகள்பலவிராவியெழில்செய்வானெழுந்தநொச்சி
ப்பாறுதலில்லாப்பல்காற்பன்மணிமண்டபங்கள்
வேறுமோர்மேருவென்னவிளங்குகோபுரமுன்னாக
வாறுசேர்சடையார்கோயிலழகுறவியற்றினானே. (ருச)

ஆயவானவர்முற்பல்லோரொருங்குவந்தடையக்கூட்டி
மேயசீர்மாகமாதமிளிர்மருத்துவநன்னாளிற்
பாயவேறெழுதப்பட்டபடத்தையாரோகணஞ்செய்
தேயவேழாநாளண்ணலிரதமூர்விழாநடத்தி. (ருரு)

திருந்தகமூறுபத்தாநாட்டிருமலர்ப்பிரமதீர்த்தத்
தொருவிலத்திராளையாட்டியும்பராதியர்களோடு
மருவுறத்தானுமூழ்கிவயங்கவரோகணஞ்செய்
திருமருப்பெருமைப்பாகனிலிங்கமுன்னிறைஞ்சிநின்று. (ருசு)

மறைமுடிவாசபோற்றிவயங்கருட்டேசபோற்றி
கறைமலராசபோற்றிகணிப்பருநேசபோற்றி
யுறைகயிலாசபோற்றியூர்கடியர்சபோற்றி
யறைகடிபாசபோற்றியருணடுத்தலேசபோற்றி. (ருஎ)

கூடுதோலுடையாய்போற்றிகூர்த்தசூற்படையாய்போற்றி
நீடுநீர்ச்சடையாய்போற்றிநேரிழைபுடையாய்போற்றி
யாடுபாம்பிடையாய்போற்றியறுகணிதொடையாய்போற்றி
நாடுமால்விடையாய்போற்றிநடுத்தலமுடையாய்போற்றி. (ருஅ)

எனத்துதிபுகலுவானுக்கிரங்கியவ்விலிங்கநின்றுங்
கனத்திலுங்கரியகண்டன்றோன்றுபுகாட்சிநல்கி
மனத்திலுநினையாத்தீமைமாய்த்தனைவலியுந்தாஞ்
சினத்துநம்மடியார்மாட்டுச்சேறலையென்றுமென்று, (ருகூ)

வாய்மலர்ந்தருளியாங்கேமறைந்தனனிறைந்தசோதி
காய்சினக்கூற்றந்தாழ்ந்துகனிதருவிடையும்பெற்றுப்
பாய்சினவிடையார்மேயகாரோணம்பணிந்துபோற்றி
யாய்குணக்கருந்தடங்கணம்மைதன்னருளும்பெற்று. (௬௰)

தன்னகரடைந்துமுன்போற்றகவரசியற்றிவாழ்ந்தா
னன்னகுக்கிரியமேனியந்தகனடைந்துசெய்த
நன்னலந்தெரியச்சொற்றுநலமலிவிண்டுநாத
ரின்னலமுழுதுமேன்மேலினித்திடவெடுத்துச்சொல்வாம். (௬௧)

இயமன்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௧௭-இ-திருவிருத்தம்-௧௦௮௯.

## விண்டுநாதப்படலம்.

முற்றுதவத்துச்சனற்குமாரமுனிவன்சிலாதமுனிபுரிந்த
பற்றுதவத்தினுதித்தநந்திப்பண்ணவன்செம்பொற்பதம்பணிந்து
மற்றுமருட்பெருவிண்டுநாதர்மான்மியம்யாவுமுரைத்தியென்னக்
கற்றுநிரம்புமனையனுள்ளக்காதல்பெருகக்கரையலுற்றான். (௧)

நிலவுசெந்தாமரைக்காடுபூத்தோர்நீலச்சிலம்புகிடத்தல்போல
வுலவுதிரைப்பாற்கடனடுவணோராயிரமாம்படப்பாந்தண்மேலாத்
கலவுவிருப்பமெழக்கிடந்துகமலத்தவளுநிலமகளுங்
குலவுபொற்பாதம்வருடல்செய்யக்கோலம்பொலிதண்வளருமாயோன். ()

அந்தரநாடவர்தங்குழாத்தோடவுணர்குழாமுமொருங்குகூடிச்
சுந்தரப்பாற்கடறாழியாகத்தூயமதிப்பெருந்தூணிறுவி
மந்தரவெற்பெனுமத்துநாட்டிவாசுகியென்னுங்கயிறுபூட்டி
முந்தமுயன்றுகடைந்தகாலைமுளைத்தெழுந்தெங்கும்பரந்ததாலம். (௩)

விண்ணுங்கருகத்திசையனைத்தும்வீந்துகருகக்கடல்வளைந்த
மண்ணுங்கருகவமுதம்வாரிவாரியுண்பாமெனும்வாஞ்சையுற்றா
ரொன்னுங்கருகப்பெரும்புவனமெல்லாங்கருகவிரிந்துகாண்பார்
கண்ணுங்கருகப்பரந்தெழுந்துகனற்றியதாலாலமென்னுந்தீயே. (௪)

ஆலமெழுந்துபரத்தலோடுமவுணரொடுஞ்சுரரோட்டெடுத்தார்
ஞாலமளந்தவனோடுநற்குநாணிச்சிறிதுளத்தெண்ணிநின்றான்
காலமுடிவெழுந்தீயுநாணக்கதித்துக்கொதித்துக்கனற்றலாலே
கோலம்பொலிமெய்வனப்பழிந்துகுலைந்துகருகியிருந்தைபோன்றான். (௫)

சற்றினிநின்றிடற்சாம்பராதல்சத்தியமென்றுளத்தெண்ணியச்ச
முற்றுமிளிர்கயிலாயந்தெல்லாரோடுமுன்னோடிப்பணிந்துவீழ்ந்து
சிற்றறிவாற்சிறியேங்களொன்றுசெய்திடச்செய்ததுதெய்வமொன்று
மற்றுன்னருளின்றியாற்றலின்றுவண்மையல்லாற்பிறிதென்படுமே. (௬)

ஆழிகடைந்தமுதுண்ணவேண்டியடியோமடைந்துமுயலுங்காலை
யூழியனலுங்குளிருமாறேயுடன்றெழுவெய்யவிடங்களற்ற
வாழியுயிர்பிழைத்தோடிவந்தோமற்றுமொருகணந்தாழ்த்தல்செய்யிற்
பாழியுலகமுழுதுந்திக்கும்பற்றின்றிவாடியவெங்களோடும். (எ)

உருகுமெய்யன்பருளத்துவாழ்வேயோவாக்கருணைப்பெருங்கடலே
கருகுவிடத்தின்வலிதொலைத்துக்காத்தருளென்றுகசிந்துவேண்ட
வருகமர்சுந்தரமூர்த்தியைப்பார்த்தாலாலம்பற்றித்தருகவென்னப்
பெருகுவிருப்பினணைந்ததனைப்பிடித்துத்திரட்டிக்கைமீதுவைக்க. (அ)

தாமலாமேலமர்வண்டுபோலத்தன்கையமரும்விடத்தைநோக்கிக்
காமர்மருவுசெவ்வாயிற்பெய்துகண்டநிறீஇநீலகண்டனானான்
பூமலிவேணியன்சொற்படியேபோந்துகொடியவாலாலம்பற்றி
யாமவனுய்த்தலினுயனுருமாலாலசுந்தரராயினரோ. (கூ)

கொடுவிடமாய்ந்தபின்மாயன்றாழ்ந்துகோமளமேனிவனப்பழிந்து
படுபழிமேவக்கரியனானேன்பண்டைவனப்புறப்பாலியென்னக்
கடுவமர்கண்டன்முறுவலித்துக்காரோணமேவியிலிங்கந்தாபித்
திடுமலரால்வனப்பெய்துவாயென்றியம்பப்பணிந்துவிடைபெற்றானே. ()

வேறு.

மதுமடையுடைத்துப்பாய்பசுந்துளபமாலையான்வயங்குகாரோண
முதுநகரடைந்துமுகிழ்த்தபல்வளமுமோகித்துநோக்குபுமகிழ்ந்து
சதுமுகன்படைத்ததராதலப்பயனுய்த்தழைந்ததிங்ககொனக்கருதி
விதுமுடிப்பெருமான்றிருவருணினைந்துவிண்ணவர்வாவியையடைந்தான்.

அந்தநற்றீர்த்தம்படிந்தபின்முனிவராவியினன்புறத்தோய்ந்து
பந்தமுற்றொழிக்குங்காகதீர்த்தத்தும்பாய்புசழ்ச்சறுவதீர்த்தத்துஞ்
சந்தமுற்றமையமுழுகுபுபுனிதசாந்தமாந்தெய்வநீறணிந்து
முந்தவற்புதமாங்கண்மணிபூண்டுமொழியுமைந்தெழுத்துளங்கணித்து. ()

திருந்தியகாயாரோகணம்புகுந்துதெய்வநாயகன்முனம்பணிந்து
பொருந்தியவுள்ளநெக்குநெக்குருகப்பொழிமழைத்தாரைகண்வார
வருந்தியக்கங்களனைத்தையுந்தவிர்த்தற்காயவாவரணத்தைச்சூழ்ந்து
வருந்தியவருநஞ்சமுதுசெய்தருளும்வள்ளலார்திருமுனமடைந்தான். ()

குறிகுணங்கடந்ததனிப்பெருமுதலைக்கோதிலாதவர்பெருவாழ்வைச்
செறியருட்பிழம்பாஞ்சிற்பரவெளியைச்சின்மயானந்தபூரணத்தை
யறிதருமறிஞருள்ளத்துள்ளூறியழி[illegible]ாதினிக்குமாரமுதை
மறிவருஞ்சச்சிதானந்தப்பொருளைமலர்விழிகளிப்புறக்கண்டான். (கச)

பன்முறைபணிந்துபணிந்தெழுந்தாடிப்பாடுபுபரவசமாகிச்
சின்மயவிந்தச்சிவக்குறிகாணச்செய்தமாதவமெவனிந்த
நன்மைகொள்குறியைத்தரிசியார்பிறப்புநவிலுமெப்பிறப்பெனநயந்து
சொன்மனங்கடந்ததனிச்சிவக்கொழுந்தைத்துரிசறத்துதிப்பவனானான். ()

ஒளிவளர்சுடரேயுனைக்கொனுவொன்றேயுவமனிலாத்தனிமுதலே
தெளிவளரமுதேமூன்றுகட்கரும்பேசிந்திக்கத்தித்திக்குந்தேனே
யளிவளர்கனியேயானந்தப்பிழம்பேயற்புதம்விளைக்குமாரமுதே
நளிவளர்மறைசூழ்ந்தேத்துகாரோணநற்றலத்தமர்சிவக்கொழுந்தே. (கஅ)

என்றுநற்றுதிசெய்தெண்ணிலாவுயிருமீன்றினிதளித்திடுமிறைவி
யன்றுதலில்லாவொருகருந்தடங்கணம்மையைக்கண்டுளங்களித்து
நன்றுறத்துதித்துமற்றுமாவரணநயந்தமர்வாரையும்போற்றி
வென்றுமிக்கொளிருஞ்சக்கரப்படைமால்விடைகொடுவந்தனன்வெளியே.

அருட்ருமமுதகடேசமும்போற்றியமரரோந்திரேசமும்பணிந்து
மருடபுமுனிகாரோணமுந்தொழுதுவயங்ககத்தீசமுமேத்தி
யிருண்மணிமிடற்றுரினிதுவீற்றிருக்குமெழினடுத்தலேசத்திற்புகுந்து
தெருண்மலிபிரமதீர்த்தத்தின்மூழ்கிச்சேவித்துப்பெருமகிழ்சிறந்தான். ()

நாடுகாரோணநாயகன்றென்பானடுத்தலேச்சுரன்வனித்திசையிற்
கூடுமச்சுதபுட்கரணியென்றுரைக்கக்குலவியவமுதபுட்கரணி
பாடுமூவுலகும்படிந்துய்யவமைத்துப்பண்புறமற்றதின்மூழ்கி
நீடுவெண்ணிறுகண்டிகைபுனைந்துநின்மலவைந்தெழுத்தெண்ணி. (கக)

அன்னபுட்கரணிக்கலங்கழற்றிசையினவிர்நடுத்தலேசத்தின்றென்பா
னன்னர்வண்டளியொன்றியற்றுவிண்டுநாதனென்றுரைத்திடுபெயரின்
மன்னவோரிலிங்கந்தாபித்துநறியமஞ்சனமாதிகள்கொண்டு
பின்னமொன்றில்லாவன்புமேற்பொங்கப்பிறங்குநற்பூசனைபுரிவான். (உ0)

தானினிதமைத்தவமுதபுட்கரணிதன்னின்முக்காலமும்படிந்து
தேனினிதுயிர்க்குமலர்முதற்பலவுந்தெவ்வியத்தடத்துமஞ்சனமே
நானினிவேறுகவர்தரோனென்றுநயமுறக்கவர்ந்துபூசிப்பான்
மானினியமருந்தளிவிளக்கென்னமணிகிடந்திமைக்குமார்புடையான். ()

செக்கரஞ்சடையானருட்குறிப்பதிட்டைசிறந்தகாரோணத்திறுற்றிச்
சக்கரப்படையான்பூசனைபுரிவான்றவாதருள்பெறுவனவ்வருளே
மிக்கரநாமாமிரும்பினுக்கென்றுவெருவுபுதானவர்கரந்தா
ரக்கரவுணர்ந்துமிகமனங்களித்தாரமரர்முன்னுயபல்லோரும். (உஉ)

சூடுவனிருகைமலருந்தன்றலைமேற்சூழுவன்விண்டுநாயகனை
யாடுவனுரோமஞ்சிலிர்த்திடவாடியரகரகரவெனமுழங்கிப்
பாடுவன்பல்காற்றாழ்ந்துதாழ்ந்தெழுவன்பரனருள்பெறுவதென்றென்று
வாடுவன்மகிழ்வனென்சொலக்கட்வேமாயவன்செய்யுமன்பினையே. (உ௩)

எனைவிடையுருச்செய்தியக்குவைகளைசெய்தெய்குவைதிரிபுரங்குலைய
நனைமலர்க்கழல்செய்தொருபுறத்தமைப்பைநால்வகைச்சத்திகடம்முட்
புனையிழைமுலையோர்சத்திரானலனேபொற்பிழந்துயங்குநனன்றே
வினைமுழுதொழிக்கும்விண்டுநாதத்தின்மேவியபரசிவக்கொழுந்தே (உ௪)

கண்மலர்சாத்தக்கான்மலரணிந்தாய்கடையனேனரப்புபவீத
மென்மலர்நிறத்திற்புனைந்தனைமெய்த்தோலியைதரக்கஞ்சுகஞ்செய்தாய்
திண்மலர்வெரிநென்பொருகரங்கொண்டாய்சீரிழந்துயங்குதனன்றே
விண்மலர்சுரர்சூழ்விண்டுநாதத்துமேவியபரசிவக்கொழுந்தே. (உ௫)

அருட்பெருங்கடலேநின்னடியடைந்தேனண்ணலேநின்னடியடைந்தேன்
மருட்பகைதுமித்துவணங்குநர்ப்புரக்கும்வள்ளலேநின்னடியடைந்தேன்
றெருட்கிடனுயவிண்டுநாதத்திற்செம்மையோய்நின்னடியடைந்தே
னிருட்கடுமிடற்றாய்நின்னடியடைந்தேனென்றுதோத்திரம்பலபுரிந்தான்.

துதியுளமுருகியின்னணம்புரியச்சுந்தரநாயகனிடப
மதிவிசாகத்தினவ்விலிங்கத்தினின்றுமாண்புறவெளிவந்து
பதிபெருவனப்புக்கரசனீயாகும்படிவரங்கொடுத்தனமின்னும்
விதியுறவேண்டும்வரமெவனுரைத்திவிரிதுழாய்க்கண்ணியவென்றான். ()

என்றலும்வணங்கியிவ்விலிங்கத்திலென்றுநீபொலிதரல்வேண்டு
நன்றமைதரநானமைத்ததீர்த்தத்தினலமுறத்தோய்ந்துநிற்றொழுவார்
பொன்றலில்வினையும்போக்குதல்வேண்டும் போகமும்பொருந்திடல்வே
ண்டு, மன்றநான்வசித்ததேத்தினெஞ்ஞான்றும் வசிக்கவும்வேண்டுமென்
[திரந்தான். (உ௮)

மாயவன்மொழிந்தபடியெலாமுதவிமறைந்தனனவ்விலிங்கத்துத்
தூயவனயனருளியவரத்தாற்சுந்தரராசனென்றொருபேர்
மேயவனாகிமுன்னையிற்சிறந்துவிளங்கினன்றிருநெடுமானன்
காய்வனழகைக்கண்டுவண்கமலையகமகிழ்ந்துறத்தழீஇயினளால். (உ௯)

அண்ணலெம்பெருமான்பூசைநன்காற்றற் கமைத்ததீர்த்தத்திற்குமேல்பா
லண்ணலம்பொலியமுன்புதானமர்ந்துமாதவம்புரிந்தவத்தேத்தே [ல்
யொண்ணலம்பொலியவாலயமமைத்திட்டொளிர்திருமகள்சிறைக்கலுழ
ன், கண்ணலவிடுவச்சேனனாதியருங்கலப்பமேவுவன்சவுந்தரமால். (௩0)

அனையனைத்தொழுவோர்வைகுந்தமடைவாரழகியவிண்டுநாதனைத்தாழ்
வினையினரெல்லாப்போகமுமடைவார்மேதகுமுத்தியும்பெறுவார்
நனைமலர்க்கடுக்கைவிண்டுநாதச்சீர்நவின்றனநலமெலாம்பொருந்துங்
கனையருணாகநாதனென்றுரைக்குங்கண்ணுதலார்வரவுரைப்பாம். (௩க)

விண்டுநாதப்படலம் முற்றிற்று.

ஆ படலம் க௮ இ-திருவிருத்தம்—ககஉ0.

## நாகநாதப்படலம்.

பொழியருணந்திப்புத்தேள்பொன்னடிக்கமலம்போற்றி
யழிவருந்தவத்தான்மிக்கோனாகியசனற்குமாரன்
பழிதபுநாகநாதர்மான்மியம்பகர்தியென்னக்
கழிமகிழ்சிறப்பவன்னுன்கட்டுரைத்திடலுற்றான். (க)

பூதலத்தமர்கின்றூர்வாய்ப்புகழொடும்பொன்னுடாய
மீதலத்தமர்கின்றூர்வாய்ப்புகழுமிக்கணியாப்பூண்டு
பாதலத்தமர்வோனெல்லாப்பரப்பிற்குமரசுசெய்வோன்
மாதலத்திகவாதுய்க்கும்வாஞ்சையனாகிவாழ்வான். (உ)

குணமலிமனைவியோடுங்கூடிவாழ்கின்றநாளிற்
பணமலிசேடனென்பான்பற்பனாளன்புழந்து
மணமலிகுதலைச்செவ்வாய்மகவுதோன்றாமையாலே
கணமலிதுயருண்மூழ்கிக்கவன்றிதுகனையலுற்றான் (ஙு)

கொடையுயர்முகமனின்றேற்கொழுமலர்நாற்றமின்றே
லடைவிசிமதியமின்றேலருந்தவங்கருணையின்றேன்
மிடைகலைஞானமின்றேல்விளங்குறுமறமன்பின்றேற்
கடைபடுதிறமேபோலுமில்லறம் * காலின்றென்னில். (சு)

பண்ணிலாப்பாடல்போலும்பற்றிலாநட்புப்போலும்
பெண்ணிலாச்சயனம்போலும்பெயரிலாவாழ்க்கைபோலு
முண்ணிலாநெய்யிலாமலூட்டுமின்னடிசில்போலுங்
கண்ணிலாவதனம்போலுங்கான்முளையில்லாவில்லம். (ரு)

என்றுளத்தமையவெண்ணியிருங்கடற்புடவிமேவி
நன்றுநம்பரனைப்போற்றிநந்தனனடைவெனென்று
குன்றுதலில்லாத்தூயகுணங்கெழுமனைவியோடு
மொன்றுபஃறலையனுயவுரகன்மண்மிசைவந்தானால். (சா)

வந்தபாப்பரசன்றூயவசிட்டமாமுனிவற்கண்டு
நந்தநான்மகவுவேண்டிநண்ணினனஃதுமேவுஞ்
சந்தமாதவமீதென்றுசாற்றுதியென்றுதாழ்ந்தா
னந்தமாதவனுமுள்ளத்தாய்ந்தினிதுரைக்கலுற்றான். (எ)

பரம்பரனிலிங்கபூசைபண்ணலேசிறந்தநோன்பா
கிரம்புறமகவுநல்குகினைத்தவையனைத்துமேவும்
வரம்பறுமறுமைப்பேறுவாய்ப்பதுமேலாமுத்தி
யுரம்படப்பெறலுமந்தப்பூசையாலுரகவேந்தே. (அ)

ஓராயிரங்கமலமேனியொருங்குபூத்திடக்களிப்பார்
பராவொருகமலமேவிப்பண்புறவாழ்வாருந்தி
விராவொருகமலம்பூப்பவிளங்குவார்சடிலமோலி
யராவணிபவனிலிங்கத்தலங்கொருகமலமிட்டார். (கூ)

ஆதலாலிலிங்கபூசையனைத்தையுங்கொடுக்கவல்ல
தீதலான்மறைகள்வேறுண்டென்றெடுத்தியம்பாவென்றுங்
காதலாலதனையின்னேகடைப்பிடித்தாற்றினுள்ள
மோதலாற்கவலாயெண்ணநொடிவரைமுற்றுமென்றான். (கய)

* கால் - சந்ததி.

முன்புநானினைந்தவாறேமொழிந்தனன்பன்னூற்கேள்வி
வன்புசான்முனிவனென்றுமகிழ்ந்தனனாகர்கோமா
னன்புமேவிலிங்கபூசையாற்றுதற்கிடமீதேயென்
றின்புகூர்கும்பகோணத்திருநகரெய்தினானே. (கக)

பொருவருங்கும்பகோணப்பொன்னகர்மரீஇக்கீழ்க்கோட்டத்
தொருவருமன்பிற்புக்கானொளிர்சிவக்குறியைக்கண்டான்
வெருவருங்களிப்பிற்றாழ்ந்துமேதகுதீர்த்தமூழ்கி
மருவருமலர்முற்கொண்டுமாண்புறப்பூசைசெய்தான். (கஉ)

ஈசனைமடந்தைபாகத்திறைவனையன்பர்மாட்டே
நேசனையொளிர்கீழ்க்கோட்டநிமலனையளக்கவொண்ணாத்
தேசனைச்சிவபிரானைச்சிற்சபையாடுவானைப்
பூசனையிந்தவாறுபுரிந்தனன்சினனாட்சேடன். (கங)

மலவிருடுமித்துநாளும்வழுத்திடுவாரையாளு
நிலவணிசடிலப்பெம்மானெறியினேத்திடுதனக்குப்
பலமெளிதருளிச்செய்யாப்பான்மையைநினைந்துவேறு
தலமுறல்கருதிச்சேடன்சண்பகாரணியஞ்சார்ந்தான். (கச)

சண்பகவனத்தைமேவித்தற்பரலிங்கங்கண்டு
நண்பகமருவவாங்கோர்தீர்த்தத்தினயந்துமூழ்கி
யெண்பகமலர்களாதியாவுநன்கமையக்கொண்டு
பண்பகந்தரித்தாயென்றுபரவினன்பூசித்தானால். (கரு)

சத்தனையளவாமேன்மைச்சண்பகாடவியனாதி
முத்தனையென்றுமூவர்முதல்வனைக்குன்றக்கொங்கை
யத்தனைமூன்றுபத்தோடாறற்குமப்பாலானைச்
சுத்தனையிடையறாதுதொழுதுபூசித்தானங்கே. (கசு)

பூசையிவ்வாறுசெய்யும்புழையெயிற்றரவவேந்த
னாசையுள்ளுணர்ந்துமெண்மையருள்செய்யாத்திறமுணர்ந்தா
னீசையோர்பாகத்தெம்மானருள்விரைந்தெய்தலெண்ணிப்
பாசையோவாதகாச்சூழ்பாம்புரமணுகினானே. (கஎ)

காலெலாங்கமலக்குப்பைகளமெலாமுயர்ந்தநெற்போர்
மேலெலாங்கமஞ்சூற்கொண்டல்வெளியெலாங்கருப்பங்காடு
சாலெலாம்பவளமுத்தந்தடமெலாம்பொழியான்மேதி
பாலெலாஞ்செம்பொனாயபாம்புரக்கோயில்புக்கான். (கஅ)

எண்ணியவனைத்துநல்குமிலிங்கமொன்றங்குக்கண்டு
புண்ணியதீர்த்தமாடிப்பொலிமலராதிகொண்டு
கண்ணியவன்புபொங்கக்கசிந்துபூசித்தான்சினனா
னண்ணியவானோராதியாவருமதிசயித்தார். (ககூ)

புள்ளலைமலர்நீர்வாவிப்பாம்புரம்பொருந்திவாழும்
வள்ளலையருச்சித்தேத்தும்வாளராக்குலத்துவேந்தன்
விள்ளலையமையாவாங்கும்விரைந்தருளாமையெண்ணிக்
கள்ளலைமலர்ப்புன்னாகக்காரோணங்கருதிவந்தான். (உ0)

எறிதிரைக்கடனுவாய்நின்றிழியும் * புன்னாகமெங்கும்
வெறிமணங்கமழநாளும்வீசுபுன்னாகமெங்கும்
செறிமனையெனும்பேர்பூண்டுதிருவம் ‡ புன்னாகமெங்கு
மறிவுமிக்குறலாலண்ணலருள் 0 வம்புன்னாகமெங்கும். (உக)

ஆரணவோதையெங்குமல்கலங்கோதையெங்கும்
பூரணகும்பமெங்கும்பொன்மணித்தம்பமெங்குங்
காரணமாடமெங்குங்காமருகூடமெங்கு
மேரணமன்றமெங்குமிலங்குசெய்குன்றமெங்கும். (உஉ)

இன்னபல்வளமுநோக்கிக்கேத்திரராசமென்னு
நன்னகரிதுபோலெங்குநாங்கண்டதில்லையென்று
பன்னகவேந்தனுள்ளத்தளக்கொணாமகிழ்ச்சிபம்ப
முன்னருந்தேவதீர்த்தமுதலியவனைத்துந்தோய்ந்து. (உங)

இழிதொழிலொருப்பாடுற்றவெவமையுமோர்பொருளாவெண்ணி
வழிவழியடிமைகொண்டுவாழ்விக்குங்கருணைச்செல்வி
பழிதபுகருந்தடங்கட்பாவையோர்பாகத்தெம்மான்
செழிபெருங்கோயில்புக்குத்திருந்துநெஞ்சுருகப்போற்றி. (உச)

தூயவான்சுதைக்கடேசந்துகளில்பச்சிமகாரோண
மாயதோரீந்திரேசமகத்தீசநடுத்தலேசம்
பாயசீர்விண்டுவீசம்பராய்த்தொழுதொருகாரோண
மேயமேற்றிசையினுள்ளசருவதீர்த்தத்தின்மேல்பான். (உரு)

சிற்பநூல்விதிவழாதுசிறக்குமாலயமொன்றுற்றிப்
பொற்பவோரிலிங்கந்தாபித்ததற்குத்தன்பெயர்புனைந்து
கற்பநீறணிவான்சொற்றவிதிகடைப்பிடித்துப்பூசை
யற்பமேவாதுசெய்தானுயிரம்பணங்கொள்சேடன். (உசு)

காலையிற்குடந்தைமேயகடவுளைக்கருதுமுச்சி
வேலையிற்சண்பகக்காட்டண்ணலைவிருப்பங்கூரு
மாலையிற்பாம்புரத்துவள்ளலையத்தயாமஞ்
சோலையிற்பொலிகாரோணச்சோதியைப்பூசைசெய்வான். (உஎ)

பூசையிவ்வாறுசெய்துவருமொருபுயங்கவேந்தற்
கீசைபங்குடையவெம்மானின்னருள்செய்தானாக
வோசைகொளனையான்பன்னியுதரத்துக்கருப்பமுற்று
ளாசைகொளனையான்செய்தானாருளென்றுசேடன். (உஅ)

---

* புன்னாகம் - சிற்றூனை. ‡ புன்னாகம்-புல்லியமலை. 0 வம்புன்னாகம் வம்புஉன்ஆகம் - எனப்பிரித்து - மணத்தைக்கருது மனமெனக்கொள்க.

சொற்றநாற்றலத்துங்காலேதொடங்கியோர்நாற்காலத்து
மற்றமில்பூசையாற்றியன்பதிகரிப்பத்தாழ்ந்து
செற்றமில்விடையும்பெற்றுத்திகழ்மனைக்கிழத்தியோடுங்
கற்றவர்புகழுஞ்சேடன்கருதுதன்னிருக்கைபுக்கான். (உக)

திங்களங்கொருபான்செல்லத்திருமகடனையுயிர்த்தாங்
கங்களவில்லாமாமையமைதருமொருபெண்பெற்றுண்
மங்களம்பொலியுந்தேவியதுகண்டுமகிழ்ச்சிபூத்தான்
கங்களாயிரத்தானெல்லாக்கடும்புமிக்குவந்தமாதோ. (௩0)

முலையொருமூன்றுமார்பின்முகிழ்த்ததுகண்டுதேவி
யலைபெருந்துயரத்தாழ்ந்தாளதுசொலக்கேட்டசேடன்
மலைவருமமுதமுண்டார்நஞ்சுண்டுமாழாந்தென்னத்
தொலைவருங்கவலையாயதொடுகடற்கிடங்கின்வீழ்ந்தான். (௩க)

இருவருநெஞ்சமாழாந்தின்னணங்கவலுங்காலைப்
பொருவருங்காரோணத்தெம்புண்ணியரருளினாலே
பருவரும்பயிர்ப்பால்வீழும்பசுமழைத்தாரைபோல
வெருவருமனையார்தேறவிளைந்ததாகாயவாக்கு. (௩உ)

முலையொருமூன்றுதாங்குமுற்றிழைதனைச்சின்னாளி
லலைகடற்கரைக்காரோணத்தண்ணலாரொருபான்மேய
கலையுணர்வரியமேன்மைக்கருந்தடங்கண்ணிபாத
நிலையுறப்பூசைசெய்துநேர்தொழுதிறைஞ்சச்செய்தால். (௩௩)

அனையவாதேவிசெய்யுமாரருணிரம்பப்பெற்றுத்
தனைநிகர்பெருமைவாய்ந்தசறுவபுட்கரணிப்பாங்கர்ப்
புனையிழையுலவுங்காலைப்புரவலனொருவன்றோன்று
நினைதருமவற்காண்போதேநிறத்திலொன்றழுந்தாநிற்கும். (௩ச)

பின்னர்மற்றவனேவந்துபிறங்குறமணப்பானென்று
நன்னலம்பயப்பக்கூறநாகர்கோன்மனைவியோடும்
பன்னருமகிழ்ச்சியுற்றான்பவளமென்கொடியோதெய்வப்
பொன்னவிர்கொம்போவென்னவளர்த்தனள்புதல்வியம்மா. (௩ரு)

பிறையெனவளராநின்றபெண்ணணங்கரசைநோக்கி
யிறைமகிழ்பூத்தசேடனிகழ்ந்தமையனைத்துங்கூறி
முறைபணிபுரியத்தக்கமுற்றிழைமடவாரோடுங்
கறையிலப்புதல்விதன்னைக்காரோணநகரத்துய்த்தான். (௩௬)

முன்னுகாரோணத்துற்றமும்முலையொருத்தியாங்கு
மன்னுபஃறீர்த்தமெல்லாமாண்புறத்தோய்ந்துதோய்ந்து
பன்னுகாரோணநாதர்பைம்பொனாலயம்புகுந்து
மன்னுவான்கருந்தடங்கண்மாதேவிமுன்னருற்றாள். (௩எ)

நறுவிரைத்தயிலமாதிநயக்கும்பாவையுங்கொண்டாட்டி
மறுவில்சுத்தோதநதிமாண்புசால்பலவுமூட்டித்
தெறுகதிரவனுநாணுந்திபங்கள்பலவுங்கோட்டி
யுறுமகிழ்சிறப்பப்போற்றியுருகுபுபரசலுற்றான். (௩அ)

கருமுகில்விளர்க்குமாறுகறுத்துநெய்த்தெதிர்ந்தார்நெஞ்ச
மருவிருளனைத்தும்வாரிவாய்ப்பெயுங்கூந்தல்போற்றி
யொருகருங்கடலிலுப்பணுதயஞ்செய்கதிரோன்மானப்
பருமணித்தகடுமுன்னுப்பதிபலபணியும்போற்றி. (௩௯)

மூலகாரணனுமெந்தைமுடிப்பிறையடியிற்றாழ
ஞாலமின்பமையச்சற்றேசுளிக்குநன்னெற்றிபோற்றி
யாலமுண்டவன்றன்கையாலமைதரப்புனைதல்செய்த
கோலமுண்டமையும்பொட்டுங்குலவிலம்பகமும்போற்றி. (௪௦)

வரிசிலைமதனைச்செற்றார்மனமிருந்தாடாவிற்கு
மெரிமணியம்பொனூசலெனப்பொலிகாதுபோற்றி
விரிகதிர்மதிபோல்வேணிமிசைக்கொளப்பதிக்கோதென்று
பரிவுறவுரைத்துமேவும்படிமிளிர்தோடும்போற்றி. (௪௧)

ஒருவரைகுழையக்கோட்டியுரகநாண்பொருந்தக்கூட்டிக்
கருநிறப்பகழிபூட்டிக்கடும்புரமவியமாட்டிப்
பெருவலிதோற்றிநின்றபிரான்முடிகோட்டுமாறு
பொருவறக்கோட்டாநிற்கும்பொருசிலைப்புருவம்போற்றி. (௪௨)

குழைகிழிதரநடந்துகுமிழ்மிசைமறிந்துதொண்டர்
பிழைசிறுமையுநோக்காதுபிறழ்கருந்தடங்கண்போற்றி
மழைபொருகளத்தார்தீட்டுமையலங்காரம்போற்றி
விழைகவென்பெயருக்கேற்பமிக்கமர்கருணைபோற்றி. (௪௩)

விழியளியொன்றோடொன்றுசமர்செயாவிதநள்ளிட்ட
பழியில்சண்பகவரும்பின்படியெனுநாசிபோற்றி
செழிமுகப்பதுமந்தோன்றுந்திவளொளிமுத்தமென்னக்
கொழிவனப்பொழுகக்கோத்துக்குலவுவெண்டாளம்போற்றி. (௪௪)

பரம்பரனழகுபார்க்கப்பதித்தகண்ணாடிபோலு
நிரம்பியவனப்புவாய்ந்துநிலவியகபோலம்போற்றி
வரம்பெறுபவளத்துண்டமாண்புசாலதரம்போற்றி
திரம்பெறவதற்குநாப்பட்செறியுமூன்றிரேகைபோற்றி. (௪௫)

நிலவுவண்கபோலமென்னுநீர்நிலைநாப்பட்பூத்த
குலவுசெஞ்சுழிநொன்னக்கோலமாசெவ்வாய்போற்றி
கலவுமம்மலருட்பூத்தகாமருதளவம்போல
வுலவுபேரழகுவாய்ப்புற்றொளிகிளர்வெண்பல்போற்றி. (௪௬)

செங்கழுநீருட்கொண்டசிறுநிலாக்கிரணமென்னச்
சங்கரன்மனமுருக்குந்தகையவெண்முறுவல்போற்றி
யங்கதினறுந்தேனென்னவமைதருமின்சொல்போற்றி
பங்கமொன்றேனுமின்றிப்பண்புசால்சுபுகம்போற்றி. (சஎ)

இருவிழியென்னும்பொன்னுமிரசிதம்புனைமெய்மின்னு
மருவிநீங்காமலென்றும்வாழ்பசுங்கமலமாகிப்
பொருவிலாணிதயவாவிபூத்திடுபூவுமாகி
யொருவுருவனப்புவாய்ப்புற்றொளிர்தருவதனம்போற்றி. (சஅ)

பதுமநன்னிதியமென்னப்பகர்திருமுகத்தின்கீழாற்
புதுமைகொடெய்வச்சங்கநிதியமும்பொருந்தியாங்குக்
கதுவெழிற்கண்டம்போற்றிகணவனஞ்சருந்தினாலுஞ்
சதுமுகன்முன்னோர்வீந்தாலுந்தழையுமங்கலநாண்போற்றி. (சகூ)

முலையெனுங்குன்றமேலான்முளைத்தெழுபசுவேயென்னக்
கலையொருபுறத்திற்போர்த்துக்கவின்பொழிதருதோள்போற்றி
தலையமையணையகுன்றஞ்சார்ந்துதித்தனவேயென்ன
விலையில்பன்மணிகால்யாத்துமிளிர்தொடியாதிப்போற்றி. (ருo)

சிவபரன்றேடஙீஇவெள்வளையொலிசிறப்பச்செய்யு
மவமில்யாழ்த்தண்டமேயென்றறைதருமுன்கைபோற்றி
குவலயமாதிகாணுங்குறியிலார்க்கஃதமைத்த
நவவளைகடகஞ்செம்பொனயந்தசூடகங்கள்போற்றி. (ருக)

நயப்பெனும்புரோமந்தோன்றுநலங்கிளர்புறங்கைபோற்றி
நிரம்புவமேயங்காந்தளென்னநிலவகங்கைபோற்றி
பரம்புநீர்க்களிறுவட்கும்பலவிரல்போற்றிகிள்ளை
வரம்பெய்மூக்குகிர்கள்போற்றிமாமணியாழிபோற்றி. (ருஉ)

ஒருமலைகுழைத்தவீரனுரங்குழைத்தணைந்துவிம்மு
மிருமுலைபோற்றிமேலிட்டெழில்செயுஞ்சுணங்குபோற்றி
பொருமலிற்புணர்வார்போற்றிபுணர்மணிக்கோவைபோற்றி
யருமைசாலுண்மைஞானமாகியவருட்பால்போற்றி. (ருங)

புவனங்களனைத்தும்வைகப்பொறுத்தசிற்றுதரம்போற்றி
தவலின்றிமூவரைத்தந்தமைதெரித்தாங்குமூன்று
நவமொன்றுமடிப்புப்போற்றிநாரத்திற்சுழியும்வட்கத்
திவள்கின்றவுந்திபோற்றிசெழுமயிரொழுங்குபோற்றி. (ருச)

அறிவதற்கரியதாயவண்ணறனுண்மைபோல
வறிவதற்கரியதாகியமைந்தநுண்மருங்குல்போற்றி
செறிமணிக்கடலிற்றோற்றஞ்செய்யிளங்கதிர்சமழ்க்கச்
செறிதருசெம்பட்டோடுதிகழுமொட்டியாணம்போற்றி. (ருரு)

சாயலந்தோகைக்கச்சஞ்சற்றுங்கொள்ளாதபாம்பாய்
மேயபேரல்குல்போற்றிமேகலையாதிபோற்றி
யாயமென்பிடியின்கையுமரம்பையுமிணையொவ்வாமற்
றூயநற்கரபம்போன்றுதுளும்பெழிற்குறங்குபோற்றி. (ருசு)

அலவனொள்வராலியாமையஞ்சியமுத்தாள்போற்றி
நலனுயர்சிறுதராசினையம்படுபரடுபோற்றி
பலவரிசனமுளைத்தபடியெனும்விரல்கள்போற்றி
கலவுவெண்மதிபத்தாகக்கடைந்தனநகங்கள்போற்றி. (ருஎ)

நல்லவருளம்போனுயேனுள்ளமுநயந்துநீங்காப்
பல்லவமருட்டாநின்றபங்கயப்பாதம்போற்றி
சொல்லருமறைகளென்னச்சூழ்ந்தபொற்சிலம்புதண்டை
வில்லமைபாதசாலம்விரலணியாதிபோற்றி. (ருஅ)

மயிலிளஞ்சாயல்போற்றிமானதவாவியூடு
பயிலிளவன்னமென்னும்படியியங்கியக்கம்போற்றி
வெயில்விரிகோடைநாளில்வெதும்பியபயிர்தழைக்கக்
குயின்முகிலெனப்பசந்தகோமளமேனிபோற்றி. (ருகூ)

பொருள்பெறக்கருதுவார்தம்புந்தியிற்சிவந்தாய்கல்வி
யருள்பெறச்சிந்திப்பார்தமகத்துறவிளர்த்தாய்தெவ்வ
ரிருடபமுயலுவார்தமிதயத்துக்கறுத்தாய்மூல
மருடபுங்காரோணத்துவயங்குமாதேவிபோற்றி. (சூ0)

பரையாதிசத்தியாகிப்படைப்பாதிபுரிவாய்போற்றி
தரையாதியனைத்துமாகித்தவலறநிறைந்தாய்போற்றி
யுரையாதிமறைகட்கெட்டாவொருபெருமுதல்விபோற்றி
கரையாதிபுராணர்பாகக்காரோணவிமலைபோற்றி. (சூக)

பிறைமுடியவன்றுயானுய்பின்பிறந்தவளுமானுய்
முறைமையின்மகளுமானுய்முயங்கிடுமனையுமானுய்
மறைமுதலனைத்துந்தேருவளங்கெழுசெல்விபோற்றி
கறைதபுதிருக்காரோணக்கருந்தடங்கண்ணுய்போற்றி. (சூஉ)

என்றுரைத்துருகிக்கண்ணீரிழிதரத்தாழ்ந்துதாழ்ந்து
சென்றுதன்னிருக்கைமேவிச்சிந்தையிற்குறித்திருப்பா
ளொன்றுபன்னுளிவ்வாறேபூசனையுஞற்றுவாள்பா
னன்றுபேரருள்சுரந்தாணங்குலதெய்வமானுள். (சூங)

அவாமுதலறுத்துளார்க்கேயமைகருந்தடங்கணம்மை
தவாவருளொருங்குபெற்றுள்சறுவபுட்கரணிப்பாங்க
ருவாமதியுடுக்கணத்தோடுலாவியகாட்சிபோலோர்
திவாவிருளையர்தம்மோடுமுலாவினுள்சேடன்செல்வி. (சூச)

படுகடனடுவட்டோன்றும்பரிதிதன்குலத்துதித்தோன்
வடுவறுகலைகளெல்லாமயக்கறத்தெளிந்தவல்லா
னுடுபதிக்குடையினானுமுட்குறும்வனப்பின்மிக்கான்
றொடுகழற்காலான்சாலிசுகனெனுநாமவேந்தன். (சுரு)

மேயகாரோணம்புக்குவிண்ணவர்தீர்த்தமாடிப்
பாயகாரோணநாதன்பங்கயப்பாதம்போற்றி
நேயமார்துணைவரோடுநிலவியசறுவதீர்த்தத்
தாயவான்கரையைநாடியடைந்தனனாங்குகண்டாள். (சுசு)

காண்டலுமுலையோர்மூன்றுட்கரந்ததுநடுவணுள்ள
தாண்டகையினையன்மண்மேலாயகந்தருவன்கொல்லோ
மூண்டவிற்காமன்கொல்லோமுதிரொழிற்குமரன்கொல்லோ
வீண்டடைந்தவன்யாரென்றுவேந்திழைதிகைத்துநின்றாள். (சுஎ)

முலையொன்றுமறையக்கண்டமுற்றிழைமடவார்யாருந்
தலையொன்றுபெருமைவாய்ந்ததடாதகைபோன்றாளின்ன
ணிலையொன்றுமறியேமென்றுநெடிதிறும்பூதுமேவிக்
கலையொன்றுமுதல்விபூசைப்பயனுளங்கருதிநின்றார். (சுஅ)

தந்தையாகாயவாணிசாற்றியபடியனைத்து
முந்தைநாளுரைத்தவாறுமுலையொன்றுமறைந்தவாறு
நிந்தையில்வனப்புவாய்ந்தபுரவலனிற்குமாறுஞ்
சிந்தையினுணர்ந்தாணாணுஞ்செறிதரநங்கைநின்றாள். (சுகூ)

மருவலருடலம்போழ்ந்துவார்குடர்மாலைசூடி
வெருவரக்கொழுவோடுருள்விடக்குவாய்குதட்டிப்பின்னர்
பெருகுநெய்த்தோருமாந்திப்பெரும்பசியடங்குறுமே
யிருகடைவாயுநக்குமெரிதவழிலைவேல்வேந்தும். (எ0)

விதிகடைக்கூட்டலாலேமிளிர்தருபொலங்கொம்பொன்று
மதியமொன்றுறமுன்றாங்கிமழைமுகில்பின்னொன்றேந்திப்
பொதிசுவையமுதகும்பம்பொலிதரவிரண்டுகொண்டு
துதிசெயநின்றாலென்னநிற்குந்தோகையைக்கண்ணுற்றான். (எக)

காதலங்கடலுண்டாக்குங்காரிகைபாதந்தோய
வாதலங்கமையுமாநோன்பாற்றியதரவவேந்தன்
பாதலங்கொல்லோமேலாப்பகர்தலங்கொல்லோவிந்தப்
பூதலங்கொல்லோவென்னாப்புந்தியுளையங்கொண்டான். (எஉ)

அணிமலர்வாடிற்றில்லைகண்ணிமையாடிற்றில்லை
மணிமுகமதியகத்துவருவெயர்கூடிற்றில்லை
தணிவிலிவ்வேதுவாலித்தனாமகளல்லளென்று
கணிபுனைதடந்தோளண்ணல்கருத்துறத்தெளிந்தானன்றே. (எங)

இறையவன்முகத்துநாட்டமிரண்டனுளொன்றுவெப்ப
நிறைதரச்செயுமற்றொன்றுதட்பமேநிகழ்த்தாநிற்கு
மறைவிழியிரண்டுங்கூடியன்னவையியற்றுமென்று
குறையறுகாதல்பொங்கக்குறிப்பறிந்தனன்கோமானே. (எச)

இறையிவைமதிக்குங்காலையெழுந்தவெங்காமவேட்கைப்
பொறையுடையவளாயீங்குப்புகுந்தமைதந்தைக்கோத
நறைமலர்க்குழலாரோடுநாகர்கோன்மகண்மறைந்தாண்
மறைதலும்மதிமாழாந்துமன்னனுமிருக்கைபுக்கான். (எரு)

துங்கமிருந்தவொருசாலீசுகனென்பவனங்குலத்துதித்தான்
சங்கநிகருங்களத்தொருபெண்டந்தகாமந்தலைக்கொண்டா
னங்கமுழுதும்வெப்படைவானதுகாணேனென்றகல்வான்போற்
பங்கமருவுமேல்கடற்போய்ப்படிந்தான்பரியேழுடைத்தேரோன். (எசு)

பரந்தகாமத்தழற்கடலுட்படிந்துவருந்திவாழ்வதினுஞ்
சுரந்தகொடுந்தீப்பெருங்கடலுட்டோய்ந்துவாழ்தலைமையுமென
நிரந்தசுடுவெந்தழலெழுப்பிநேரேமுழுகிக்காட்டல்பொரூஉங்
கரந்தவெதுப்பினினன்செவ்வானெழுப்பிக்கடுகப்புகுந்ததே. (எஎ)

கொழுநர்பிரிவோராறுளதுகுறித்தபோதுமனங்கலங்கும்
வழுவில்குலமங்கையர்மனமும்வண்டாமரைப்பூக்களுமொத்த
பழுதிலவர்தங்குழலவிழ்ந்துபடியிற்படிந்துகிடப்பதெனக்
கழுதுமுறங்குமிருட்டிரண்மண்கரும்பொன்னிறமென்றிடத்தோய்ந்த. ()

பட்டநிறைபுள்ளொலியடங்கப்பள்ளிக்கணக்கர்வாயடங்கத்
தொட்டதொழிலிற்குறைகிடப்பத்தொக்கபறவைகுடம்பைபுக
விட்டமருவுபிணுத்தழுவியெல்லாவிலங்குஞ்சேக்கைபுகப்
பெட்டமதவேட்ணந்தாருட்பிறங்கிப்புகவல்லிறுத்தன்றே. (எகூ)

செந்தாமரைகண்முகமலர்த்தேரிற்றோன்றுஞ்செங்கதிரா
நந்தாமேலைக்கடலுரகநடுங்கப்பிடித்துவிழுங்குதலு
மந்தாரணியினுயிரனைத்துமந்தகாரப்புனல்படிந்த
சந்தாபக்கார்கோட்குளித்தான்சாலீசுகனென்றிடுமிறைவன். (அ0)

கூகைகளிப்பக்கொடிகவலக்கூட்டங்குலைதலாற்சிறிது
மோகைதுளும்பாநேமிப்புளுணவுகருதியுழிதரமிக்
காகையமைந்தவிருளிரியவாங்காங்கெடுத்தார்பல்விளக்கம்
வாகையனையனுவளகத்தமளிசேர்ந்துளமாழாந்துறைப்பான். (அக)

சறுவதீர்த்தத்தடங்கரையிற்சார்ந்தகாலையிளநிலவின்
முறுவல்பூத்தபொற்கொம்புமுன்னின்றொளித்ததெங்கென்னு
மறுவில்காட்சியுற்றுடனேமறைந்துபோயகாரணத்தாற்
பெறுவதொன்றிலொருமின்னற்கொடியோவென்றுபேசுமால். (அஉ)

பொன்னங்கொடிபோலெதிர்நின்றுபோனாளைம்பாற்றுணங்கறலென்
முன்னம்பரந்துபுவனமெலாமுற்றியதுவேறிலையென்னு
மன்னம்பொருவுநடையார்மெய்யமைந்தவொளிகண்டுளங்கூசி
யென்னங்குலத்துமுதன்மறைந்ததியல்பாய்மறைந்ததிலையென்னும். (௮௩)

முத்தம்பொருவுமுறுவலெனுமுறுவல்பொருவுமுத்தமெனும்
வித்தம்பொருவுமேனியெனுமேனிபொருவும்வித்தமெனு
மத்தம்பொருவுங்காந்தளெனுங்காந்தள்பொருவுமத்தமென்றன்
சித்தம்பொருவுமருங்குலெனுமருங்குல்பொரூஉமென்சித்தமெனும். (௮௪)

கூற்றமிரண்டுண்டெனில்விழிக்குக்கூறலாகுமுவகையெனு
மாற்றமுணரோமானாலும்வடித்ததேனினினிக்குமெனு
நாற்றங்கமழுந்திருமேனிநலத்தையாவர்புகழ்வரெனு
மேற்றமெனக்குமுண்டாகுமினியோர்காற்கண்ணுறினென்னும். (௮௫)

ஒழியாவமுதகடமிரண்டுமுற்றாலுய்யலாமென்னுங்
கழியாவெப்பமிரண்டாயகதலிவருடக்கழியுமெனும்
பழியாவெனதுவிறன்மடங்கல்பாறிற்றொருமானாலென்னு
மழியாவாசைநோய்க்குமருந்தகிலபுவனத்தினுமிலையால். (௮௬)

என்றுபிதற்றும்பொழுதாழியிறையுமோதைசெவிமடுத்தான்
கன்றுகனன்றெய்சலாகையிருகாதுட்புகுத்தாரெவரொன்பா
னன்றுமுனிவன்குடிக்கவிறலழிந்தாயமரர்கலக்குதலால்
வென்றுமிளிரும்பொருளனைத்துமிழந்தும்வீணையிறைகின்றாய். (௮௭)

நின்னையமைத்தோரெங்கள்குலநிருபராதுவும்போதாது
பின்னையளவாப்புனிதமுறப்பெருவானதியைமண்ணிழித்துக்
கொன்னைமருவக்கலப்பித்தார்கூறுமிவையுட்குறியாயா
யென்னைவருத்தியென்பெறுவாயென்றுபெருவாரியைமுனிந்தான். (௮௮)

ஆயபொழுதுசந்தனக்காட்டளைந்துபொதியாசலநின்று
மேய்குளிர்வாவியினறும்பூவிரைதோய்ந்தெழுந்துகள்ளுண்டு
சாயவருவார்திறமென்னத்தடஞ்சாளரம்புக்குலவியது
பாயவிளங்காலதுகண்டுபதைத்தானின்னபகருவான். (௮௯)

கொல்லவெழுவெம்புலிபோன்றகொடியமந்தமாருதமே
நல்லதமிழினுடன்பிறந்தாய்நகுகண்ணோட்டஞ்சற்றுமிலாய்
சொல்லவினியவமுதினொடுந்தோற்றமுடையதானாலும்
வல்லவிடங்கொல்லாதொழிதலுண்டோநின்னைவழங்கலெவன். (௯0)

உற்றபொதியவரையென்னுமொருபாம்புயிர்த்தவெவ்வுயிர்ப்பிற்
செற்றமந்தமாருதமேசெறிந்தசாந்தமுனிவர்குழாம்
பற்றவமர்ந்துமருவிடத்துப்பயின்றுஞ்சாந்தஞ்சிறிதுமிலாய்
பொற்றநறுநீர்க்கிடந்தாலுங்கிடையுளீரம்பொருந்தாதே. (௯௧)

இந்தவண்ணஞ்சிறுகாலோடெதிர்ந்துசினந்துபிணங்குங்காற்
சந்தநறியதேமாவின்றலையிற்குயிலோர்காற்கூவ
வந்தமுழக்கங்குயின்முழக்கினரசர்கோணஞ்செவிவெதுப்ப
வெந்தவிரும்புபுண்ணுழைந்தவிதம்போற்கனன்றுவிளம்புவான். (கஉ)

பூவிற்பொலியுந்திருமேனிபொன்னிற்பொலிவாண்மொழிக்குடைந்து
மாவிற்கரந்தகருங்குயிலேவாளாவின்றுவாய்திறப்பாய்
நாவிற்சிறந்தவல்லர்முதலொருமாத்திரைநாட்டாதுனைச்சொல்
பாவிற்கிளையக்களகண்டமென்றார்கொடுமைபார்த்தன்றே. (கங)

இனையவிதமாங்குயிலைவெறுத்தினையுங்காலைநல்லாரு
ளனையதடத்துளரக்காம்பலரும்பரனைத்துமுறுக்குடைய
நினையவரியவின்மீனுநிரம்புமகிழ்ச்சிதலைக்கொள்ளத்
துனையவொருபுள்ளுணன்றேயலத்தூயமதியந்தோன்றியதால். (கச)

தூயதேவதீர்த்தத்துத்தொகுபலவொண்மலர்நாப்ப
ணூயவிண்ணோர்வாயூறவ[illegible]னெழுந்தசுதைக்கடம்போற்
பாயநெடியவானத்திற்பராதுசெறிதாரகைநாப்பண்
மேயசகோரம்வாயூறவெழுந்ததொருவெண்டிங்களே. (கரு)

ஊழிமுதல்வன்வெள்ளியநீறொருங்குபரந்தகாட்சியெனத்
தாழியமைந்தபால்பொங்கிவழியாநின்றதன்மையென
வாழியுதித்தவெண்டிங்கட்கிரணம்பரந்துவழிந்தனவா
லாழியரசனதுகண்டானழன்றுபுகலத்தொடங்கினான். (கசா)

நல்லாவுதித்தபாற்கடலுணயக்குமமுதத்தொடுபிறந்தாய்
சொல்லாநின்றவமரர்வயிற்றெழுந்தபசியுந்தொலைத்திடுவாய்
பொல்லாவிருளின்பொம்மலறப்பொலியுங்கிரணம்வீசிடுவா
யெல்லாநயமுமுடையாய்மற்றென்னைவருத்தலெவன்றிங்காள். (கஎ)

கஞ்சமனைத்துங்குவித்திடுவாய்கழுநீரனைத்தும்விரித்திடுவாய்
நஞ்சநிகர்ப்பாய்தணந்தார்க்கமுதினையப்பாய்மணந்தார்க்குத்
தஞ்சமனையருட்சிலரைவெறுப்பாய்சிலரைச்சார்குவாய்
மஞ்சநடுவின்மையினன்றேவளர்வாய்தேய்வாயாயினுய். (கஅ)

மறைமுற்றுணர்ந்துசிருட்டிபுரிமராளமுயன்றுங்காணரிய
நிறைவிற்பொலியுமுடியமர்வாய்நிலத்தினுயர்ந்தோர்ச்சார்ந்தவருங்
குறைவிற்படுமோர்தொழிலியற்றார்குறியொப்புரவாற்றவருணர்ந்துங்
கறையிற்றவிராவிஃதியற்றல்கடனோமடனேவாமதியே. (கக)

என்றுமதியைமுனிதருகாலெழுந்துகருப்புச்சிலைகோட்டித்
துன்றுசுரும்புநாண்பூட்டித்தோலாக்கணைத்தினொலிகாட்டி
யன்றுமலர்கள்பலகூட்டியனங்கனணியுய்த்திடுவதுகண்
டின்றுசெ[illegible]றின்றிவன்செயலுக்கென்றுவெதும்பியிவையிசைப்பான். ()

வேறு.

ஒலிகடலுலகின்கண்ணேயொள்ளறிவுடையார்தம்மின்
வலியர்மேற்செல்லுங்காற்றுமாவதுமனத்தினெண்ணி
மெலியர்மேற்செல்லார்முக்கண்விமலன்மேற்செல்லாதென்பாற்
பொலிதரப்புகுந்தாய்வேணின்வீரந்தான்புகலற்பாற்றே. (கoக)

கழைகுழைத்தளிநாண்பூட்டிக்கணையெனச்சிலபூக்கூட்டி
விழைசெருப்புரிவாய்வெற்பும்வெருநிடும்வலியான்மிக்க
குழைசிலைவாங்கிப்பல்லைகொடுங்கணைதொடுக்கவல்லே
னுழையருவமைந்தாயீதுநோக்கியோறுவதிவேளே. (கoஉ)

இருந்தவமுனூற்றியீன்றவிருமுதுகுரவர்மாட்டும்
பொருந்தவெம்பகழிதூண்டிப்புல்லியகாமமேற்றும்
பெருந்தகைநினக்கியானோர்பேரமர்புரிவார்தம்முட்
டிருந்தனன்கெதிருருருஞ்சீர்மையிற்சிறந்தாரன்றே. (கoங)

ஒருகவியெய்யுங்காலத்தொளித்துநின்றெய்தானுந்தை
வருபழிநோக்காய்நீயுமறைந்துநின்றென்னையெய்வாய்
பொருதொழில்வனமாவெய்யும்புன்றொழிற்கிராதன்போன்று
யிருநிலத்துனையுந்தேவனென்மருஞ்சிறந்துளாரே. (கoச)

என்றுவெய்துயிர்க்குங்காலையிலங்குநங்கலத்துதித்தான்
கன்றுதலொழிப்பேனென்றுகடுகவந்தெழுவான்போல
வொன்றுபல்விளக்கமெல்லாமொளியிழந்தகலக்கீழைக்
குன்றினின்றுதயஞ்செய்தான்குலவெழுபரித்தேரானே. (கoரு)

பரசிவந்தோன்றலோடும்படுமலவிருள்கெட்டாங்கு
வரமிகுபரிதிதோன்றமாய்ந்ததாலிருளின்பொம்மல்
விரவுபுன்றெய்வமெல்லாம்வீறுதேய்ந்தொளித்தன்மாணக்
கரவறப்பயில்வீபத்தாதியசுடர்கழிந்தவன்றே. (கoசு)

அருமறையொலியெழுந்தவந்தணரிருக்கையெங்குங்
கருவிலங்கொலியெழுந்ததருச்செறிககனமெங்கு
மொருவில்புள்ளொலியெழுந்தவோடைநீர்வாவியெங்கும்
பெருகுசங்கொலியெழுந்தபிரானமர்தளிகளெங்கும். (கoஎ)

அரவின்வாய்வீடுபெற்றவண்ணலம்பரிதிபோல
விரவின்வாய்வீடுபெற்றவிலங்கிலையலங்கல்வேலான்
புரவின்வாய்தேவதீர்த்தம்புகுந்தினிதாடியாரும்
பரவின்வாய்திருக்காரோணப்பெருந்தளிபண்பிற்புக்கான். (கoஅ)

கருந்தடங்கண்ணியோடுகலந்தினிதமராநின்ற
பெருந்தகைபாதம்போற்றிப்பேணுபுநின்றுகத்
திருந்தமுன்னிற்கின்றானைத்தெய்வநாயகனேர்நோக்கி
வருந்தனஞ்சவுந்தரபேர்மாலிடஞ்சேறியென்றான். (கoகூ)

தனையடைந்தவனையாருந்தாழ்தரவுயர்த்தாநின்ற
தனிகர்கருணைமூர்த்திசாற்றியதுணர்ந்துகஞ்சா
தனைபுணர்மார்பனையசவுந்தரமாலைச்சார்ந்தான்
றனையரும்புகழ்சால்சாலீசுகனெனுந்தனையாள்வேந்தன். (௧௧0)

மந்தரம்பொருவுதோளான்மாமணிக்கோயின்மேவிச்
சுந்தரராசமாலைத்தொழுதெதிர்நிற்றலோடு
மந்தரநாடருண்ணவமுதமுன்னளித்ததெய்வக்
கந்தரமேனிமாலக்காவலன்முன்னர்தோன்றி. (௧௧௧)

புரவலவஞ்சேலாதிபுராணர்க்குவடபாலுள்ள
துரனுடைக்காரிகாப்பதோங்கியதருமரூபத்
திரமருவியதனைக்குரோசத்திற்றிகழ்வதென்று
மரவநாட்டெளிதுசெல்லற்காயதோர்பிலமொன்றம்மா. (௧௧௨)

ஆயவப்பிலத்தூடேகினரவநாட்டடைவையாங்கு
மேயபன்னகர்வேந்தன்மேதகுமுகமன்செய்து
தூயதன்மகளைமன்றறுனைந்துசெய்தளிப்பனென்றான்
மாயனைவணங்கியாங்குவிடைகொண்டான்வள்ளற்கோமான். (௧௧௩)

அறிதுயிலமர்ந்தமூர்த்தியருளியவாறேசென்று
மறிமழுக்கரக்காரோணவள்ளலார்வடதிசைக்கட்
செறியனைக்குரோசத்தெல்லைசிவணியபிலத்துட்புக்கான்
குறிகெழுநாகர்நாடுகுறுகினனரசர்கோமான். (௧௧௪)

இவணிலையின்னதாகவிழைமுலையொன்றுகாணு
டவனிவனென்னக்கண்டாடந்தையைவணங்கியைய
சிவனமர்காரோணத்துத்திகழ்பெருஞ்சுறுவதீர்த்தத்
தவனிவனென்னத்தேறெனடைந்தனனொருவனுங்கே. (௧௧௫)

அன்னவற்காண்டலோடுமணிமுலையொன்றுகாணே
னின்னதுநின்பாற்கூறவெய்தினேனென்னலோடும்
பன்னகவேந்தனுள்ளம்பண்புறமிகமகிழ்ந்து
நன்னலத்தவனேநிற்குநாயகனவனென்றான். (௧௧௬)

அந்தநன்னகரத்துள்ளாரனைவருமறியக்கூறிச்
சந்தநன்மணியாற்பொன்னாற்றகவலங்காரஞ்செய்து
சுந்தமென்றுடையன்மார்பக்காவலன்வரவுநோக்கி
நந்தலிலுவகைபூப்பவிருந்தனனகர்வேந்தன். (௧௧௭)

ஆயவப்பொழுதேசாலீசுகனவனெதிரேசென்றான்
பாயபொற்பிவனேயந்தப்பார்த்திபனெனத்தேர்ந்தீங்கு
மேயநீயாவன்வந்தகருமமென்விளம்புகென்று
னேயமாரரவவேந்தனரபதிநிகழ்த்தலுற்றான். (௧௧௮)

ஏற்றமாரொருமார்த்தாண்டனியலமைபெருங்குலத்திற்
றோற்றமேவினன்யான்சாலீசுகனெனுநாமமுள்ளே
னாற்றரின்பாங்கரொன்றுகருதிவந்தடைந்தேனென்றான்
மாற்றமொன்றுரையான்சேடன்மகிழ்ச்சியிற்றிளைப்புற்றானே. (சகக)

ஒருமுழுமறையக்காட்சியுதவினனிவனேகொல்லென்
றருமகடன்னைநோக்கவனையளுமிணையனேநின்
மருமகனெனச்சொல்லாதுசொற்றிடமகிழ்ச்சிகூர்ந்த
பொருவருநாகர்கோமான்யாரையும்பொருந்தக்கூட்டி. (க௨0)

மணமகன்றனக்கெண்ணில்லாமணிப்பணியெடுத்துச்சூட்டிப்
பணவரவல்குன்மாதர்பவளவாய்வாழ்த்துமல்கத்
தணவருமியமுழங்கத்தவாதமங்கலங்கூத்தாடக்
குணமுயர்மகளையந்தக்கொற்றவற்குதவினானே. (க௨க)

மேவருமகிழ்ச்சிபொங்கவேனெடுங்கண்ணாளோடு
பூவருமுவளகத்துப்புகுந்துசந்தாபந்தீரத்
தாவரும்புகழ்சால்வேந்தனல்குலந்தடத்துண்மூழ்கித்
தேவருநறுமுறுக்கச்செறிந்தபேரின்பந்துய்த்தான். (க௨௨)

தன்னரசுரிமையெல்லாமருமகன்றனக்கேயாக்கிப்
பன்னகவேந்தன்வல்லேபாதலநின்றுபோந்து
மன்னலநனிவிராயமருத்துவிருதியைச்சார்ந்து
தொன்னலமமைந்தமுக்கட்சோதியையாங்குப்போற்றி. (க௨௩)

முந்துதான்பதிட்டைசெய்தவிலிங்கத்தின்முன்புமேவி
நந்திப்பரன்பிற்போற்றிநாடுமவ்விலிங்கமேல்பா
லுந்துமோர்தீர்த்தந்தொட்டுமெற்றதினுவந்துமூழ்கி
* வந்துதேருணவாக்கொள்வோன்வைகலும்பூசிப்பானால். (க௨௪)

குடந்தையேயாதியாகக்குறிக்கொளுந்தலங்களுன்குந்
தடந்தைதாமரைமுன்னாயதண்மலராதிகொண்டு
விடந்தைவாளெயிற்றுநாகர்வேந்தனோர்காலநான்கு
மடந்தையோர்பாகத்தானைப்பூசனைவழாதுசெய்வான். (க௨௫)

குடமதியபரபக்கஞ்சதுர்த்தசிகூடுநாளி
னடநவில்பரனைப்பூசைசெய்தற்குநயந்தான்போல
மடனிருகதிரோன்மேலைவார்கடற்புனல்படிந்தான்
விடனமரெயிற்றுநாகர்வேந்தனுநன்னீர்தோய்ந்தான். (க௨௬)

நிலவியமுதல்யாமத்துநிறைமலராதிகொண்டு
கலவியவன்பர்நெஞ்சங்கழன்றிடாக்கருணைவாழ்வை
யுலவியகயற்கண்ணாளையொருபுறங்கொண்டகோவைக்
குலவியகுடந்தைக்கீழைக்கோட்டத்திற்பூசித்தானே. (க௨௭)

---

* வந்து - காற்று.

அடுத்தவோரிரண்டாம்யாமத்தமையுபகரணங்கொண்டு
மடுத்தபேரன்புபொங்கமலவிருளனுக்குந்தெவ்வைக்
கெடுத்தவைம்பொறியார்வாழ்வைக்கேடிலாமுதலைவிண்ணங்
கடுத்தபல்வளஞ்சால்சண்பகவனத்திற்பூசித்தானே. (கஉஅ)

உறவருமூன்றாம்யாமத்துபகரணங்கைக்கொண்டு
மறவருமன்பினெங்கண்மாசிலாமணியைப்பாசந்
தெறவருமுதலைமேலாஞ்சின்மயப்பொருளைவானத்
தறவரும்புகழ்திருப்பாம்புரத்திடையருச்சித்தானே. (கஉகூ)

எண்ணியநாலாம்யாமத்தியைபலபொருளுங்கொண்டு
தண்ணியநேயம்பொங்கச்சார்ந்தவர்தமைவாழ்விக்கும்
புண்ணியமுதலைமேலாம்பூரணப்பொருளையாருங்
கண்ணியவரங்கணல்குங்காரோணத்தருச்சித்தானே, (கஙo)

பூசையிவ்வாறுசெய்யும்புண்ணியச்சேடன்காண
வாசைகொளாயெம்பெம்மானவ்விலிங்கத்தினின்று
மோசைகொள்கருவியைந்துமுயர்ந்துவானகத்தியம்ப
வீசையுமொருபான்மேவவிடபவாகனனாய்த்தோன்றி. (கஙக)

கந்தருநாப்பண்மேவக்கயிலைமால்வரையோடெய்து
மந்தமில்காட்சியீதென்றமரர்பூமாரிதூர்ப்பப்
பந்தமின்முனிவர்பெய்கட்பனிப்புனலவற்றையீர்ப்ப
வந்தமிலடியர்மற்றோரரகரகரவென்றார்ப்ப. (கஙஉ)

நந்திமுற்கணங்களெல்லாநகுகரந்தலைமேற்கூப்பி
முந்திநின்றிறைஞ்சல்செய்யமுடிமிசைப்பிறைவிளங்க
வந்தியர்புகழ்ந்துநிற்பமாமறையனைத்தும்வாழ்த்தத்
தந்தியாழ்வல்லோர்பாடத்தவாப்பெருங்காட்சிதந்தான். (கஙங)

காட்சிதந்தருளலோடுங்கட்செவிநாகர்கோமான்
மீட்சியினேயம்பொங்கவிரைந்தெழுந்துவந்துசூழ்ந்து
மாட்சியிற்பணிந்தெழுந்துவள்ளறனெதிரோநின்று
றாட்சியிற்சிறந்தவம்மான்வேண்டுவவறைதியென்றான், (கஙச)

கன்றுமான்மழுக்கையாய்நின்காட்சியின்விசேடமாய
தொன்றுமின்றேனும்வேட்கையுளாக்குவலவையாவென்னி
லென்றுமிந்நகரமென்பேரினிதுறப்பூணல்வேண்டு
நன்றுபஃறிருவுநாட்குநாளுயர்ந்திடவும்வேண்டும். (கஙரு)

இந்தமாவிலிங்கநீங்காதென்றுநீபொலிதல்வேண்டுஞ்
சந்தவிவ்விலிங்கத்தோடுதீர்த்தமுமென்பேர்தாங்கிப்
பந்தமதொழித்தலோடுவேண்டுவபயத்தல்வேண்டு
மந்தமில்புனல்யாறென்றீங்கணைந்தாழிகலத்தல்வேண்டும். கஙசு)

இத்துணைவரங்களன்றியின்னுமொன்றிரப்பதுண்டான்
முத்துணைமுறுவல்பாகவுடம்பொடுமுயங்கும்வாழ்வி
லத்துணையாசையில்லையடியனேற்கென்றுமானந்
தத்துணையாகநின்பொற்றாட்கலப்புறுத்தல்வேண்டும். (கருஎ)

இவையருளென்றுதாழவிமையவர்மயனைக்கொண்டு
சிவையொருபாகத்தம்மான்றிருநகர்பெரிதாக்கண்டு
குவைமணிசெம்பொனுதிப்பொருளெலாங்குவியச்செய்து
நவையுறயாருநாகநகரெனப்புகல்கவென்று. (கருஅ)

கண்மலர்ப்பொழில்சூழ்நாகைக்காரோணநகர்க்குமேல்பா
லெண்மலரளவைகூறினிரண்டியோசனையினின்றும்
விண்மலர்நதியுநாணவிளங்கொருகுடிஞைதோற்றித்
தண்மலர்திருக்காவேரிக்காதியிற்சமைத்தவாற்றால். (கருகூ)

விருத்தகாவேரியென்றுவிளங்கவோர்நாமஞ்சாற்றித்
திருத்தவாதியிற்சுருக்கிவரவரவிரியச்செய்து
மருத்தபூம்பொழில்சூழாரூர்த்தென்றிசைவழியியக்கிப்
பொருத்தமாம்புணரிமேவிப்புனிதஞ்செய்திடச்செய்தானே. (கசo)

மற்றவையனைத்துநல்கிமறைந்தனனிறைந்தசோதி
பற்றறுநாகர்வேந்தன்பரனடிகலந்துவாழ்ந்தான்
கொற்றவிண்ணவர்களெல்லாங்குவிமலர்மாரிதூர்த்தா
ரற்றமிலனையதானமடுத்தவர்க்கனைத்துநல்கும். (கசக)

பன்னகவேந்தன்பெற்றபண்புசால்பேறுநோக்கி
நன்னர்வாசுகியடைந்தந்நாகதீர்த்தத்தின்மூழ்கிப்
பொன்னவிரதற்குக்கீழ்பாற்சிவலிங்கநிறுவிப்போற்றித்
தன்னமர்நாமஞ்சூட்டிச்சாலோகமெய்திவாழ்ந்தான். (கசஉ)

கறையணச்சங்கபாலனத்தடங்கலந்துமூழ்கி
நிறையுமத்தடத்துமேல்பாற்சிவலிங்கநிறுவிப்போற்றி
முறைமையிற்றன்பேர்நாட்டிவாசுகிமுயன்றுபெற்ற
மறைதலில்பேறுபெற்றுவாய்ந்தினிதிருந்தான்மன்றே. (கசங)

குளிகனென்பவனுமந்நீர்க்குறுகுபுவிதியினாடி
யளிகிளரனையதீர்த்தத்தமைவடகரையின்கண்ணே
தெளிதரத்தன்பேராலோர்சிவக்குறிநிறுவிப்போற்றி
யெளிவறச்சங்கபாலன்பெற்றபேறெய்திவாழ்ந்தான். (கசச)

இன்னுமத்தீர்த்தமூழ்கியிருஞ்சிவக்குறிபூசித்து
மன்னும்வண்சிவசாலோகமுதலியமருவிவாழ்ந்த
பன்னுபன்னகங்கள்பல்லபாரினும்விசும்பின்கண்ணுந்
துன்னுபல்லோர்கண்மூழ்கித்துயரொழிந்தின்புற்றார். (கசரு)

நாகமாநகரநண்ணிநாகதீர்த்தத்தின்மூழ்கி
நாகநாதனைக்கண்டேத்துநல்லவராஞூர்மண்மே
ஞகவாய்விடஞ்செய்துன்பநண்ணிடார்சிறிதுமென்று
நாகநாட்டவர்கொண்டாடநலம்பொலிந்தமர்வரன்றே. (கசுசு)

பணியரசிறைஞ்சநாலாம்பதமினிதருளிச்செய்த
மணிமருள்கண்டநாகநாதர்தம்வரவுசொற்றுங்
கணிதமிலருளான்மிக்குக்கலந்தவர்க்கின்பஞ்செய்யு
மணிகிளர்கார்முகேசர்வரவினியறைவாமன்றே, (கசுஎ)

நாகநாதப்படலம் முற்றிற்று.

ஆ படலம் கக இ - திருவிருத்தம் - கஉசுஎ.

## கார்முகேசப்படலம்.

சாதுநந்திதாடொழாக், கோதுதீர்குமாரன்றே
மோதுகார்முகேசன்சீ, ரோதுகென்னவோதுவான். (க)

மிக்கமாதவச்சம, தக்கினிப்பெயரினுன்
றக்ககாதன்மனைவிசொல், லிக்கவாவிரேணுகை. (உ)

திருகுதீரிருவர்க்கும், பிருகுவார்த்தைபேணிய
கருகுமேனிமாயவ, னுருகுமைந்தனாயினன். (ஙு)

பரசிராமனென்றுபேர், விரசுமாறுமேவுநா
ளரசுகாத்தவீரியன், வரசுமார்க்கமாற்றினன். (ச)

கற்புமேவிரேணுகை, பொற்புநேர்தெரிந்துகொண்
டற்புநெஞ்சமைத்தனன், வற்புமேயமன்னவன். (ரு)

அனையடன்னைநோக்குமோர், வினையமுள்ளத்தெண்ணுபு
நனையுநீர்கொளுந்தடத், தினையுநெஞ்சனெய்தினன். (சு)

கூடுசாயைகொள்ளுநீ, ரூடுதோன்றவானின்முன்
பாடுசால்பெரும்பழி, வீடுதீர்ந்தவெய்யனே. (எ)

அன்னசாயைநோக்கினு, ளின்னசாயைமேனியா
னென்னசாயலானெனுத், தன்னமுள்ளத்துள்ளினுள். (அ)

வந்ததிங்குநாடியே, பந்தமேதுமில்லவன்
முந்தநீயிவளுயிர், சிந்தமாட்டுகென்றனன். (கூ)

தந்தைசொற்றலைக்கொடு, நிந்தைவந்துநேர்ந்தது
முந்தையூழ்முறையெனச், சிந்தைநொந்துசெய்தனன். (க0)

வனிதைமாயமாய்த்தலு, மினியசெய்திலானெனுக்
கனிசினத்துமன்னவன், முனிவனுவிபோக்கினுன். (கக)

பெற்றதூயரிருவரு, மிற்றதன்மையெண்ணிநா
ளற்றமன்னன்மேற்பெருஞ், செற்றமேவினன்மகன். (கஉ)

விரசுபாவம்வீக்கவு, முரசுகண்படாமுன்றி
லரசெலாமழிக்கவும், பரசிராமனெண்ணினன். (கங)

நாணமேருப்பூட்டுதிண், டோணமாதிமேவுகா
ரோணவூனையுற்றன, ஞாணமேவகத்தினன். (கச)

பாவநாசம்பண்ணிடுந், தேவதீர்த்தந்தோய்ந்துபச்
சோவமோர்புறத்துமுச், கோவனோர்குறுகினன். (கரு)

முனியுடம்புதன்னுடம், பினிதினேற்றுமண்ணருள்
கனிவிற்போற்றிக்கைதொழாத், தனியவன்றனக்கரோ. (கசு)

நிருதியாசையிற்புகா, வொருவிருத்தகாவிரி
யருகினோர்சிவக்குறி, பெருகுமன்பிற்றாபித்தான். (கஎ)

அருகுநாற்சதுரத்தி, னொருதடமுண்டாக்குபு
மருமலர்முன்னயகொண், டுருகியன்பிற்பூசிப்பான். (கஅ)

மழுவிராமனின்னணம், பழுதில்பூசைபண்ணுநாள்
வழுவில்கார்முகமொன்று, தொழுமந்நீருட்டோன்றிற்றே. (ககூ)

ஈதுதோன்றலண்ணற, னோதுபேரருளொளுக்
கோதுதீர்குணங்கெழு, சாதுவாளனெண்ணுழி. (உ0)

அலிங்கமைந்ததென்களப், புலிங்கவாரமுனுதற்
கலிங்கவாசையானுமவ், விலிங்கநின்றுதோன்றினன். (உக)

கண்டிராமன்கைதொழாத், தண்டுபோற்றனைவிழா
மண்டுமோகையின்னெழாத், தொண்டுபூண்டுநின்றனன். (உஉ)

உற்றகாதலன்னையச், செற்றபாதகந்தவிர்த்
தற்றமேதுமில்லதோர், கொற்றமுங்கொடுத்தனன். (உங)

தோன்றுகார்முகம்மெடுத், தான்றமன்னராருயி
ரேன்றுமாய்த்தியென்றுகண், மூன்றுளான்மறைந்தனன். (உச)

சொற்றவாறுகார்முகம், பெற்றகையனயவன்
கொற்றமன்னராருயிர், முற்றமாய்த்துவாழ்ந்தனன். (உரு)

மருவுகார்முகப்பெயர்ப், பொருவிலாததீர்த்தமும்
பெருகுசீரிலிங்கமு, மொருவுறுமலுற்றன. (உசு)

ஏர்த்தமேன்மைக்கார்முகத், தீர்த்தந்தோய்ந்தெழுபவர்
பார்த்ததிக்கினும்புகா, வார்த்தபாதகங்களே. (உஎ)

அரியகார்முகேசன்ருள், பிரியமாகப்போற்றுவார்
கரியமாலுமெய்தரும், பெரியபேறுபெறுவரே. (உஅ)

வந்தகார்முகேசர்சீர், நந்தநாமுரைத்தனஞ்
சந்தரவிடங்கர்சீ, ருந்தகத்தெரித்துமால், (உக)

கார்முகேசப்படலம் முற்றிற்று.

ஆ படலம் உ0 இ-திருவிருத்தம்-கஉகசு.

## சுந்தரவிடங்கப்படலம்.

அந்திவெண்பிறைமிலேச்சியபெருமானருளினுகமமுழுதுநன்குணர்ந்த
நந்தியெம்பிரான்றிருவடிவணங்கிநலங்கெழுஞ் சனற்குமாரமாமுனிவன்
சந்திதென்னையினுயர்ந்தகாரோணக்கடிநகர்ப்பெருஞ்சுந்தரவிடங்கர்
புந்திசெய்யுநன்மான்மியமுணரப்புகலுவாயெனப்புகலுவதானுன். (க)

ஆதியாகியசிருட்டியின்மாயோனழகிதாவொருமகப்பெறவேண்டிப்
பாதிமாமதிசூடியபரமன்பண்புசான்றமூர்த்தங்களுட்கரிசு
காதிநன்மகவளித்திடுசோமாக்கந்தமூர்த்தத்தையமரர்கம்மியனூற்
சோதிமேவுறப்புரிந்துபூசித்துச்சுந்தரந்திகழ்காமனைப்பெற்ருன். (உ)

அன்னகாலையினவுணர்கள்பல்லோரமரர்நாட்டினைவளைந்தமராடப் [அ
பொன்னகர்க்கிறைவச்சிரமேந்திப்பொருதும்வென்றிலன்பாற்கடலடைந்
பன்னகத்திடைத்துயில்பவற்குணர்த்தப்பைந்துழாய்த்தொடையினையனு
மெண்ணி, நன்னரத்தகுமூர்த்தியைக்கொடுத்துன்னகரிற்பூசனைபுரியென
[விடுத்தான்.
அந்தமூர்த்தியைத்தன்னகரிருத்தியான்றபூசனைபுரிந்துபல்லவுணர் [மாக்
சிந்தவென்றனன்வலனெனுமவுணன்செயிர்த்தெழுந்தனன் றிகழுமச்சோ
கந்தநம்பிரான்றிருவருள்பெற்றுக்கதிர்க்குலத்திகன்முசுகுந்தற்கொண்டு
முந்தவென்றனன்மகிழ்ந்தம்மூர்த்தியையம்முசுகுந்தன்கொளக்கொடுத்த
[னன்மகவான்.
மேயமூர்த்தியைமிகுபெருஞ்சிறப்பின் விமானத்தேற்றுபுமுசுகுந்தனென்
பான்,பாயவைவகையியங்களுமியம்பப்பாரொலாங்களிசிறந்திடக்கொடுவ
ந்,தேயபல்வளப்பெருந்திருவாரூரிணையிலாலயஞ்செய்துதாபித்து
நேயமிக்குறப்பூசனைபுரிந்துநிகரிலாதபேரின்பத்திற்றிளைத்தான். (ங)

அடுத்ததாகியசிருட்டியிலிறையாருறுதத்துவத்திரண்மலங்கவரப்
படுத்ததாகியவறிவொழித்துயிர்கள்பலவுநன்கெடுத்தாளுதற்பொருட்டே
மடுத்ததாகியகருணையின்மலர்மேல்வைகுவான்முதல்யாவையும்படைத்தா
னெடுத்ததாகியவச்சிருட்டியினுயிலகமுன்புபோற்ரேன்றியமாயோன். ()

பொறியொடுங்கலப்புற்றுவாழ்நாளிற்புதல்வனின்மையையமனத்துறக் குறித்து, நெறிதரும்பிறங்கடையிலாவாழ்க்கைநீசவாழ்க்கையினிழிந்ததென் றிழித்துக், குறிகொணன்மகப்பெறுவதுகருதிக்கூடுமாதவம்புரிந்துபன்முனிவர், செறிதரும்பெருநைமிசத்தடைந்தான்செய்யதாமரைத்திருமகளோடும். (எ)

அந்தமாவனத்தொருசிவகோசமன்புமேவுறப்பிரதிட்டைசெய்து
சந்தமாமலராதிகள்கொண்டுதவாமலாயிரமாண்டுபூசிக்க
நந்தமாரருட்கடலுளமிரங்கிநாடுமாயவன்விழியெதிர்சோமாக்
கந்தமூர்த்தத்திற்காட்சிதந்தருளக்கண்டுமாயவனெழுந்தடிபணிந்தான்.()

பணிந்தமாயனைப்பரம்பரனோக்கிப் பசுந்துழாய்நறும்படலைமார்புடையாய், துணிந்தநின்கருத்தெவனுரையென்னத்தூயமான்மறுவலும்பணிந்தெழுந்து, தணிந்தயோகியருளத்தொளியாயசம்புவேநினதருளினாற்புலவரணிந்தசெல்வமிக்குடையவனேனுயினுங்குறையொன்றுளதைய. (க)

அருளிலாப்பெருந்தவமுநின்னடிக்கணன்பிலாப்பெரும்பூசையும்போலாம், † பொருளிலாமனைவாழ்க்கையென்றோதிப்புனத்துழாயணிநாரணனிரப்பத், தெருளிலாமனத்தடைதராப்பெருமானன்னதாகெனத்திருவுளஞ்செய்தான், வெருளிலாமனத்துவப்படைந்தனன்மால்விமலநாயகிசிறிதுகண்சிவந்தாள். (க0)

முனைவலத்துயர்சக்கரப்படையாய்முக்கண்மூர்த்தியைவணங்கினையன்றி யெனைமதித்திலைவணங்கிலையதனாலெய்துமைமைந்தன் மற்றவனெரிவிழியாற் கனைகடற்புவியிழிப்பநீருகிக்கழிகவென்றுரையாடுமறைந்தா ணனைமலர்ப்பசுங்கடுக்கையானோடுநவின்றசொற்செவிப்புகுதலுநடுங்கி.()

யாதுசெய்குவதினியிதற்கர்தோவெழின்மகப்பயந்திகழ்ந்திடுவதினு மோதுமற்றஃதிலாதிருப்பதுவேயோங்குமுத்தமமாகுமாயிடினு மீதுசெய்தருள்பெறுவனென்றுள்ளத்தெண்ணிவிச்சுவகன்மனைக்கூவி[ன். மாதுபாகன்முன்காட்சிதந்தளித்தவண்ணமோருருத்தருகெனப்புகன்று

சொற்றவாறமைப்பேனெனவெழுந்துதூயவிச்சுவகன்மனோரிடத்துக் கற்றகேள்வியர்சிலரொடுமமர்ந்துகரிசில்பன்மணிப் பீடமொன்றமைத்துக், கொற்றமாருமப்பீடத்தின்மேலாற்கொன்றைமாலிகைப்பிரானுலகீன்றுளற்றமேதுமில்கந்தரிம்மூவரமையுமாறுநன்காய்ந்தினிதமைப்பான். (கஉ)

குணகடற்றலையெழுமிளங்கதிருங்குறிக்கொணுச்சம்ழ்ப்புளக்கொடுவட்கத், தணவருங்கதிர்பரப்புபொன்மோலிசமைத்து மற்றதுகதிரொன மருண்டே, யணவுசந்திரகலையெனப்பிறையுமமைத்துமற்றதனுருவடிவொத்து நணவமைந்திடுபுனன்மகளொருபாணுடுகண்கவர்வருந்திறனமைத்து. ()

தூயவாகமப்படியருச்சிக்கத்தொடங்கியோர்மலரொடுத்திடும்போதே மேயநின்கருத்தெவனுரையென்றுவெள்ளிதாஞ்சிறுமுறுவலுந்தோற்றி நேயவாய்மலர்ந்திடுவதுமானநிலவுகண்கவர்திருமுகமமைத்துப் [லால். பாயபேரிருள்சவட்டுவெங்கதிரோன்பறம்பிற் றோற்றமுமொடுக்க முழு

† பொருள் - சந்ததி.

என்றுமற்றவையில்லவாய்விளங்குமிரண்டுசெங்கதிர்படைத்துவிட்டன்ன
நன்றுசெம்மணிக்குண்டலமிரண்டுநயக்குமாதிருசெவியினும்பொருத்தி
யொன்றுநீண்முடியுறுபிறையமுதமொழுக்கமற்றதுமுழுக்கநன்மார்ப
நின்றுகீழிழிந்திடுவதுகடுப்பநிகரிலாவுபவீதமுமமைத்து. (கசா)

தருமமாதியநான்குநன்களிக்கச்சமைந்தவேயெனத்தயங்குபொன்றூக[ல்
வருமையாமலர்ந்தொருதிறத்தமைந்தவங்கைத்தாமனாநான்கினுமாண்பா
பருவமங்கைபாலென்பதற்கியையப்பரசுவாளொருபரசுமொண்மானு
மருவுபேரருள்புரியபயமுநல்வரதமுங்கவின்குதிகொளவமைத்து. (கஎ)

பிரியமேவியவிடப்பதமடக்கிப்பிறங்குவேதவேதாந்தமுங்காண்டற்
கரியதாயபொற்கிண்கிணிபுலம்பவணமைந்தவோர்வலப்பதந்தசநீட்டித்
தெரியமற்றவுஞ்சிறப்புறவமைத்தாத்திருந்தமூவுலகின்றநற்றாயுங்
கிரியவாய்க்குடிகொளுமிளஞ்சேயுங்கிளந்தமற்றவற்கேற்புறவமைத்து. ()

எடுத்துவந்துலகளந்தவன்முன்னரியையவைத்தனன்விச்சுவகன்யன் [லே
கடுத்துவேறொருபொருளுறுப்பொருளைக்கமலக்கண்களிகொளக்கண்டுகவ
விடுத்துமிக்கபேருவகையனுகிவிசுவசன்மனைப்போக்கியைம்பொறியுங்
கெடுத்துமாதவனெனும்பெயர்க்கியையக்கிளர்பெருந்தவம்புரிவதற்கெழு
[ந்தான். (ககூ)

விதியிற்புண்ணியகங்கைநீராடிவெள்ளைநீற்றுமுப்புண்டரம்புனைந்து [த்து
கதியிற்சேர்த்திடுகண்மணிதரித்துக்கருத்திலுள்ளுறவெழுத்தைந்துங்கணி
மதியிற்றனமுற்றூய்மையதியற்றிமந்த்ரசுத்தியாலயமுறக்கொண்டு
நிதியிற்செய்யருக்கியமுதற்பலவுநிரப்பிமேதகுபூசனைபுரிவான். (உ0)

திருந்துமன்பினுவாசனமாகிச்செய்துவாசனைத்தயிலமுறூட்டிப்
பொருந்துபற்பலபணிகளும்பூட்டிப்புகரிலாதபல்சுவைகளுமமைந்த
மருந்துநேர்நிவேதனங்களுமூட்டிவயங்குபற்பலதீபமுங்காட்டிக் [ன்.
கருந்துழாய்முகிலினுறப்பணிந்துகைகுவித்துறச்சூழ்ந்துபோற்றினா

பூசையின்னணமாயிரவருடம்புரியவந்தவிக்கிரகத்தினின்று
மீசைபாலுறமழநடுப்பொருந்தவெம்மையாளுடையிறையவன்றோன்ற
வாசையாலடையானன்னதுகாணுஉவங்கைகூப்புபுவிரைந்தெழுந்தாடி
யோசைமேவுறவரவொலியெழுப்பியுவந்துபன்முறைபணிந்துநின்றன
[னே. (உஉ)

நின்றமான்முகநோக்குபுபெருமானினைத்ததென்னெனமகவிழவாமை[ளு
யொன்றநல்கெனமுறுவல்செய்தொருபாலுமைமுகத்தினைநோக்கமற்றவ
மென்றன்வாய்மொழிபிழைபடாததனுலெரிந்தநின்மகனெய்துவனுயிரை
நன்றனங்களுப்மருவுவன்வருந்தேனளினைநாயகவென்றருள்புரிந்து (உங)

பின்னுமோதுவாளிவ்வுருக்காணப்பெற்றயாவர்க்கும்வழிவழிமகவு, அ
ன்னும்வேண்டுசெல்வங்களும்பெறுவாரொன்றுசொற்றனள்கரும்பிவர்குழ
லாண், மன்னுமிந்தவிக்கிரகத்தினென்றமருவிநீபிரசன்னமாயிருந்து, மின்
னுபோகங்கள்பலவுமெவ்வுயிர்க்கும்விருப்பினல்கெனமீட்டுமாலிரப்ப, ()

இரந்தவாறுபல்வரங்களுமருளியெம்பிரானுமத்திருவுருப்புகுந்தான்
சுரந்தபேரருட்டாயுமொண்சேயுஞ்சொற்றமற்றவருருவத்துட்புக்கார்
பரந்தவோகையனாகியநெடுமால்பரவுமப்பெருமூர்த்திசளோடும் [தான்.
வரந்தவாததன்னிருக்கையுட்புகுந்துமாவொடுங்கலந்தினிதுவாழ்ந்திருந்

வேறு.

மந்தரம்பொருவுதோண்மாலிருக்கையைமருவிச்சோமாக்
கந்தரமுழுதுநோக்கிக்கண்களிப்பூத்துநாமஞ்
சுந்தரவிடங்கனென்றுசொல்லிமுன்னையினும்பூசை
யந்தரமுதற்பன்னாடுமதிசயித்திடப்புரிந்தான். (உசு)

புரியுநாண்மதவேளென்னும்புதல்வனைப்பெற்றானன்னான்
வரிசிலைவல்லோனாகிவாழுநாட்பரமன்மேலோர்
தெரிகணைதொடுத்துநெற்றித்தீயிழிசுடலான்மாய்ந்தவ்
வரியவளருளான்மீட்டுமுய்ந்தெழுந்தனங்கனானான். (உஎ)

கரியுரிபோர்த்தமேனிக்கடவுடனருளையுன்னி
யரிமகிழ்ந்தமருநாளிலவுணருட்சம்பனென்பான்
விரிகடற்சேனைசூழவிண்ணுலகதனைமுற்றித்
திரிபொடுவெம்மினென்றுசினந்தறைகூவினானே. (உஅ)

பொரவழைத்தவன்யாரென்றுபுரந்தரன்றூதிற்றேர்ந்து
கரவுடைச்சம்பனென்பான்கடுகிவந்தனனாலென்று
வரமுடைத்தேவரோடும்வளைந்தமர்பன்னாட்செய்து
முரணிலனவுணன்போருக்குடைந்தனன்வெந்நிட்டானால். (உகூ)

இனியியற்றுவதென்னென்னாவிந்திரன்கரந்துசென்று
பனிபடுகடலினுப்பட்பாப்பணைமீதுதுஞ்சும்
புனிதனையடுத்தானன்னான்புரிந்துணராமைநோக்கிக்
கனிதுயின்மிக்காயென்றுகாவலனிதனைச்செய்தான். (௩0)

தவாமயக்கியற்றிவைகுஞ்சத்திசாம்பவியைவேண்ட
வவாவறுத்தவர்க்குச்சன்மமகன்றெனத்துயில்பிடிக்கைக்
கவானுடைத்திருமணாளற்ககன்றதுகழிதரக்கட்
குவானுடைக்குலிசவேந்தைநோக்குபுகூறலுற்றான். (௩க)

வந்ததையெவனடைந்தவாட்டமெனுரைத்தியென்று
னிந்திரன்பணிந்துசம்பனென்பவனிகத்தோடு
மூந்தவந்தமர்த்தல்செய்தான்முயன்றுபோர்புரிந்துந்தோற்றே
னந்தலினின்பாற்கூறநண்ணினேனென்றுசொற்றான். (௩உ)

புரந்தரன்மொழியுட்கொண்டுபுயல்வண்ணன்கருணைமேன்மேற்
சுரந்துதன்னிதயமேயசுந்தரவிடங்கப்பெம்மான்
வரந்தருசரணமெண்ணிவானசம்புகுந்துவைகற்
கிரந்தனனுடம்பாடோர்ந்துமகபதிக்கிசைக்கலுற்றான். (௩௩)

அருளினென்னிதயமேயவழகியவிடங்கர்தம்மைத்
தெருளுறக்கொடுபோய்நின்பொற்றிருநகர்ப்பதிட்டைசெய்து
மருளறப்பூசைசெய்யின்வாள்வலியவுணன்செய்யும்
வெருளறவெல்லலாகும்விரும்பியவனைத்துமேவும். (௩௪)

இந்தவிக்கிரகமேன்மையியம்பிநெம்மனோர்க்கு
முந்தநீகொடுபோவென்றுகொடுத்தனன்முகுந்தனென்பா
னந்தமிலுவகைபொங்கவடிபணிந்ததனையேற்றுச்
சந்தநல்விமானமேற்றித்தன்னகரடைந்தான்வேந்தன். (௩௫)

பொருவருங்கோயிலொன்றுபுரிந்ததனிடைத்தாபித்துத்
தருவருமலர்முன்னாயயாவையுந்தழுவக்கொண்டு
மருவருமன்புபொங்கமாண்புசால்பூசையாற்றி
வெருவரும்வன்மைபெற்றான்விண்ணுலகொருங்குகாப்பான். (௩௬)

விடாதபூசனைசெய்நாளில்விடங்கர்தங்கருணைபெற்றுத்
தடாதபல்லனிகத்தோடுஞ்சதமகனெதிர்ந்துசென்று
கெடாதவாளவுணர்தம்மைக்கிடைத்துமிக்கடுபோராற்றிப்
படாதபல்படையின்மாய்த்துச்சம்பன்முன்படர்ந்தானன்றே. (௩௭)

அடுதிறற்சம்பன்மெய்யையவன்பெயர்க்கடையீரொன்பான்
படுமொருமெய்யொழித்துப்பத்தாமெய்புணர்த்தவாய
தடுவரும்பொருளால்வீசித்தனையிடைப்படியவீழ்த்தி
வடுவரும்வாகைபூண்டான்மலர்ந்தவாயிரங்கண்ணானே. (௩௮)

இறந்தனன்சம்பனென்பானெஞ்சியவவுணர்யாரும்
பறந்தனரோட்டெடுத்துப்பல்லிடத்தினுங்கரந்தார்
மறந்தலையெடாதுவென்றவானவர்பெருமானீர்தோய்ந்
தறந்தழைவிடங்கர்பூசையாற்றிநன்கிருந்தானன்றே. (௩௯)

வாள்வலிச்சம்பனென்பான்வானகத்தமர்த்தவாறுந்
தோள்வலிமகவான்றாக்கத்துடிதுடித்திறந்தவாறுங்
கோள்வலியவுணர்மற்றோர்குலைகுலைந்தொளித்தவாறு
நாள்வலியிழந்தோனாயநமுசிகேட்டுளங்கொதித்தான். (௪௦)

நாடியதிறலான்முன்னைநமுசியிற்பதின்மடங்கு
கூடியவலியின்மிக்கான்கூற்றிற்குங்கூற்றம்போல்வா
னீடியவவுணர்க்கெல்லாநிறைகளைகண்ணாயுள்ளான்
சூடியதம்பியோடுதுடிதுடித்தெழுந்தானன்றே. (௪௧)

அரியினைநரிவென்றாங்குச்சம்பனையடர்த்தான்வெள்ளைக்
கரியினையுகைப்பான்கொல்லாமெனக்கனன்றதிர்த்துச்செம்பொற்
கிரியினையுகைத்தல்போலக்கிளர்மணித்தேருகைத்துப்
பரியினையாதியெல்லாப்படைகளுஞ்சூழவந்தான். (௪௨)

இன்னணங்கொலைப்பழியிகன்றுடற்றுழி, மன்னவர்மன்னவன்மறு க்கமெய்தினுன், றன்னமுமிதுவெனமுன்றெரிந்திடான், பொன்னவிரமை ச்சரைப்புரிந்துகூவியே. (கூ)

உள்ளதையுரைத்திடவுள்ளத்தோர்ந்தனர், கொள்ளரும்பார்ப்பனக் கொலைவந்துற்றதென், றெள்ளரும்புரவலற்கெடுத்துச்சொற்றனர், விள் ளரும்பரிக்குப்பின்மேவினுர்சிலர். (கo)

வந்தனர்வணங்கினர்வாசிகான்மிதித், தந்தணனிறந்தனனதரினென் றனர், சுந்தரநிலப்பொறைசுமக்குந்தோளினு, னிந்தவல்வினைக்கினியென் செய்கோவென்ருன், (கக)

அஞ்சலையஞ்சலையரசரேறெனு, யெஞ்சலிருனங்களெண்ணிலாதன, துஞ் சலிநீர்த்தங்கடலங்கடொக்கன, பஞ்செனப்பறக்குமிப்பாவமென்றனர். ()

மந்திரருரைத்தசொன்மனங்குறிக்கொடு, செந்திரவியம்வடதிசைபுர ப்பவன், வந்திரப்பவர்முனம்வறியனும்படி, யிந்திரதிருவினுனீந்துபார் த்தனன். (கங)

குலம்படுபசுப்பலகொடுத்துப்பார்த்தன, னலம்படுவிலைநிலநல்கிப் ப்பார்த்தன, னலம்படுதீர்த்தங்களாடிப்பார்த்தனன், புலம்படுதலம்பல போற்றிப்பார்த்தனன். (கச)

ஒன்றினுந்தீர்ந்திலதுறுகொலைப்பழி, கன்றியமனத்தனுய்க்கலங்கிம ன்னவன், றன்திருக்குலகுருவாயசால்புடை, வென்றியின்வசிட்டனை மேவித்தாழ்ந்தனன். (கரு)

முன்னிகழ்வனைத்தையு மொழியத்தேர்ந்தன, னென்னினிச்செய்வ தென்றிரங்கன்மன்னவ, தன்னிகர்நாகையந்தலத்தைமேவுமுன், மின்னினு மறையுமிவ்வெங்கொலைப்பழி. (கசு)

கடுக்கவின்பெறுகளக்கடவுணகைநீ, யடுக்குமுனிப்பழியகலும்போ வென, முடுக்கினன்வசிட்டனுண்முளைக்குமோகைகை, கொடுக்கியவெழு ந்தனன்கொற்றவேந்தர்கோன். (கஎ)

வழியிடைத்தலமெலாம்வணங்கிப்போற்றுபு, பழிதபுவதரிவாழ்தல ம்படர்ந்தனன், விழிகளித்திடவளம்விரும்பிநோக்குபு, பொழிமதுத்தாரி னுன்போற்றிமீண்டனன். (கஅ)

நாகையையுறல்குறிக்கொடுநடப்பவன், மாகைலாயநேர்குடசவா ன்பதி, யாகைகொணருதத்தடைந்தமாத்திரை, யோகையின்ருயழிந் தொழிந்ததப்பழி. (கக)

அதுதெரிந்தனன்மிகவகமகிழ்ந்தனன், முதுபுகழ்க்குடசநன்மூலத்தா ற்றனன், புதுமதிபொலிசடைப்புனிதற்போற்றினன், கதுமெனப்படர்ந் துகாரோணத்தெய்தினன். (உ0)

செறிமலர்விண்ணவதீர்த்தந்தோய்ந்துநீங், கெறிதிருநீறுநன்கியை யப்பூசுபு, குறிகுணங்கடந்தொளிர்குழகன்முன்சென்று, ணறிதுயிலமர்ப வனன்னவண்ணலே. (உக)

கண்களிகூர்தரக்கண்டுதாழ்ந்தனன்,பண்களிகூர்தரத்துதியும்பாடினு,னெ ண்களிகூர்தரவின்பமெய்தினன், மண்களிகூர்தரப்புரக்கும்வள்ளலே. ()

விடங்கர்தந்திருமுனமேவித்தாழ்ந்துளத்,தடங்கரும்பெருமகிழ்வமை யவின்சுதைக், குடங்கரும்வெள்கியகோலப்பூண்முலைத், தடங்கருந்தட ங்கணுள்சரணந்தாழ்ந்தனன். (உங)

மற்றுளதலங்களும்வணங்கிவான்றளிக், குற்றுளவளம்பலவோங்க ப்பண்ணுபு, கற்றுளமாந்தர்கள்கலப்பவள்ளல்பாற், பெற்றுளவிடை யொடும்பெயர்ந்துபோயினன். (உச)

குணமலிபுகழ்முசுகுந்தன்வெம்பழி, யணவியதகன்றமையறியக்கூறினு மணமலரவன்பினும்வந்துபோற்றிய,தணவருமான்மியஞ்சாற்றுவாமரோ

முசுகுந்தன்பிரமகத்திதீர்ந்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ஙரு ஐ திருவிருத்தம்-ககூகக.

## பிரமன்பூசித்தபடலம்.

கள்ளமோவியதவத்தார்கனிந்தருதனடியணங்கி
வள்ளநேர்மலர்மேலான்வயங்குநாகைப்பதிபுகுந்து
வெள்ளமார்சடையானைப்பணிந்தசரிதம்விரித்தியென
வுள்ளமேவுவப்பொடுமச்சூதனுரைப்பானாயினன். (க)

வானவருஞ்சதகோடிவயக்குமொருகைத்திறல்வேந்து
மோனவருந்தவத்தோருமுளரித்தலைவாழ்நான்முகனு
மீனமிலோரிடைக்குழுமியிருந்தாரந்தவிடத்தணைந்தான்
றானவரஞ்சிடவொறுக்குந்தறுகட்டிகிரிப்படைப்பெருமான். (உ)

வந்தமாயோற்கெழுந்துவணங்கியாருமுபசரித்தார்
சந்தநான்முகன்கண்டுஞ்சற்றுமிருக்கைநின்றுமெழான்
கந்தமாமலர்பொருங்கைகுவியான்முகமனுங்கரையான்
விந்தநேர்புயந்தடிப்பமேன்மேலிறுமாப்புற்றிருந்தான். (ங)

இனையான்கொளிறுமாப்பையெண்ணிநெடுமான்முறுவலித்துத்
தனைநோக்குஞ்சிறுமைந்தசித்தந்திரிந்ததன்மையெவன்
புனைமேன்மையெமைக்கண்டும்பொருக்கென்றிருக்கைநின்றுமெழாய்
துனையாவந்தனஞ்செய்யாய்சும்மாவிருந்தாய்சொல்லென்றான். (ச)

என்றான்றன்முகநோக்கியிண்டைமலர்மேலவனகைத்து
நன்றுனின்மகன்கொல்லோநாளீயேசித்தந்திரிந்தாய்
முன்றான்மற்றுனைவணங்குமுறையுநவமேநாட்டிடுவை
யொன்றாநிற்கண்டெழாதுறையிற்றேடமென்னென்றான். (ரு)

உந்திவாயுனைத்தந்தேனொருநீயதனாலென்மைந்தன்
சிந்தியாதமர்தலினாற்சித்தந்திரிந்தாயென்றுரைத்தேன்
புந்தியாயாதுபிழைபுகன்றேனென்றான்றிருநெடுமான்
முந்திரான்முகனங்கைதட்டியீதுமொழிகின்றான். (சா)

எண்ணாதுநீயுரைத்தாயெண்ணிப்பலகாலுனைப்படைத்தே
னண்ணான்மற்றதனாலேயானாய்மைந்தனெனக்கொருநீ
யொண்ணாவற்புதமேலவுனையாண்பணியும்படிசொற்றாய்
கண்ணாமற்றிஃதெங்குக்கற்றாயென்றான்கமலத்தோன். (எ)

மாயோன்வெஞ்சினங்கொண்டுமறந்துமினியிம்மொழிபுகலே
றாயோயென்றான்பல்காற்சொல்வேன்றெரிந்தென்றான்பிரம
னீயோதலெவ்வலியானிகழ்ந்தென்றொருமாயவன்வினவ
வாயோர்விலான்முதனானெனவைக்குமென்றானஞ்சாதே. (அ)

அஞ்சான்சொற்றனசெவியினழற்சலாகைகடுத்தேற
மஞ்சாருந்திருமேனிமாயோனுள்ளமிக்கப்புழுங்கி
யெஞ்சாதமுதல்யானேயில்லைவேறுமுதலென்று
னஞ்சாருங்களத்தண்ணலுண்மைமனத்துணயவாதே. (கூ)

விண்டுநீயுரைத்தமொழிவெறும்பொய்யானேமுதலென்றற்
குண்டுகாண்பல்லுலகுமொருங்குசான்றுசொலுமென்றான்
கண்டுநேர்மொழிக்கலைமான்கலந்தநாவிற்கடவுளரி
மண்டுகோபத்தழலான்மதியில்கொடியோனீயென்றான். (சഠ)

வேறு.

கொடியனென்றுந்திபூத்தகொண்டல்சொற்றிடுதலோடுங்
கடியபூவோனெழுந்துகரியவன்கபோலமேலாற்
படியவோர்கரத்தறைந்தான்பைந்துழாய்ப்படலையானு
முடியமற்றவன்கபோலமுறிதரப்புடைத்தான்கையால். (கக)

மறையவன்றண்டங்கொண்டுசுழற்றினான்மணிபோல்வண்ணத்
திறைவனுந்தண்டங்கொண்டானெதிர்திருவருங்கலாய்த்தார்
முறையலவென்றுவானோர்மொழிதலுங்கொள்ளார்விள்ளா
தறைமறையிடையேதோன்றியறைந்ததுபலருங்கேட்ப. (கஉ)

இருவருங்கலாய்த்தல்வேண்டாவெமக்குமெந்தலைக்குமெட்டா
வொருவருஞ்சுயம்புமூர்த்தியோங்கொளியாயபெம்மான்
மருவருஞ்சிவனேமுன்னோன்மற்றுநீரல்லீரென்ன
வெருவருந்திறத்தாரந்தமொழியையும்விருப்பிற்கொள்ளார். (கங)

ஒருவரையொருவர்சீற்றத்துடனுபுமொத்தாகிற்ப
ரருவரைகுலையவார்ப்பாராசைகளெட்டும்போவர்
பருவரையனையதிண்டோள்கொட்டுவர்பார்முன்யாவு
மருவரைநொடியிற்றூளாம்படியமர்வலிந்துசெய்வார். (கச)

இவர்நிலையின்னதாகவிந்திரன்முதல்வானோருந்
தவர்புகழ்கயிலைநண்ணித்தம்பிரான்சரணந்தாழ்ந்து
கவர்மனப்பிரமன்மாயோன்கலாய்த்தலையெடுத்துக்கூறப்
பவர்படுசரணத்தெம்மான்பவ்ளவாய்முறுவறேற்றி. (கரு)

அனையவர்செருக்குமாற்றியருடுமென்றவரைப்போக்கி
நினையமற்றெவர்க்குமுற்றாநீள்பெருங்கருணையாலே
கனையதெண்டிரைசூழ்மண்மேற்கலாய்த்திடுமிருவர்காணத்
துனையவிண்கடந்ததெய்வச்சோதியாயெழுந்துநின்றான். (கசு)

சோதியையிருவருங்கண்டென்னிதன்றோற்றமென்று
நீதியையுணராராகிநெட்டுயிர்ப்பெறிந்துநின்று
ராதியையுணர்தவத்தோரடைந்திருவோருளுங்கீழ்
மீதியையந்தமாதிகண்டவர்மேலோரென்றார். (கஎ)

அருந்தவரிந்தவார்த்தையறைதலுமயனுமாலுந்
திருந்தமற்றியாமேகண்டுசிவணலாமேன்மையென்று
பொருந்தமிக்குவகைநெஞ்சிற்றனித்தனிநினைவுபூண்டு
வருந்தமுற்புரிபோர்தீர்ந்துமற்றிதுசெய்தாரன்றே. (கஅ)

அடிதெரிந்திடுவலென்றேயரிமுரணேனமாகிப்
படிமுழுதிடந்துசென்றும்பாதலங்கடந்துமப்பா
லொடிவறமுயன்றுசெல்லுமுரனிலான்சிறிதுந்தேரான்
மடிவின்முன்புக்கவாறேவந்துமட்சோர்ந்துவீழ்ந்தான். (ககூ)

* கழுகுருவெடுத்துவேதன்ககனமுற்றுருவிச்சென்றும்
வழுவறவப்பாற்செல்லும்வலியிழந்திளைப்புமேவப்
பழுதின்முன்சென்றவாறேபறந்துவந்திதன்றன்சென்னி
முழுவதுங்கண்டேனென்றோர்பொய்மொழிமொழிந்தானன்றே. (உ0)

பொய்மொழிகிளத்தலோடும்பொலியுமச்சோதிநாப்பண்
மெய்மொழிப்பெருமான்றோன்றிவேதநிற்கொழிகவென்று
னம்மொழியலருளான்கேட்டஞ்சலித்தடியில்வீழ்ந்தென்
வெம்மொழிப்பிழையெண்ணுமலருளுதிமேலோயென்றான். (உக)

இரந்தவர்வறியராகாவெம்பிரான்கருணைகூர்ந்து
வரந்தருநாகையெய்திமயங்கனிமுன்பூசித்த
பரந்தபேரருளிலிக்கம்பராய்த்தொழிற்பெறுகவென்று
விரந்தரமுதல்வன்பெம்மானேயெனநெடியோனோர்ந்தான். (உஉ)

---

* கழுகுருவம் - பிரமனுக்கு அன்னவடிவுமன்றிக் கழுகுருவடிவமு முண்டென்பது.

மலரவன்முன்போனதைவந்துயர்நடுத்தலேசத்
தலர்செறிதீர்த்தத்துள்ளாற்குண்டிகையறலும்பெய்து
பலர்புகழ்விதியினுடிப்பரமனைப்பன்னாளேத்திக்
கலர்கொளற்கரியவேதமுழுவதுங்கைக்கொண்டானால். (உ௩)

திலாயெறிபிரமசீர்விசேடமெப்போதுமேனுங்
கனிபுகழ்மிதுனத்திங்கட்கண்ணபக்கத்திலெட்டாம்
புனையறுதிதியும்வெய்யோன்வாரமான்றலைபுணர்ந்த
வரைவில்புண்ணியநன்னாளுமாவிசேடங்காணூழ்கில். (உ௪)

வேண்டியவேண்டியாங்கேயடியர்க்குவிளைக்குநாகை
யீண்டியமறையோன்பெற்றபேற்றினையெடுத்துச்சொற்றுந்
தூண்டியவிளக்கேமானச்சுடருமத்தலமேசார்ந்து
பாண்டியன்கயநோய்தீர்ந்தபடியினியெடுத்துச்சொல்வாம். (உ௫)

பிரமன்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௬ இ திருவிருத்தம்-௧௩௬௬.

## பாண்டியன்கயநோய்தீர்ந்தபடலம்.

மாதவர்சூதமாமுனிசெம்பொற், பாதமிறைஞ்சிப்பாண்டியன்வந் [ன்.
போதவிறைஞ்சும்பொற்புரையென்ன, மேதகுமன்னனேதுதல்வேட்டா

கண்ணைவிடுத்துக்கற்பகநோக்கு, மெண்ணையிலாதவீர்ம்பொழில்சூழ்ந்து
விண்ணையுரிஞ்சிவேழமெழும்பூம், பண்ணைவளஞ்சால்பாண்டியநாடு. (உ)

அண்ணியமேன்மையத்திருநாட்டிற், றிண்ணியநொச்சிசேர்கருமேகம்
பண்ணியபோர்வைப்பைம்படமாலும், புண்ணியமதுராபுரியெனுமூதூர். ()

அந்நகர்வாழ்வானன்றகுணத்தான், மின்னகுவேலான்மெய்ப்புகழ்பூண்பா
னென்னலர்மோலியுரிஞ்சுபதத்தான், மன்னவன்வீரபாண்டியன்மன்னே.

நாடுபுரக்குநாட்சிலர்வந்து, கூடுவிலங்குக்கொள்ளைமலிந்த
வீடுகொடுக்கும்வேட்டமிலாமே, யாடுகழற்காலாயுணவொன்றோர். (௫-

என்றலும்வாசியேறியியக்கிப், பொன்றலிலாதபொருநர்கள்சூழ [ன்.
வென்றலதோயாவில்லொர்கையேந்திக், கன்றலில்கோமான்காடுபுகுந்தா

கூடுதிறத்திற்கோண்வலையாத்துக், காடுகலைக்கக்கால்கள்விசைத்தே
யோடுபனமாக்களொருங்குபடுக்கச், சாடுதலுற்றான்சராசனங்கோட்டி.

கூர்முகவாளிகோத்துவிடுத்துப், போர்கெழுதோளான்பொற்பவுலாங்கா
லார்தருவாளியத்தனையுள்ளு, மோர்திறல்வாளிதப்பியொதுங்கி. (௮)

மாலறநோற்குமாதவனுய, காலவனென்பான்கைதுணிசெய்யச்
சீலமிலாதான்செய்ததிதென்றம், மேலவன்மிக்குவெஞ்சினங்கொண்டு.()

சொல்லரும்வெங்கயநோய்த்தொடக்குண்டு, செல்லலமுழுந்திச்சிதறுகவெ
மல்லலமைந்தமதிக்குலமன்ன, னல்லலடைந்தவனுயடிவீழ்ந்து. [ன்றான்

பொறியிலியானறியாதுபுரிந்தே, னறிவுடையாய்கமைசெய்தருளாயேற்
பிறிதொருசார்பிலையென்பதுபேசச், செறிகுணமாமுனிசிந்தையிரங்கி.()

நாகையெனப்புகனற்றலமெய்தித், தோகையொர்பம்பரனைத்தொழுதேத்தி
ஞகைகொடுன்னையடுங்கயவெந்நோ, யேகையுறுங்கடிதேகுதியென்றான்.

என்னலுமன்னவனின்னடைமலர்த்தா, ணன்னரிறைஞ்சுபுநாகையடைந்து
பொன்னவிர்வானவபுண்ணியதீர்த்த, முன்னமுவந்துறமூழ்கினனன்றே()

குலமுதனேர்தரக்கொண்டகயத்தின், வலமதனுலறமன்னவர்மன்னன்
புலனமராதிபுராணனையேத்திப், பலனருளம்மைபதங்களுந்தாழ்ந்து. ()

உள்ளதலங்களனைத்துமுவந்து, கள்ளமின்மன்னவன்கைதொழுதேத்தி
நள்ளருந்தன்குலநன்முதல்கண்ட, விள்ளருந்தீர்த்தம்விரைந்துபடிந்தான்.

சோமலிங்கப்பெயர்சூடியநாதன், றூமறைச்செஞ்சரணந்தலைச்சூடி
மாமருவும்பல்வரங்களும்பெற்றுக், கோமகன்றன்னகர்கூடுபுவாழ்ந்தான்.

தென்னவன்வெங்கயநோய்தெறவந்து, தன்னமிலாரருள்சார்ந்ததுரைத்தாம், பன்னரும்வெந்தழல்வந்துபணிந்தே, யின்னலறுத்ததினிச்சொலலுற்றும். (கஎ)

பாண்டியன் கயநோய்தீர்ந்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ருஎ இ திருவிருத்தம் - கசுருரு.

## அக்கினிபூசித்தபடலம்.

கரியமலவேரறுத்துக்கடுங்கூற்றினுயிர்குடித்த
வரியதிருவடிநீழலடையுமுயற்சியர்வணங்கித்
தெரியவழல்பூசித்ததிறமுரைத்தியெனமகிழ்ந்து
பிரியமிகுசூதமுனிபேசுதலுற்றனன்மாதோ. (க)

விதியின்முழுதுலகளிப்பான்மேதக்கபெருங்குணத்தான்
மதிமரபினுற்பவித்தான்பிரதீபனெனுமன்ன
னதிநலத்தினவனொருகோனாத்தியமர்தருநாளிற்
றுதிமிகுத்தவிருமைந்தர்தோன்றினாவன்றவத்தில். (உ)

மூத்தமகன்றேவனெனமொழியுமொருபெயரினன்சீர்
பூத்தவிளையவன்பெயர்சந்தனுவெனயாவரும்புகல்வா
ரோத்தவிவர்வளர்நாளிலிகபோகமதியான்மண்
காத்தபிரதீபனருள்கைக்கொள்வான்றுறவடைந்தான். (ரு)

தந்தைதுறவடைந்ததிறந்தகவுணர்ந்துமூத்தமக
னிந்தையிறேவனுங்கடல்சூழ்நெடுநிலத்தினாசையறுத்
தந்தைதபுதுறவடைந்தானஃதுணர்ந்துமிளமைந்தன்
சிந்தைவிருப்பொழியானாய்ச்சேணிலங்காத்தினிதிருந்தான். (௪)

சந்தனுவெண்பவனீன்றதந்தையனுமதியின்றி
யந்தனுமெண்ணாதவரசாட்சிமேற்கோடலினால்
வந்ததுபன்னிருவருடமழையிலாவற்கடமுட்
டந்ததுவெங்கொடுந்துயரந்தரணியிருதிணையுயிர்க்கும். (௫)

விரவியவந்நாள்விசுவாமித்திரன்செய்யொருமகத்திற்
பரவியவேறூன்கிடையாப்பரிசினான்மதிமயங்கி
யுரவியலும்பொதுவியல்பினாலென்றேயெனக்குறித்துக்
கரவியனாயூன்கவர்ந்துகடுந்தழலோனுணக்கொடுத்தான். (௬)

உண்டுசுவைதெரிதழலோனூனிதுநாயூனதெனக்
கண்டுமழையில்லாதகாரணத்தால்வற்கடமேற்
கொண்டுவருத்திடுந்தனாற்கோசிகன்மற்றிதுபுரிந்தா
னண்டுமிவன்மேற்பிழையின்றனைத்தினுக்குங்காரணமாய்.] (௭)

மழைபொழிவிப்பான்மகவான்மற்றவனாற்றியகொடிய
பிழையிதுவேயெனப்பிணங்கிப்பெயர்ந்தழலோன்காரோணத்
துழையமரோர்வேணுவனத்தொளித்திருந்தான்வெதுப்பேறிக்
கழைசுளிமால்களிறுங்குக்கலந்ததுவாடியதன்றே. (௮)

நீடுதழல்வேணுவனநீங்காமலொளித்திருக்கப்
பாடுபலவுயிருமழற்பாகமறவருந்துதல்கண்
டேடுசெறிமலர்மேயோனிமையவரோடெழுநாவை
நாடுபலவினுந்தேடிக்காரோணநகருற்றான். (௯)

நீடுபெருவேணுவனநேர்வந்துகளிற்றினைக்கண்
டாடுதழலெங்கொளித்ததறியவுரைத்திடுகென்ன
வாடுமஃதீங்கொளித்தானெனத்தழலோன்மனங்கொதித்துக்
கோடுகுறைத்திடக்கவலைகோடியெனவதைச்சபித்து. (௧௦)

வன்னிவளைபிப்பிலத்துவன்னியொளித்தனனாக
முன்னிமலரவனாங்குமுழுத்தழலெங்கெனவெதுப்பந்
துன்னியசாருவைவினவச்சொற்றதுபாவகனழன்று
மன்னியவாக்கிழந்துதுயர்மருவுகெனவதைச்சபித்து. (௧௧)

முன்னரியற்றியதன்பேர்முயங்குதீர்த்தத்தொளித்தா
னன்னவிடத்தினுமணுகியாங்கொருமண்டூகத்தை
நன்னர்வினவிடவதுவுநவின்றதழலோன்சினந்து
பன்னியநாக்கிழந்துதுயர்படுதியெனவதைச்சபித்து. (௧௨)

வெளிவந்துதழன்மலரோன்மென்மலர்த்தாளிணைபணிந்தான்
களிவந்துமற்றவனிகரந்ததெவனெனவின்வத்
தெளிவந்தகோசிகன்முற்செய்ததிறமெடுத்தியம்பி
யளிவந்தமழையின்றியாயதாலிக்கொடுமை. (கங)

அதுமகவான்புரிபிழையென்றறைந்துபாவகனிற்பச்
சதுமுகனுட்பிணக்கொழியச்சமாதானமுறச்செய்து
கதமெனயாவருஞ்சூழக்காரோணத்தளிபுகுந்து
புதுமலர்கடூயாதிபுராணர்பதஞ்சேவித்து. (கச)

கருந்தடங்கணுமையாளையவ்வாறேகண்டிறைஞ்சிப்
பொருந்தமழைபொழிந்துவளம்புடவியுறவரம்பெற்றுத்
திருந்தமலரோன்மகிழ்ந்தானுமலியூன்றின்றலினால்
வருந்தவருபிழையொழியவசுவருச்சித்தருள்பெற்றான். (கரு)

கோடுகுறைப்பினும்வளர்ச்சிகூடுகநீங்கியகோடும்
பாடுபெறுஞ்சிறப்புறுகவெனும்வரம்பல்புகர்முகத்து
நீடுகளிற்றினுக்குதவிநிகழ்சிலவாக்குறுமவற்றை
நாடுவிரும்புகவென்னநற்கிளிக்கோர்வரங்கொடுத்து. (கசா)

தாலமிழந்திருந்தாலுந்தப்பாதேயரமுழக்க
மோலமுறப்புரிகுதியென்றொருவரந்தவளைக்குதவிச்
சாலவிமையோர்மறைந்தார்சதுமுகன்றன்னுலகடைந்தான்
ஞாலம்விரும்புறுமழலோனயர்ந்தமர்தன்னிடம்புகுந்தான். (கஎ)

நக்கினியபெருமான்வாழ்நாகைக்காரோணத்தி
லக்கினிபோய்க்கலந்திருந்தவக்கினிதீர்த்தம்படிவோர்
தொக்கினியவல்லாததுயருறினுமவைதொலைத்து
மிக்கினியபோகங்கள்வேண்டியவாறேபெறுவார். (கஅ)

நன்னாகபுரத்தடைந்துநாவோரேழுடைக்கடவு
டன்னாசமுறப்பணிந்துசார்ந்தபிழைதீர்ந்தகதை
யென்னாகநினைத்தலிஃதறிந்தவகையெடுத்துரைத்தாம்
புன்னாகவனப்பெருமைபோற்றியினிப்பேசிடுவோம். (க௯)

அக்கினிபூசித்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௩அ இ திருவிருத்தம்-ககஎஉ,

## புன்னாகவனப்படலம்.

மனத்தடங்காதவோகைமலிதரக்காமமாதி
சினத்தவொண்சூதமேலோன்சேவடிமுனிவர்போற்றிக்
கனத்திரள்கஞலியாங்குக்காட்சியிற்பொலிபுன்னாக
வனத்திறமுரைத்தியென்னமற்றவன்வகுக்கலுற்றான். (க)

வலிகெழுநாகர்தம்முள்வாசுகியென்னும்பேரா
ளொலிகெழுகடற்காரோணத்தனுற்றியபூசைப்பேற்றாற்
பொலிகெழுபொன்னங்கொம்போபூத்தபொற்கொடியோவென்ன
வலிகெழுவனப்பினோர்நான்மகளிரைப்பெற்றானன்றே. (உ)

மருவுசுப்பிரபையென்றுமாலினியென்றுவொப்புச்
சருவுபதுமினியென்றுசாருமண்டலையென்றுநாற்
பொருவில்புத்திரிகளானார்புனிற்றிளம்பிறையினாளும்
வெருவிலொண்வளர்ச்சிமேவியவ்வனம்விழையவாய்ந்தார். (ந)

புதல்வியர்பருவநோக்கிவாசுகிபொலிகாரோண
முதல்வனின்னருளாலிந்தச்சிறுவியர்முளைப்பப்பெற்றேன்
மதனனுமவாவவந்துமணப்பவர்தம்மைத்தேரு
விதனமொன்றுடையேனென்னுமெய்யுறச்சூழ்ந்திருந்தான். (ச)

ஆயதோர்காலைநாகையண்ணலாரருளினாலா
காயவாக்கொன்றுசெல்வங்கமழ்சவுராட்டிரப்பேர்த்
தேயமாள்வேந்தனும்மம்புண்ணியபுஞ்சன்சீர்த்தி
மேயவக்கோமான்மைந்தர்வேள்புரைநால்வருள்ளார். (ரு)

புண்ணியசீலன்யாரும்புகழ்தருதருமசீலன்
கண்ணியகுணஞ்சானுஞ்சுப்பிரதாபன்காமவேளு
மெண்ணியவனப்புவாய்சத்துருப்பிரதாபனின்னர்
மண்ணியமணியிற்றோன்றிமணப்பதொன்றுரைத்ததன்றே. (சு)

உருவில்வாக்குணர்ந்துமேன்மேலோகையிற்றிளைத்திருந்தான்
பொருவில்வாசுகிமுன்சொற்றபுகழ்ச்சவுராட்டிரத்து
வெருவின்மைந்தர்களுல்வோருமேதகுநாகநாட்டி
னொருவில்பல்வளமுங்காண்பானுற்றனர்பிலமாறக. (எ)

மணிகிளர்நாகநாட்டுமருவியோர்நோக்குங்காலைப்
பணிகிளர்படப்பூணுகைப்பரனருளதனாலோர்வாக்
கணிகிளர்வாசுகிப்பேரரவின்புத்திரிகளுல்வர்
பிணிகிளர்மாலைசூட்டப்பெறுதிரொன்றெழுந்ததன்றே. (அ)

நாந்தகவுழவராயநால்வரும்வாசுகிப்பே
ரோந்தன்முன்மகிழ்ந்துசென்றரியாவர்நீரொனவினவப்
போந்தமைதெரியச்சொற்றார்பொலிவனப்பொருநால்வர்க்குஞ்
சாந்தமென்முலையார்நால்வர்தமைமணம்புணர்த்தினானே. (க)

பொருவருமரசனீன்றபுத்திரரொருநால்வோரும்
வெருவருமரவுதந்தவேற்றடங்கண்ணால்வோரு
மொருவருமுவகைதூங்கவுளகத்திறுகப்புல்லி
மருவரும்போகந்துய்த்தார்கழிந்தனவருடம்பல்ல. (கഠ)

இடையருப்போகந்துய்க்குமீரிருமாதாரு
மிடையுழூழ்வலியாலந்தப்போகத்துவெறுப்புவைத்தார்
நடையுயர்கொழுநர்தம்பானயந்தனுமதியும்பெற்றுப்
புடையமரணையரோடும்பூமியையடைந்தாரன்றே. (கக)

அடைந்தவர்முத்திவேண்டியருந்தவம்புரிவானெண்ணி
மிடைந்தவண்டபோவனத்தைமேவினர்மேவுங்கான்மா
சுடைந்தவத்திரியைக்கண்டாருவந்திறைஞ்சிப்பிறந்தை
தடைந்தமாமுத்திவேட்டோந்தகவருள்புரிதியென்றார். (கஉ)

அருந்தவத்துயர்ந்தோனுயவத்திரிமுனிவனெண்ணிப்
பொருந்தநீர்நாகைக்காயாரோகணதலத்திற்புக்கு
மருந்தமுண்டயன்மாலாதிவானவைவாழ்வித்தானைக்
கருந்தடங்கண்ணளாயகருணையோருருவத்தாயை. (கங)

தேவநீராடிப்போற்றிமற்றுளதலமுஞ்சேவித்
தேவறவடபான்மேவியோங்குபுன்னாகநீழன்
மேவவோரிலிங்கநாட்டிவிதியுளிப்பூசிப்பீரேற்
பாவனாதீதமுத்திபலித்திடும்போமினென்றான். (கச)

முனிவரனுரைத்தவாறேமுழங்குகாரோணமேவிப்
பனிமலர்த்தேவதீர்த்தம்படிந்துகாரோணப்பெம்மான்
புனிதமென்பாதம்போற்றிப்புவனங்களனைத்துமீன்ற
கனிமனக்கருந்தடங்கட்காரணிபதமும்போற்றி. (கரு)

மற்றுளதலங்களெல்லாம்வரன்முறைசென்றுசென்று
கற்றுளமாந்தர்மேன்மைகளாதரக்கேட்டுநைந்து
பற்றுளமுருகப்போற்றிப்பண்ணவர்பரவிப்போற்றற்
குற்றுளவடபாலெய்தியோங்குபுன்னாகங்கண்டார். (கசா)

மரகதந்தளிர்த்துமுத்தம்வரம்பிலவரும்பியாங்கே
பரவுபவளங்கள்பூத்துப்பாயபுன்னாகநீழல்
விரவவோரிலிங்கந்தாபித்தமரரும்விரும்பியாடப்
புரவுசெய்தீர்த்தமொன்றுபொருந்துறத்தென்பாலாக்கி. (கஎ)

அந்தநற்றீர்த்தமாடியந்நலாரொருநால்வோரும்
பந்தமின்முக்கணூற்றேட்பரமனைப்பூசைசெய்ய
நந்தலில்பெருமான்றோன்றிநாடியதென்னையென்றான்
சந்தமென்கொங்கைநல்லார்தாழ்ந்தனர்வேண்டுகின்றார். (கஅ)

உத்தமவெங்கள்பூசையுவந்ததுமெய்மையாகி
லித்திருப்பேரூர்நாகூரொனும்பெயரொய்தல்வேண்டும்
பத்தர்கள்புகழ்நாகேசப்பெயருநீபரித்தல்வேண்டு
மொத்தநின்றாட்கீழ்யாங்கள்கொழுநரோடுறுதல்வேண்டும், (ககூ)

இத்தனைவரமுந்தம்மோவென்றிரப்பவர்க்கஞதி
முத்தனவ்வாறேநல்கிமொழிந்தவவ்விலிங்கத்துற்றுன்
சித்தமுள்ளுருகவந்தவிலிங்கத்தைச்சேவைசெய்வார்
பத்தமுற்றகலமேலாம்பரகதிமருவுவாரால். (௨0)

பொருவருமரும்புமல்குபுன்னாகவனத்தின்மேன்மை
யொருவருஞ்சரிதந்தேறவொருவகையெடுத்துச்சொற்று
மிருவருந்தேருவண்ணவிணையடியேத்திவானோர்
வெருவருந்தன்மைபெற்றவண்ணமும்விளம்புவாமால். (௨௧)

புன்னாகவனப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௬௧ இ திருவிருத்தம் - ௧௧௬௫.

## தேவர்கள்பூசித்தபடலம்.

சூதமுயர்மாதவர்சூதமாமுனி, யுகபதந்தொழுதுகாரோணத்துத்தமர்ன்.
தகவிமையவர்பணிசரிதஞ்சொல்லென, மிகமகிழ்முனிவரன்விளம்புவா

அரியபுண்ணியமுநல்லமாரீட்டமுஞ், சரியவெம்பாவமுந்தருவர்கூட்டமும், விரியமுன்னாளில்விருத்திரப்பெய, ருரியவல்லவுணர்கோனொருவன்றோன்றினன். (௨)

படையொடுமெழுந்துவான்படர்ந்துபண்ணவ, ருடைதரப்போர்புரிந்தொருங்குபற்றியே, தடைசெய்கால்யாப்பிடுதறுகணெண்ணினு, னடைபெருவானவரதுதெரிந்தனர். (௩)

இனிச்செயலென்னையென்றெண்ணியோடுபு, தனித்தபொன்மலரடிதாழ்ந்துகூறலு, மனித்தர்போனகைசீர்மருவிப்போற்றிடி, லனித்தமெய்துவன்விரைந்தவுணனென்றனன். (௪)

குருமொழிதலைமிசைக்கொண்டுவானவ, ரொருவருநாகைக்காரோணம்புக்கனர், திருவருதம்பெயர்த்தீர்த்தமாடினர், கருமணிகண்டனைக்கண்டுபோற்றுவார். (௫)

ஆதிபுராணன்பொன்னடியிறைஞ்சுபு, காதியகருந்தடங்கண்ணிதாடொழு, தேதமில்விடங்கனையேத்திப்பின்னரும், போதவிண்ணவரிதுபுரிதன்மேயினார். (௬)

பொருவருமகமொன்றுபுரிந்துபேருவப், பிருவருக்காலுருவிறைவற்காக்குபு, மருவரும்புண்ணியமகருண்டத்தினை, வெருவருந்தீர்த்தமாக்கினரவ்விண்ணவர். (௭)

நீடுமாமகப்புனலென்னும்பேர்கிறீஇக், கூடுதேனியுருக்கொண்டுசோலையி, லூடுசான்மலர்தொறுமுறுமதுக்கவர்ந், நீடுகூரத்தடத்தியையச்சேர்த்தனர். (௮)

செறிசுவைகொளுமதுத்தீர்த்தமென்றொரு,நெறியமைபெயருறவிறுவிமொண்டுகொண்,டறிவுருவாயவற்கன்பினூட்டினார், பறிபுனைமலர்பலபறித்துச்சூட்டினார். (௯)

இன்னணம்பூசைசெய்திருக்குநாளையிற், கொன்னவிலிந்திரன்குலிசந்தாக்கிட, வுன்னரும்வலிகெடவொழிந்துமாய்ந்தனன், றன்னரும்பெருவிறற்றோள்விருத்திரன். (௧௦)

விருத்திரன்மாண்டதுதெரிந்துவிண்ணவர், பருத்தெழுமோகையம்பரவைமூழ்கின, ரருத்தநம்பரன்விடையமையப்பெற்றனர், திருத்தகுதானமேசேர்ந்துவாழ்ந்தனர். (௧௧)

அத்தடமதுமுகந்தாட்டியண்ணலார், சித்தநன்குவப்புறச்செய்ததுர்க்கைமுன்,வித்தகமகிடன்பால்வெற்றிகொண்டன,ளுத்தமமிகத்தருமுனைத்தவத்தடம். (௧௨)

எண்ணியவானவரியாருநாகையிற், றிண்ணியபூசைசெய்செயலுரைத்தனந், தண்ணியமுனிவிர்காடருமபுஞ்சனுற், றெண்ணியதியிற்கதியுற்றதோதுவாம். (௧௩)

தேவர்கள்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆக படலம் ௪௦ இ திருவிருத்தம் ௨௦௦௬.

## தருமபுஞ்சன்முத்தியடைந்தபடலம்.

தெங்குசூழ்நைமிசத்துச்செறிபவர், பொங்குகாதலிற்சூதனைப்போற்றுபு, தங்குவாய்மைத்தருமபுஞ்சன்கதை, யிங்குநீநவிலென்னநவிலுவான். (௧)

அணிவளங்கிளரங்கநன்னாட்டிடைத், தணிவில்வான்புகழ்ச் சண்டதருமன்பான், மணியிற்றோற்றமுற்றான்மறையாதிகள், கணிதமின்றியுணர்ந்தகருத்தினான். (௨)

தருமபுஞ்சனெனும்பெயர்தாங்கினா, னருமருந்தினமைந்தகுணத்தினான், றிருமகன்பொடியாத்தெறுங்கண்ணினான், கருமமேபுரியுங்கடப்பாட்டினான். (௩)

அனையன்முந்தைப்பவத்தறியாதுசெய், வினையிற்றீமையனைத்தும்விராயெனப், புனையயார்க்கும்பொருத்தமிலாதொரு, தனையற்பெற்றனன்யாருஞ்சவிக்கவே. (௪)

தோற்றமுற்றசுதற்கறமென்பத, னூறுமின்மையினாத்திகனென்னும்பேர், சாற்றலாமெனச்சாற்றினர்யாவரு, மேற்றமேயெனவேற்றுப்பயிலுவான். (௫)

பெற்றதாதைபெருகமுயன்றநூல், பற்றவோதியுமோதுவித்தும்பயிலுற்றதோதருந்தீமைகளேயலாற், கற்றதொன்றிலன்காமரறத்தினை. (௬)

சந்திவந்தனைசற்றுமியற்றிலா, னந்தியெண்ணருந்தீமைநவிற்றுவான்
...யொருமுனியுஞ்சரிதத்தான், புந்திசற்றுமிலாதவப்புல்லனே. (எ)

...ர்ந்தநீற்றறைநினைத்துமறிகிலான், வார்ந்தநல்லொழுக்கென்பது
மற்றினன், கூர்ந்தபாதகங்கூடிமகனெனச், சார்ந்தவோவெனத்தந்தை
வருந்தினன். (அ)

கண்டதேபெருங்காட்சியெனுமனங், கொண்டபுன்மதக்கோட்பட்
...வா, னுண்டவாமடவார்முயக்கொன்றனை, விண்டவாவுதல்வேறி
...னுயினன். (கூ)

மனையகத்துளவண்பொருள்வெளவுபு, நனைமலர்க்குழனரியர்கைக்
...ந், தனையர்நல்கிடும்போகமவாய்க்கொளா, வினைவறப்பயில்வானக
...ங்கனும். (க0)

இல்லமேயபொருள்களிறத்தலும், பல்லவில்லுளும்பாதியிராப்புகுந்
...ல்லவேண்டுவதோவறக்கொள்ளுவா, னல்லசெய்யுமறிவில்கயவனே.

இன்னநாளினியன்மறைமுன்னைநாட், சொன்னவாரியனுவிதொலைதர
வுன்னவாமொருபலமெறிந்தன, னென்னசெய்கையென்றியாருமிரங்குற.

குருவைமாட்டிக்குலவவ்வன்மனை, மருவுவாளைவலிந்துதழுவினன்
வெருவுதீவினையாவும்விளைதரும், பொருவிலாவளப்பூமியுமாயினன்.(கங)

பாவிசெய்கைபயந்தவரேனார்ந்தழு, தேவியிங்குச்சிவணறகாதென
வோவியோடவுடன்றுதுரந்தனன், மேவினன்கொடுவேடுறுகானமே. ()

காடுமேவிக்கல்ங்கியுழிதரும், வாடும்வெய்யபசியின்மயங்குறம்
வீடுமாறுவிரவுமென்றஞ்சுறு, மோடுமீளுநுலறுமலறுமே. (கடு)

ஏங்கிச்சோணனெனுமொருவேட்டுவன்,பாங்குற்றென்பசிபாற்றென்
றழுதன, ஞங்குச்சீரிலவன்சற்றிரங்குபு, தீங்கிற்சேர்மறச்சேரியைக்கா
ட்டினன். (கசு)

அந்தவேட்டுவச்சேரியடைந்திடு, வெந்தவூன்மிசைந்தான்கள்ளுமாந்தினு,
னந்தமற்றவரோடுநட்பாயினன், பந்தமேலுமோர்பந்தமுற்றுலென. (சஎ)

தருமபுஞ்சன்றவாமகவாலசயாற், பெருகவெங்கணுநாடுபுபேதுற்று
வெருவுகானம்விராவில்வேட்டுவர், மருவுசேரியில்வந்துறக்கண்டனன்.

கண்டபோதுகனன்றேரறையறைந், துண்டகண்மயக்காலவற்குள்ளன
வெண்டவாதுப்பித்தனனேங்கியே, யண்டநீமகனென்பதறைந்தனன். ()

சிறிதுணர்ச்சிசெறிந்தனனத்துணை, யறிவுதிப்பவழைத்துடன்கைக்
கொடு, வெறிமலர்ப்பொழின்மேயநகரிடைக், குறிகொடன்மனைக்கூடியி
ருந்தனன். (உ0)

இரவிற்சங்கரன்பூசையியற்றுபு, பரவிப்போற்றியென்பாலன்கொடுமையா, முரவிற்றீர்ந்துய்யுமாறருள்செய்தியா, லரவப்பூணுடையாயெனவேண்டினான். (உக)

ஆணத்தாருக்கருளும்பராபரன், மாணப்பூசைசெய்பூசுரன்வாதனை பேணத்தான்சகிப்பான்கொல்பெரிதவன், காணத்தோன்றிக்கனவிடைக்கூறுவான். (உஉ)

தூயபேரொளிவாய்ந்தசுதன்மையிற், சேயவாதனமேற்செழுநித்தில, மேயவெள்ளைக்கவிகைநிழல்செயப், பாயசாமரைபக்கமிரட்டுற. (உ௩)

ஒருபுறத்திேனாருவனடைப்பைகை, யிருவியொண்முகவாசமியற்றிட மருவியோர்புறத்தேயொருவானவன், பருவமோர்ந்துபடியகமேந்துற. ()

உரியயானையுமுச்சைச்சிரவமுந், தெரியமுன்னர்ச்சிவணுபுமேவுற வரியதேனுநிதிமணியைந்தரு, பிரியமார்பணியேற்றுப்பிறங்கிட. (உ௫)

அரம்பையேமுதலாகியவந்நலார், பரம்பிமுற்பசுங்கொம்பினடித்திட நரம்புவீக்குசருவிநன்றுக்கொடு, நிரம்புகானஞ்சிலர்நிகழ்த்தாநிற்க. ()

நீடிமேன்மைநிரம்புமுப்பத்துமுக், கோடிவானவர்கும்பிட்டெதிர்நிற்ப வாடிவாள்வலித்தானவரோர்புறங், கூடியாவித்துக்காண்டல்குறிக்கொள.

முற்றுமாயவிருதுமுன்னேங்கிடப், பற்றுமாகதர்சூதர்பராவிடக் கற்றுவல்லவராசிகழறிட, வெற்றுவாளிந்திரனிருந்தானரோ. (உ௮)

ஆயகாலையருகமருஞ்சசி, மேயவித்தனைசெல்வமும்வேந்தநிற் கேயதன்மையெனுலென்றனளவன், றீயவெந்தழல்போலச்சினஞ்செயா,

மண்ணகத்துமகளுருவாகென்று, றெண்ணமென்னினியென்றவளுங்கனன், றண்ணனீயுமுன்ஙனமாகென்றாள், விண்ணரியாரும்வெருவிநடுங்கவே. (௩௦)

மருவுசாபமிவ்வண்ணமொருவருக், கொருவரோதியுவரிவ்ளாகத்துத் திருவமேவியசென்னிநன்னாட்டகம், பொருவில்வேதியன்புண்ணியகீர்த்திபால். (௩க)

கறையிலாப்பலகாந்தியெனும்பெய, ரறையுமாறிந்திரன்மகனாகினான் பிறைநுதலயிராணியும்பின்பிறந், திறைவன்றங்கையெனவிருந்தாளரோ.

இந்தவண்ணமிருவருமேவுழி, முந்தமைந்தவறிவுமுளைத்தலாற் பந்தமோவப்படர்ந்தனர்நாகையி, னந்தமைத்தொழுதேத்திநலம்பெற.()

முன்னமைத்தபுனலின்முழுகினான், பின்னர்வந்தபிணைவிழிமாதொடு நன்னயத்தப்பழவுருநண்ணியே, யின்னீரவெனமைத்தொழுதேத்துபு.(௩௪)

வானநாடர்கள்யாரும்வலிதரத், தேனவாவியசெஞ்சொற்சசியொடுந்
தானமேவித்தருக்குற்றுவாழ்ந்தன, னூனமேதுமிலாவன்பினுற்நம. (ருடு)

நீயுமவ்வணமேநின்மகனொடுந், தாயினேரிறவப்பெருநாகைச்சார்ந் [ன்.
தாயுந்தீர்த்தங்களாடிநமைத்தொழி, னேயுந்தீமையென்றோதிமறைந்தன

அல்லகண்டமனைத்துமொழிதரச், சொல்லவோர்ந்துதுளங்கெழுந்தோ
கைசார், நல்லவேதியனுத்திகனொடும்போய்ச், செல்லநீர்க்குந்திருநாகை
சேர்ந்தனன். (ருஎ)

உள்ளதீர்த்தமெலாமுவந்தாடினான், கள்ளந்தீர்த்தருள்காரோணநாதனைப்
புள்ளவாவுமலர்க்குழற்பூரணி, வெள்ளவாரருட்டாயைவிருப்பொடு. ()

போற்றினான்சிலநாளன்பிற்போற்றனு,மேற்றினனருளேய்ந்துபஃறீமையு
மாற்றினான்மகனொடுங்கயிலையி, னாற்றினனசமரிடமின்புற்றான். ()

சாற்றுமேன்மைத்தருமபுஞ்சற்கற, லாற்றுவேணியருளியதோதினும்
பாற்றுதோநரபாகன்புகுந்தன்பிற், போற்றுமான்மியமும்புகல்வாமரோ.

தருமபுஞ்சன் முத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் சக இ திருவிருத்தம்-உOசகு.

## நரபாகன்முத்தியடைந்தபடலம்.

மாதவர்சூதனைவாழ்த்தி, யேதமிலாநரபாகன்
மேதகுசீர்புகலென்ன, வோதல்செய்வானவ்வுறுவன். (க)

ஆரமுன்மாமணியாவுங், காரகில்சந்தொடுவீசு
மீரவியன்றிரையமுனை, தீரமமைந்ததோர்பேரூர். (உ)

தெரிதரினன்னதுமேரு, கிரிபுரைமாளிகைமல்கி
விரிமதில்சூழ்ந்துயர்சோம, புரியெனுநன்னகராமால். (ரு)

அந்நகர்வாழ்திறலண்ண, னன்னயசோமகுலத்தா
னென்னருமேத்தவிருப்பான், பன்னருஞ்சீர்நரபாகன். (சு)

மருவலர்ப்போரின்மலைந்து. பொருவரும்வாகைமெய்ப்பூணத்
திருவளர்நாடுமுன்யாவும், வெருவரன்மேவவிடுத்தான் (ஞ)

இனியெதுசெய்குவலென்று, பனிமதிசூடியநாதன்
றனியமர்தானமிறைஞ்சக், கனிமனமேவியெழுந்தான். (சு)

கங்கையின்மூழ்குபுகாசி, யங்கையின்மான்மழுவானை
நங்கையொர்பாலனயந்தாளோ, டங்கைகுவித்துப்பணிந்தான். (எ)

திருப்பதமாமுழுந்தேகைப், பொருப்பதள்போர்த்தபுராணன்
விருப்பதகத்தின்விளங்கும், பருப்பதமேத்திப்பணிந்து. (அ)

சித்தியைவேண்டியுமேலா, முத்தியைவேண்டியுமொய்த்துப்
பத்திசெய்வார்பரவுங்கா, ளத்தியடைந்துபணிந்து. (௯)

நாவடிதேனினயக்கப், பாவடியார்துதிபல்கும்
பூவடியார்புனற்காஞ்சி, மாவடியானைவழுத்தி. (௧௦)

திருகழுக்கெஞ்சுறவுள்வா, ரருகழுத்தும்பதத்தானை
யிருகழுக்கண்டினிதேத்தா, மொருகழுக்குன்றினைவணங்கி, (௧௧)

‡ வரிப்புலித்தோறணைப்பூசி * அரிப்புலியுண்மகிழண்ண
லெரிப்புலிங்கக்கணினான்பா, திரிப்புலியூர்சென்றுபோற்றி. (௧௨)

நாமலையாமைநயந்து, நாமலைபாடலுமேற்று
நாமலையத்திருநல்கண், ணாமலைபோற்றிவணங்கி. (௧௩)

குழமலைமேனியோர்பாற்றி, கழமலையான்கழன்மைத
வழமலைநீங்கருமாண்பார், பழமலையேத்திப்பணிந்து. (௧௪)

சிதம்பரவாவுசதீர்ந்த. சிதம்பரவாநிற்குநீற்று
சிதம்பரமானந்தஞ்செய்வார், சிதம்பரமேத்தித்திளைத்து. (௧௫)

ஆழிமிதப்பினமைந்து, வாழிபுவிக்கருள்வைத்த
வீழிநிறச்சடைமேலோன், காழிமதித்துவணங்கி. (௧௬)

பெருக்கறருங்கியவேணி, யெருக்குமுனுவணிவானை
மருக்குலமாமலர்நீர்ப்புள், ளிருக்குவேளூரிலிறைஞ்சி. (௧௭)

பெண்காட்டும்மொருபாதித், தண்காட்டும்பிறைமோலிக்
கண்காட்டுநுதலானை, வெண்காட்டிற்புகுந்தேத்தி. (௧௮)

அடலூர்மூன்றுமவிந்து, கெடலூரோவிடுத்தானைப்
படலூர்வாரித்திப்பாங்கர்க், கடலூரேத்திக்கசிந்து. (௧௯)

நிறையான்மாக்களிறைஞ்ச, முறையான்மாப்பலநல்கு
மிறையான்மீமயிலாடு. துறையான்பாதமும்போற்றி. (௨௦)

மாவடுகேர்விழியார்செய், கோவடுமாதவர்சூழ
வாவடுதண்டுறைமேவுந், தேவடுத்திர்பதம்போற்றி. (௨௧)

சடைமருவும்பிறையானைப், புடைமருவம்பிகையோடுங்
கடைமருவாவளம்வாய்ந்த, விடைமருதேத்தியிறைஞ்சி. (௨௨)

---

‡ வரிப்புலி - நிறம்பொருந்தியவோர்சாந்து * அரிப்புலி - அரியைப் புலியெனப் பொருள்கொள்க,

விடந்தைகளத்துயர்மேலான், மடந்தையோர்பாலுடைவள்ளல்
௦ நடந்தைபதத்துநம்மானைக், குடந்தையணைந்துகும்பிட்டு. (௨௩)

ஐயாறுறுகடந்தா, னையாறுய்மனுவுள்ளா
னையாறைந்தறவாமெய், யையாறப்பனையேத்தி. (௨௪)

தேனைக்காவல்செய்வண்டின், வானைக்காவல்செய்வார்சூழ்
கோனைக்காவளமல்கு, மானைக்காவடிபோற்றி. (௨௫)

கராமலைபோதகங்காத்தோன், பராமலைநீர்முடிபம்ப
வராமலையற்புதனொண்டாள், சிராமலைமேவிவணங்கி. (௨௬)

போரூர்முப்புரமாயத், தேரூரும்பெருஞ்செல்வன்
காரூர்மாளிகையோங்கு, மாரூராத்தியிறைஞ்சி. (௨௭)

இகலூர்மூன்றுமுருங்க, மிகலூரோர்கணைதொட்டு
நகலூரோறுநயந்தார், புகலூரெய்துபுபோற்றி. (௨௮)

பங்காடற்பணைகாணப், பொங்காடற்றிறஞ்செய்யுஞ்
சங்காடற்செவியானைச், செங்காடுற்றினிதேத்தி. (௨௯)

இந்தநற்றானங்களாதி, யெந்தநற்றானமும்போற்றுஞ்
சந்தமிக்கான்மனத்துன்பஞ், சிந்தமிக்காயதுகாணான். (௩௦)

தேவாவென்றுதியங்கும், பூவாழ்வான்செவிகேட்ப
வோவாவின்பருணைகை, வாவாவென்றதோர்வாக்கு. (௩௧)

அதுதேர்ந்தோகைதுளும்ப, மதுவார்பூந்தொடைமார்பன்
சதுவேதங்களுமேத்து, முதுநாகைப்பதிசார்ந்தான். (௩௨)

வானோர்வாவிபடிந்து, தேனோர்மாமலர்தூவிக்
கோனோராதிபுராண, மானோர்பாதம்வணங்கி. (௩௩)

எல்லாமீன்றபிராட்டி, யல்லார்கூந்தல்ணங்கு
நல்லார்சேர்பதநண்ணிப், புல்லாவேத்துபுபோற்றி. (௩௪)

சூழ்வான்பன்முறைகோயி, லாழ்வானன்பெனுமாழி
வீழ்வான்முன்னர்விரும்பிப், போழ்வான்றீவினைபோக. (௩௫)

உள்ளதலங்களனைத்துங், கள்ளமிலாதுகலந்து
வெள்ளவிருஞ்சடையானைத், தள்ளருமன்புறத்தாழ்வான். (௩௬)

---

௦ நடந்தை - நடம்தை எனப்பிரித்து நடம்பொருந்தியவெனப் பொருள் கொள்க.

இன்னணமேத்தியிறைஞ்சு, மன்னவனுக்கருண்மாண்பிற்
பொன்னவிராதிபுராணன், றன்னருணல்கினனன்றே. (௩எ)

ஆதிபுராணர்தமருளா, மேதியினுன்னலரிரிய
மோதியிழந்ததுபெற்று, ஜோதியுணர்ந்தவுளத்தான். (௩அ)

முன்னையின்மேம்படுசெல்வ, மென்னைகொலாமெனப்பெற்று
னன்னையொப்பாற்கவையாக்கித், தன்னையொப்பான்மிகவாழ்ந்தான். ()

பண்புமிக்கானரபாக, னண்புமிக்கார்கதைசொற்றும்
விண்புகழ்பாற்கரமேலோ, னெண்படுகாதையிசைப்பாம். (௪0)

நரவாகன்முத்தியடைந்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௪உ இ திருவிருத்தம்-உ0அ௯.

## பாற்கரப்படலம்.

கருமலவேர்தபுகாட்சிமாதவர்
திருமுனிசூதன்பொற்செய்யதாடொழு
தொருவறப்பாற்கரனுற்றதோதெனப்
பெருமுனியவனதுபிறங்கக்கூறுவான். (க)

மறையவர்திருக்குலத்துதித்தமாண்பினன்
பிறைவளர்சடைமுடிப்பிரானடித்துணைப்
பொறையலதயல்சுமவாதபுந்தியான்
கறைதபுபாற்கரப்பெயர்கலந்தவன். (உ)

மனைமகவொடுஞ்செறிவாழ்க்கைவேண்டலன்
கனைகடறந்தநஞ்சுண்டகாரணன்
புனைமலர்த்திருவடிபோற்றிச்சன்மநோய்
வினைதபுவாஞ்சையேமேற்கொண்டுள்ளவன். (௩)

இதங்கரைகுவதலால்வேறியம்பிடா
மதங்கராச்சிரமத்துமரீஇத்தவஞ்செயு
முதங்கனையடுத்தனனுண்மையீதெனக்
கதங்கடிந்துயர்தவங்கருதுபாற்கரன். (௪)

தவம்பொலியுதங்கர்தந்தாள்பணிந்துபல்
பவந்தபுதலங்களுட்பான்மைமிக்கதாய்
நவம்பொலிவடிவமுங்கடந்தம்பர
சிவம்பொலிதலமெதுசெப்புவாயென. (ரு)

எதுகுறித்திதுவினாயினையென்றம்முனி
கதுமெனக்கேட்டலுங்கலந்தசன்மநோ
யதுதபுத்துயர்கதியடைதல்வேட்டனன்
முதுதவத்திறலினாய்மொழிதியென்றனன். (௬)

என்றலுமுறுவலித்திதயத்தெண்ணுபு
நன்றமைமுத்திநீபெறனயப்பையே
லன்றல்செய்கற்பத்துமழிவிலாத்தல
மொன்றதுநாகைக்காரோணமென்பதே. (௭)

அத்தலத்தடைந்துபுண்டரீகனாய்தவ
வுத்தமப்பெருமையாலும்பர்தம்பிரான்
வித்தகமேனியின்மெய்யொடுங்கலந்
தெத்தவத்தருமுருவின்பமெய்தினான். (௮)

இன்னுமத்தலத்திடையிருந்தவம்புரிந்
தன்னுமொண்முத்தியையுற்றுளார்பலர்
துன்னுபன்னோய்களுந்தொலைத்துளார்பலர்
மன்னுபல்வரம்பெறுமாண்புற்றார்பலர். (௯)

ஆயவத்தலத்திடையமரர்தம்பிரான்
மேயவர்க்கெண்மையின்விளைக்கும்பேரருள்
பாயபஃறலங்களும்பரவவெய்துமா
தாயமத்தலங்கணினைப்பிற்சாருமே. (௧௦)

அன்னமாத்தலத்தைநீயடைந்துதெய்வநீர்
முன்னமுள்ளனவெலாமுறையின்மூழ்குபு
சொன்னவானவரெலாந்துவன்றுமெய்ப்பசு
நன்னர்கொள்பாலுமைநாதற்காட்டுபு. (௧௧)

பூசைசெய்தமர்வையேற்புரிந்தமுத்தியோ
டாசையுள்ளனவெலாமடையலாமென
வோசைகொண்மாதவத்துதங்கள்கூறலு
மாசையில்பாற்கரன்வணங்கியோதுவான். (௧௨)

வானவர்யாவரும்வதியுடம்புள
தானதுபசுவெனவையகூறினை
மேனகுமமரரொவ்விதம்பொருந்துவர்
நானறிதிறநவிலெனநவிற்றுவான். (௧௩)

நிலையுயிர்சரவுயிரிரண்டுநீள்புகழ்க்
கலைபுகல்கங்கைமுற்கணக்கிறீர்த்தமு
மலைவில்சேதாமருப்பமைநுனித்தலை
மலைவறவமர்தருமயக்கில்கேள்வியாய். (௧௪)

பாட்டளிமுரனறும்பங்கயத்தனுந்
தோட்டலர்த்திருமகடுதைந்தமார்பனும்
வாட்டமில்குடம்புளாசெருத்தன்மற்றதன்
கோட்டியமர்குவர்குணத்தின்மிக்குளாய், (௧௫)

வரத்துயர்சிவபிரான்மாண்பிற்கேற்பவான்
சிரத்திடையமருவன்செறிந்தயாவையும்
புரத்தல்செயெம்பெருமாட்டிபொங்குமா
தரத்ததனுதனடுவிருப்படண்மையோய். (௧௬)

கொடுவலிச்சூருயிர்குடித்தவேற்பிரான்
படுமதஞ்சியினுனியிற்பம்புவன்
விடுவளிநாசியுண்மேகவாகன
ஞெடுபலதேவருமுறைவரொள்ளியோய். (௧௭)

கந்தலிலாவிருகன்னநாப்பணே
சுந்தரத்தமர்வரச்சுவினிதேவர்கள்
சந்தமார்நயனமோரிரண்டிற்றங்குவா
ரந்தரத்தியங்கிருசுடருமண்ணலே. (௧௮)

வளியெனுங்கடவுள்பன்மருவிவாழ்குவன்
மிளிர்தருதாலுவில்வருணன்மேவுவன்
களிகொளுங்காரமார்கவின்றநெஞ்சிடைத்
தெளிகலைமகளுறுஞ்சிறந்தகேள்வியாய். (௧௯)

மறலியுமியக்கரும்வயங்குகண்டத்தி
னுறல்கெழுகண்டையினுற்றுவாழ்குவர்
தறைபுகழுதயவத்தமனசந்திகட்
கிறையவருதட்டுறவிருப்பரோற்றத்தாய். (௨௦)

வானவர்க்கிறையவன்வயங்குகண்டத்தி
ஞனநல்விமிலிடையருக்கதேவர்க
ளீனமின்மார்பகத்தியங்குசாத்தியர்
மானமார்தரவென்றும்வாழ்வர்மாண்பிஞேய். (௨௧)

ஈரிருகாலினுங்காலிருக்குமேற்
சார்முழந்தாண்மருத்துவர்கடங்குவ
ரோருநாற்காற்குளம்புறநுனித்தலை
யாருவர்நாகர்களறிவின்மிக்குளாய், (௨௨)

நலஞ்செய்கந்தருவரக்குளம்பினுப்பனு
மிலங்கரம்பையர்குளம்பிசைந்தமேற்கணும்
வலம்புனையுருத்திரர்வெரிநும்வாழ்வரா
லலக்தருபிரானடிக்கன்புவைத்தளாய். (௨௩)

சந்துகடோறுமென்வசுக்கடங்குவார்
நந்தலைப்பலகையிற்பிதிரர்நண்ணுவார்
முந்தெழுமாதரும்யோனிமுற்றுவா
ரந்தமில்பிரான்புகழுறையுநாவினாய். (உ௪)

திருமகளயானத்திற்சேர்ந்துவாழ்குவண்
மருவடிவாலிஞ்கேசர்வைகுவர்
பொருவில்வாலுரோமத்திற்பொருந்தும்வெங்கதிர்
வெருவும்வெம்பவத்தொடாறுக்குமேற்காய். (உ௫)

திரையெறிகங்கைகோசலத்திற்சேருவள்
புரைதபுயமுனைகோமயம்பொருந்திடும்
வரைபெருமாதவர்பலரும்வைகுவார்
கரைமயிரனைத்தினுங்கலையுணர்ந்துளாய். (உ௬)

வாரிசூழ்புவிமகள்வயிற்றில்வைகுவண்
மூரிவான்கடலெலாமுலையின்மேவிடு
மோருநல்வயிற்றிடையுற்றுவாழ்தருங்
காருகபத்தியக்கனன்மெய்யன்பினோய். (உ௭)

மோகமாயிதயத்துமுயங்கிவாழ்தரு
மாகவனீயந்தக்கனுக்கினியந்தா
னேகமாமுகத்துறவிருக்குநாடொறும்
[illegible]கவாசையில்வெறுப்பமைத்தபுந்தியாய். (உ௮)

என்புகடோறுநன்கியைந்துவாழ்வன
வன்புறுமகத்தொழிலனைத்துமெய்முழு
தின்புறுப்பனைத்தினுமியைந்துவாழ்குவர்
நன்புலக்கற்புயர்நங்கைமாரெலாம். (உ௯)

இத்தகுமாக்களையியக்கவேண்டிடி
னுத்தமப்பலாசக்கோலொன்றுகைக்கொடு
மெத்தெனமென்மெலவெறிதல்வேண்டுமால்
வித்தகவிரத்தியின்மேன்மைமேயினாய். (௩0)

முனிவருமகலிடமுயன்றுசெய்தகிற்
புனிதயிக்குறநனிபொருத்தியவயிற்
கனிவுறப்புகுத்தியொண்கவின்புல்லாதிய
வினிதுறவூட்டுதலியையுமென்பவே. (௩௧)

தகைதருமாக்களைத்தவாதவாசனைப்
புகையொளிர்சுடர்முதற்பொருத்திப்பூசிப்போர்
பகைதவிர்போகங்கள்பல்லதுய்த்துப்பி
னகைகெழுகயிலையைநண்ணிவாழ்வரால். (௩௨)

புண்ணியவாக்களைப்பூசைசெய்தலோ
டண்ணியபால்கறந்தமலற்காட்டுவார்
கண்ணியவாயுளுங்கற்பகீடுற
வெண்ணியவெண்ணியாங்கெய்திவாழ்வரே. (௩௩)

பால்கறந்தாட்டுமோர்பண்புமிக்கவர்
மால்கழிநாகைவாழ்வரதன்பொன்முடி
மேலுறவாட்டிடின்வினைதரும்பயன்
சாலுறுமுத்திகாண்சாற்றல்வேறெவன். (௩௪)

எனவுரைத்தத்தலமேகென்றேதினான்
மனநெகப்பாற்கரன்வணங்கிக்கைதொழு
தனகமெய்த்திருவினரவாவிச்சூழ்தருங்
கனமதிநாகையைக்கலத்தலெண்ணினான். (௩௫)

வழியமர்தீர்த்தங்களனைத்தும்வாஞ்சையிற்
பழிதபவாழ்குபுபஃறலங்களு
மிழிவறச்சென்றுசென்றேத்திப்போதுவான்
கொழிதலையுணர்ச்சியிற்கூர்த்தபாற்கரன். (௩௬)

† நாகைவெண்டிரைமெறிநரலைசூழ்திரு
நாகையெங்குளதெனநயந்ததன்பெயர்
‡ நாகையஞ்சலித்திடநவிலும் ० வேடக
னாகையிலாயவென்றுள்ளுநன்மனம். (௩௭)

இராப்பகனாகைசாரொண்ணம்பூண்டவன்
பராக்கடியாதவப்பதியையெய்தினான்
குராப்புனைகூந்தலங்கோதைபாலம
ரராப்பணியான்றிருவருள்விராவவே. (௩௮)

நாகையின்வளமெலாநயப்பநோக்கிமிக்
கோகையேமலிதரவுளகணீங்கினான்
பாகைநேரின்மொழிபாகர்முத்திநன்
றாகையேபுரிவதொன்றறத்துணிந்துளான். (௩௯)

வானவதீர்த்தமேயாதிமற்றுள
வானபஃறீர்த்தமுமடைந்தாழ்கினான்
ஞானயோகத்தவருளநயந்தமர்
பானலங்கண்டர்முன்பரவிச்சென்றனன். (௪௦)

---

† நாகு-சங்கு, ‡ நாகையஞ்சலித்திடநவிலும்-கையஞ்சலித்திட, நா நவிலும் எனஎதிர் நிரனிறையாகக்கொள்க. ० வேடகனு-வேள்தகனுவெனப்பிரித்துப் பொருள்கொள்க.

அளவையாலளப்பருமரியசோதியைக்
களவைநீங்கினருளங்கதிக்குநீதியைத்
தளவமோர்முறுவலாடயங்கும்பாதியை
யுளவையானனம்பெறுமொன்றைக்கண்ணுற்றான். (சுக)

காண்டலுமன்புமீக்கிளைப்பக்காரிருண்
மாண்டதேயெனவிழிவாரிசோர்தரத்
தாண்டவம்புரிபதந்தழுவிப்பன்முறை
பூண்டனன்வணங்குதல்பொருமிநின்றனன். (சுஉ)

எத்தனைதரந்தொழுமிருகைகூப்பிச்சூழ்ந்
தெத்தனைதரம்வருமிருகணீருக
வெத்தனைதரந்துதித்திடுங்கைகொட்டிநின்
றெத்தனைதரநடமியற்றுமென்சொல்கோ. (சுங)

காணரும்பரமனைக்கண்டுளேனெனும்
பூணருந்திருவருள்பூண்டுளேனெனும்
வீணரும்பழிபவம்வீட்டினேனெனு
நாணரும்பெருங்கதிநண்ணினேனெனும். (சுச)

இன்னணந்துதித்திரங்கிணையில்பாற்கரன்
முன்னமம்முனிவரன்மொழிகடைப்பிடித்
துன்னரும்பலபசுவொருங்குபூசித்து
நன்னலப்பால்கறந்தாட்டனாடினான். (சுரு)

ஒள்ளியகருணைக்காரோணநாதர்மேல்
வள்ளியபாற்கடல்வாரிமேகமே
நள்ளியபொழிந்தெனநாடுபாற்குட
மெள்ளியதிறனறவெடுத்தங்காட்டுவான். (சுசு)

வழிதரவழிதரமடையுடைக்குமன்
பொழிதரவிலாவகையூற்றுமிக்கெழக்
கழிதரவினையெலாங்கனிவினாட்டினான்
மொழிதரநிறைந்தபாற்குடங்கண்முற்றுமே. (சுஎ)

இந்தவண்ணம்பிறதலத்துமெய்தியன்
புந்தநன்காட்டினானெழுகுதேங்குழற்
கந்தரக்கருந்தடங்கண்ணினாளையுஞ்
சுந்தரத்தாட்டினான்றூயபால்கொடு. (சுஅ)

பணியிதுபுரிவதுபார்த்துநாகைவா
ழணியரவோன்மகிழ்ந்தருளளித்திடப்
பிணிகெழுபவத்துயர்பெயர்த்துநூலெலாந்
துணிபரமுத்தியேதுணைந்துற்றின்புற்றான். (சுகூ)

பத்தியின்மிகப்பொலிபாற்கரன்பெரு
முத்தியுற்றதுதெரிதரமொழிந்தன
மத்திசெய்போர்வையானருளின்மித்திரன்
சித்தியுற்றதுமினித்தெரியக்கூறுவாம். (௰)

பாற்கரப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௩ இ திருவிருத்தம் - உ௧௩௯.

## மித்திரப்படலம்.

ஆயமுனிவரர்சூதமுனிவன்றுணைப்பதங்கைதொழுது
மேயமறைக்குலமித்திரன்காதைவிளம்பியருளுகென
வாயபுராணமொருபதினெட்டுமெரிறபுமாறுணர்ந்து
நேயமுறவடுத்தார்க்கருளந்தநெடுந்தவனோதுவனால். (௧)

நீடுவளங்கொள்சவ்வீரநன்னாட்டுநிலாவுமறைக்குலத்தான்
கூடுபுகழினமைந்துயர்கற்படகோத்திரத்துற்பவித்தான்
பாடுபல்லோர்களுமித்திரனென்றுபகருமோர்நாமமுளா
னாடுதிருவடிக்கன்புடையான்சொலருந்தவத்தாசையுளான். (௨)

குலவுமொழுக்கமிகப்பெற்றுயர்கற்ககோத்திரத்துற்பவித்து
நிலவுபதுமவல்லிப்பெயர்மாதைநிரம்பவதுவைசெயாக்
கலவுமகிழ்ச்சியின்மேயவிரதியுங்காமனுமாவனொன்றே
சொலவுவப்பிற்பலபோகமுந்துய்த்துத்துளக்கறவாழ்தருநாள். (௩)

அருந்தவஞ்செய்வதற்கெண்ணிப்பிதாவினனுஞைகிடைத்தெழுந்து
பொருந்தவளங்கொடபோவனமேவிப்புகழ்மிகுநாரதன்று
டிருந்தவணங்கியெழுந்தருமாதவஞ்செய்தற்கிடஞ்சொலென
வருந்தலில்கண்டகமாநதிதீரமருவெனப்போக்கினனே. (௪)

கண்டகமாநதித்தீரமருவிக்கரிசறுசாலையமைத்
தெண்டகயாவையுமித்திரன்மேவியிருந்துபொறியடக்கித்
துண்டகலாமதிசூடிபொற்பாதத்துணைமனத்துட்பொலிய
வண்டகடாகம்வியப்பவருந்தவமாற்றியமர்தருநாள். (௫)

ஈன்றவன்மைந்தனைக்காணல்விரும்பியிருக்குநகரமொரீஇத்
தோன்றநதியும்பதியும்வரையுஞ்சுரமுங்கடந்துவினு
யான்றமெலிவினருந்தவச்சாலையவனெதிர்காண்டருமா
மான்றவிராநடுப்போதிலணைந்தனன்மைந்தனதுதெரியான். (௬)

துட்டமிருகமணைந்ததென்றெண்ணித்துணுக்கென்றெழுந்திருந்தே [ன்
பட்டநெடுங்கதைகைக்கொண்டொளிந்தொருபாற் சென்றுறப்புடைத்தா
கட்டமடைந்துயிர்விட்டனன்வேதியன்கண்டுமிகக்கலங்கிக்
கெட்டமனத்தினென்செய்தனனென்றுநிலேசித்தலறிடுவான். (௭)

எந்தையிறந்துளையென்செய்வல்யானென்றிரங்கியழுதிடுங்கா
லந்தையில்சுற்றுளமாதவர்கூடியடுத்ததகந்தெளிந்து
முந்தைவினையிதுமேற்செயுங்கன்மமுடித்தியப்பாவெனலுஞ்
சிந்தைவெருவியமித்திரன்றந்தைக்குச்செய்வனசெய்தொழித்தான். (அ)

கேடிலபரக்கிரியை * புரிந்துங்கிலேசித்தமர்தருநாள்
வாடில்பிரமக்கொலைப்பழிவந்துவளைப்பமதிமயங்கிக்
கூடினின்பாமென்றவாவிமிலேச்சர்குலப்பெணுடன்கலந்து
நாடிலிஃதொக்குமின்பமென்னென்றுநயந்துகுலாவினனால். (௯)

இன்னபுரிந்துழனுளிலறிந்தவரியாருமிழித்திடலாற்
சொன்னகிருட்டிணமாநதித்தீரந்தனைந்துபுகுந்தாங்கு
முன்னமமர்ந்துதவம்புரியுந்திறன்முற்கலனைப்பணியாப்
பின்னமிறன்பழியாவுமெடுத்துறப்பேசினன்மித்திரனே. (௰)

முற்கலன்மித்திரனோதியவார்த்தைமுழுவதுங்கேட்டருளிப்
பொற்கலனென்பணியாக்கிமகிழ்ந்தமர்புண்ணியகாரோணத்
திற்கலனீர்கண்ணிறைத்திடமேவியிறைஞ்சிவணங்குவையேற்
† புற்கலனாகியநீயுய்யுமாறுபுரிந்தருள்செய்திடுமால். (௧௧)

என்றுநவின்றுவிடுத்திடமீட்டுமிறைஞ்சுபுகாரோணஞ்
சென்றுசுதையெழுதீர்த்தமுழுகித்திருந்தவெண்ணீறணிந்து
கன்றுபொலிகைக்கருந்தடங்கண்ணிகலந்தருள்காரோணன்
றன்றுணைப்பாதமிறைஞ்சிமுனின்றுதகவிற்றுதித்திடுவான். (௧௨)

நாரணனாதியர்காணரியாய்தொண்டுநண்ணுமவர்க்கெளியா
யாரணமாகமமியாவுமியம்பியனைத்துயிரும்புரப்பாய்
காரணமூவகைக்காலமுன்யாவுங்கடந்தசிதானந்த
பூரணநின்னையடுத்தனனென்னைப்புரந்தருள்வாயெனலும். (௧௩)

வள்ளல்விரைந்துவெளிப்படவந்துமரீஇயநின்பாதசமா
மள்ளலனைத்துங்கழீஇயினமுத்தியளித்தனமென்றருளா
வுள்ளலினீயெவனென்றுவணங்கியுவப்புறுமித்திரனு
மெள்ளலிலர்த்தன்னிடம்புக்குவாழ்ந்துபின்னெய்தினன்முத்தியுமே. (௧௪)

பத்திரன்முந்துவெளிப்படுசெங்கட்பராபரன்மாயவனோ
ரத்திரன்கேத்திராசவரத்தையடைந்துபணிந்தெழுநன்
மித்திரனுற்றதுரைத்தனம்வல்லவிசித்திரமெய்யுறையான்
† நத்திரன்மேவவடைந்துபணிந்தநலந்தெரியப்புகல்வாம். (௧௫)

மித்திரப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௩௪ இ திருவிருத்தம் - ௨௧௫௧.

---

* அபரக்கிரியை - உத்தரக்கிரியை. † புற்கலன் - ஆன்மா. † நத்திரன் - ந - திரன் எனப்பிரித்து, சிறப்புப்பொருந்திய நிலைமையன் எனப் பொருள்கொள்க.

# விசித்திரகவசப்படலம்.

உடல்வலிமலமாசற்றார்சூதனையுவந்துபோற்றிக்
கடல்பணிந்தேத்துநாகைக்காரோணத்தலத்தின்மேவி
மிடல்கெழுகழற்காற்சோழன்விசித்திரகவசன்பூசித்
திடறெரிதரச்சொலென்னவியம்புமச்சூதமேலோன். (௧)

இருள்வலிசவட்டும்வெய்யோனிருங்குலத்துதித்தமேலோன்
றெருள்படுகலைகளெல்லாமயக்கறத்தேர்ந்தசெல்வன்
பொருள்பரசிவனேயல்லாலிலையெனும்புந்தியாளன்
வெருள்கடிந்தொளிரும்வேலான்விசித்திரகவசனென்பான். (௨)

ஒன்னலரடங்கவென்றுபார்முழுதொருகோலோச்சி
நன்னகரைந்துளொன்றாங்கோழிமாநகரமேவிப்
பன்னருமதியமைச்சர்புரோகிதர்பலருஞ்சூழத்
தன்னரசாட்சிசெய்வான்றவாப்பெரும்புகழின்மிக்கான். (௩)

அரசுசெய்தமருநாளிலண்ணலாரருளினாலும்
விரசுபஃறலங்கட்குள்ளமான்மியம்வினாவல்செய்யப்
பரசுபல்புலமையாளர்தனித்தனிபகரக்கேட்டு
முரசுகண்படாதொலிக்குமுன்றிலானுவகைபூப்பான். (௪)

இந்தநன்னாளோர்நாளிந்திரனாதியோருஞ்
சந்தமென்மலரிட்டேத்துங்காரோணத்தலச்சீர்கேட்டுப்
பந்தமுற்றொழித்துவீடுபாலிக்குமனையதானத்
தந்தமில்பெருமைதேர்ந்துதரிசிக்குமார்வம்பூண்டான். (௫)

சுற்றமும்பிறவுஞ்சூழத்துன்னலர்க்கரியேறன்ன
கொற்றவனுறையூர்நீங்கியெதிர்ப்படுதலங்கும்பிட்டுக்
கற்றவர்புகழுநாகைக்காயாரோகணத்துட்புக்கு
நற்றவம்பயக்குந்தெய்வதீர்த்தத்தினயர்துமூழ்கி. (௬)

நீறுகண்மணிபுனைந்துநிலவுகைகூப்பிச்சென்று
பேறுசெய்கோயின்முன்னர்ப்பிறங்குமட்டாங்கமாக
வாறுகொளங்கமாகவைந்தெனுமங்கமாகத்
தேறுபஃறரங்கும்பிட்டுத்திருந்தவுள்புக்கானன்றே, (௭)

புக்கவன்றிருக்காரோணப்புண்ணியவிலிங்கங்கண்டு
நெக்கசிந்தையனாய்க்கண்ணீர்நிலங்களைத்தோடநின்றான்
பக்கநின்றாருமந்தப்படிமனங்கரையநின்றார்
தக்கவக்காலைவிண்ணோர்சதமகன்போற்றவந்தான். (௮)

வந்தவனுருவமாறிவாயிலுட்புகுதலோடுஞ்
சுந்தரவளவன்காவற்சுற்றத்தாரிறைவன்போற்றி
முந்தவங்கமர்தலாணிபுகுவதுமுறையன்றென்றா
ரந்தவெம்மொழிகேட்டுள்ளமஞ்சினான்போலகன்று. (௯)

அத்தலக்குணபாலெய்தியமையவோரிலிங்கந்தாபித்
துத்தமம்பொலியுந்தீர்த்தமொன்றுகண்டாடிப்போற்றிச்
சித்தமிக்குருகியன்பிற்செங்கரங்குவிசெய்தேத்தப்
புத்தமுதனையாள்பாகப்புண்ணியன்காட்சிநல்கி. (௧௦)

வேண்டுவதென்னையென்றுவினவலும்விருப்பினென்னை
யாண்டவிவ்விலிங்கந்தீர்த்தமமையுமென்னாமத்தொன்றாய்
மாண்டசக்கரப்பேர்பூண்டுவயங்குதல்வேண்டுமென்றிற்
றாண்டவம்புரிவோய்சோமவாரத்திற்சார்ந்துமூழ்கி. (௧௧)

கண்டவெண்ணமெல்லாங்கரிசறவ்வடையவேண்டுந்
தொண்டனேனாங்குநின்னைத்தொழவவாய்ப்புக்ககாலை
மண்டலம்புரப்பானுமோர்மனிதனாற்றகைக்கப்போந்தேன்
கொண்டவக்குறைதீர்சேவைகொடுக்கவும்வேண்டுமென்றான். (௧௨)

எமைத்தொழப்புரிவார்தம்முளிமையவர்மனிதரென்ன
வமைத்ததோர்பேதமில்லையன்பினெவரோவன்னார்
தமைக்களிப்புறுத்தலேயித்தலத்தியலென்றுசாற்றிக்
கமைத்தநீவருதியென்றுகரந்தனன்கருணைமூர்த்தி. (௧௩)

வளவன்முன்றோன்றிநம்மைத்தொழுதற்குமகவான்வந்தான்
களவினின்காவலாளன்றகைந்திடக்கழிந்துபோயோர்
பளகறுமிலிங்கந்தாபித்தருச்சனைபண்ணிநின்றா
னிளகவற்கருளிச்செய்வானெய்துவமின்னேயென்றான். (௧௪)

அதிசயமாயதென்றாங்கண்ணியனாங்குச்சென்று
துதிமகபதிபூசித்தசுந்தரவிலிங்கங்காணக்
கொதிகெழுகுலிசவேலான்கூடிற்றாலமையமென்று
துதிசெய்காரோணலிங்கஞ்சேவித்துமகிழ்ந்துபோனான். (௧௫)

சக்கரதீர்த்தமூழ்கித்தயங்குவெண்ணீறுபூசிச்
சக்கரவிலிங்கங்கண்டுதாழ்ந்துபன்முறைசெந்நாவஞ்
சக்கரநவிலச்சூழ்ந்துதவாதவன்போங்குமாவஞ்
சக்கரவொழிந்தசோழன்றாழ்ந்துபேரின்பமுற்றான். (௧௬)

பாகசாதனற்குச்சேவைபாலித்தவுள்ளங்கொண்டு
நாகமாநகர்க்காரோணநாயனார்புரிந்தவாடல்
+ தோகமேவாமலோங்கச்சோழர்தம்பெருமானுன்னி
மோகநீங்கானுயந்தமுழுத்தலத்தமர்ந்தான்பன்னாள். (௧௭)

குலமணிபதித்தசெம்பொற்கோபுரம்பிரகாரங்க
ணலமலிவிமானமன்றநங்கருந்தடங்கட்செல்வி
நிலவுறுகோயின்மற்றியாவையுநிரம்பச்செய்து
புலனமைதிருவிழாவும்பொற்புறநடத்தினானால். (௧௮)

---

+ தோகம் - சிறுமை.

இன்னணம்வளவர்கோமானிலங்குகாரோணநாதன்
பன்னரும்பணிகள்செய்துபற்பலநாளமர்ந்துபோற்றித்
தன்னமிலருளும்பெற்றுத்தன்னகரடைந்துவாழ்ந்து
பின்னர்மற்றவன்றுணிழல்பெற்றின்பந்துய்த்தானன்றே. (கக)

மேதகுகுணத்தான்மிக்கவிசித்திரகவசனென்பான்
மாதர்வண்காரோணத்துவந்துபூசித்ததன்மை
போதரவெடுத்துச்சொற்றும்பொலிவிடூரதப்பேர்மன்னன்
றீதமைசாபந்தீர்ந்தசெய்தியும்புகல்வாமன்றே. (உ0)

விசித்திரகவசப்படலம் முற்றிற்று.

ஆ. படலம் சுடு இ திருவிருத்தம்-உகளக.

## விடூரதன்சாபந்தீர்ந்தபடலம்.

பஞ்சமலக்கொத்தறுத்துப்பாருதபரபோகம்
வஞ்சமறத்திளைத்துவக்குமாதவர்சூதனைவணங்கி
நஞ்சமுதுகொண்டபிரானுறைகாரோணத்துத்
தஞ்சவிடூரதனடைந்ததோதுகெனவவன்சாற்றும். (க)

ஆன்றபலவளமலியுமானர்த்ததேசத்தான்
சான்றமதிக்குலத்துதித்தான்றண்ணியவெண்கவிகையினான்
மூன்றவுலகெங்குநிமிர்தோலாதவாணையினு
னேன்றபெரும்படைக்கடலானிலைசக்கும்விடூரதனென்பான். (உ)

வேட்டவினைகுறித்தெழுந்துவேடுவர்கள்சூழ்வரப்போய்க்
காட்டகத்தினுட்புகுந்துகையமர்கார்முகங்குனித்து
வாட்டமறக்கன்றினுக்குப்பாலூட்டுமான்பிணைமேற்
கோட்டமனத்தொடுவிடுத்தான்கோலொன்றுகொற்றவனே. (ந)

விட்டகணையுடலுளைப்பமெய்நடுங்கிவிழுமரிணங்
குட்டமெனுங்கொடும்பிணியைக்கொற்றவநீயடையென்ற
தொட்டலஃதுணரரசன்வேட்டவினையுரிமையுளே
னிட்டமறச்சபித்ததெவனென்னமான்பிணவியம்பும். (ச)

நீதிநூன்முழுதுணர்ந்தவிருபரானவர்வனத்து
மோதியூறிழைத்தலைக்குமுரண்விலங்குகடிவதலா
லேதியாற்பிறிதொன்றுற்பிணவுகளையிடர்செய்யா
ராதிநாயகனுரைத்தவறமன்றுலெனவ:சே. (ரு)

கன்றுபசிதபச்சுரந்தபாலூட்டுங்காலத்து
மொன்றுமகிழ்ச்சியிற்புணருங்காலத்துமொள்ளியநீர்
நன்றுநசையறக்குடிக்குங்காலத்துநண்ணியபீள்
பொன்றுதலிலாதினிதுபொறையுயிர்க்குங்காலத்தும். (சு)

உறங்குமொருகாலத்துமுற்றவலியமையாது
பிறங்குமழப்பருவத்திற்பெயராதகாலத்துங்
கறங்குமனமுடையாருங்கடிந்தொழிக்குந்திறங்குறியார்
மறங்குலவிமேலோங்குவகையுணர்ந்தேவ்விலங்கினையும். (எ)

முறையுணராவேடுவரின்முயன்றென்மேற்கணைதொடுத்தா
யிறைவவதனூற்சபித்தேனென்றுமாண்டதுநவ்வி
நிறைதருபல்லுயிர்மொழியுநிரம்பவுணர்தருமரசன்
குறைவிலதன்றுயரமெலாங்குறித்துணர்த்துகவலுற்றான். (அ)

மிக்கதுயருறுமரசன்மெய்முழுதுமப்பொழுதே
தக்கதிதுவன்றென்னும்வெண்குட்டஞ்சார்ந்தன்று
தொக்ககுலமுதல்போலத்தோன்றினேன்யானென்று
பக்கவுளத்தினன்சோர்ந்துபதறிநிலமிசைவீழ்ந்தான். (௯)

வீழ்ந்தவனையமைச்சர்புரோகிதரொடுத்துமெய்துடைத்துப்
போழ்ந்தகவலையனுகச்சின்மொழிகள்புகன்றிடலும்
வாழ்ந்தநகரினையடைந்துமாதேவனருட்கடலி
லாழ்ந்தகுரவன்சதானந்தனடியிணைதொழுது. (௧0)

எந்தையிதற்கொருகழுவாயியம்புதியாலெனவேண்ட
நிந்தையிலம்முனிவரனுநெடுநேரமுளத்தெண்ணிச்
சிந்தைமகிழ்திருநாகைக்காரோணஞ்சேர்ந்திறைஞ்சின்
முந்தைவினையொடுபிணியுமுருங்குமாலெனமொழிந்தான். (௧௧)

முனிவனுரைதலைக்கொண்டுமொய்த்தபேருவகையனுய்ப்
புனிதமிகுதுணைவரொடுங்காரோணத்தலம்புகுந்து
பனிபடுவானவதீர்த்தம்படிந்தனனப்போதத்தே
யினியதலாவெண்குட்டமிரிந்ததுபண்டுருப்பெற்றான். (௧௨)

பண்டையுருப்பொலிவெய்தும்பார்த்திவன்மிக்குளமகிழ்ந்து
தொண்டைவிடாதவர்பூசுஞ்சுந்தரவெண்ணீறணிந்தே
யிண்டைமலரவனொடுமாலின்னுநேடியுங்காணுக்
கண்டைவிடைக்காரோணக்கண்ணுதலோன்முன்சென்றான். (௧௩)

காரோணப்பெருமானைக்கண்டிறைஞ்சியருள்பெற்றுப்
பாரோதுங்கருந்தடங்கட்பராபரைபாதமும்போற்றி
நீரோதப்புவிவியப்பநெடும்பணிபன்னுட்புரிந்து
சீரோவாத்தன்றேயஞ்சென்றுவாழ்ந்தினிதிருந்தான். (௧௪)

ஆயவிரேதனென்னுமரசுநாகையிற்புகுந்து
மேயவுடற்பிணிதவிர்ந்தவிதந்தெரியவெடுத்துரைத்தாம்
பாயபுகழ்ச்சயதுங்கன்பரவுபுகைபெற்றவருட்
டேயகதைவிளங்கும்வகையினியெடுத்துச்சொல்லுவாம். (௧௫)

விரேதன்சாபந்தீர்ந்தபடலம் முற்றிற்று.

ஆ படலம் ௪௬ இ திருவிருத்தம்-உ௧௮௬,

## சயதுங்கப்படலம்

கருமவேரைக்களைந்திடுநைமிசத்
தருமம்வாழ்பவர்சூதனைப்போற்றுபு
தருமமோருஞ்சயதுங்கன்காதையைப்
பெருமவோதெனவன்னவன்பேசுவான். (௧)

ஏட்டைதீர்ந்தகலிங்கமெனும்பெயர்
நாட்டையாளுநராதிபனெஞ்சகத்
தோட்டையோவுசயதுங்கனுற்றுமா
வேட்டையாடினன்கானம்விராவியே. (௨)

புலிமடங்கல்புகர்முகமாதிய
வலிவிலங்கறக்கைச்சிலைவாங்குபு
மெலிவில்பல்கணைதூண்டிவெயின்முதிர்
பொலிவின்வெம்பசிபூண்டுவருந்தினன். (௩)

வினையகன்றுவயிற்றெழுவெம்பசி
யினையொழித்தற்கிகற்பரிதூண்டுபு
அனையவந்தெதிர்தோன்றிடுஞ்சூழலொன்
றனைநிகர்க்குமரீசியமரிடம். (௪)

பெருவளத்துப்பிறங்குதல்கண்டத
னொருபுறத்துப்படையொடுமுற்றனன்
மருவுமற்றதன்வண்மைமெலாந்தெரி
தரும்விருப்பினனெங்குஞ்சரித்தனன். (௫)

நல்லவாயநரந்தமோர்பாலெலாஞ்
சொல்லவாயவொண்சூதமோர்பாலெலாம்
பல்லவாயபனசமோர்பாலெலாஞ்
செல்லவாமுடித்தென்னையோர்பாலெல்லாம். (௬)

தலைவிரிந்தவரம்பையொர்சாரெலாந்
தொலைவிலாதகர்ச்சூரமொர்சாரெலா
நிலைகொண்மாதுளைநீர்மையோர்சாரெலாம்
விலைசெயாவெலுமிச்சையோர்சாரெலாம். (௭)

நறியதீஞ்சுவைநாவலோர்கண்ணெலாஞ்
செறியவாமுந்திரிகையோர்கண்ணெலாம்
வெறியவாவுவிளவொருகண்ணெலா
மறுவிலாத்தமரம்மொருகண்ணெலாம். (௮)

இவைமுன்னாயவிருங்கனிமல்கிய
நவையிலாவளங்கண்டுநரபதி
யுவைநமக்குணவாகுமென்றுன்னியே
செவ்வையிலாக்கொடுஞ்செய்கைசெய்தானரோ. (௯)

உள்ளயாவுமொருங்குகவருபு
தள்ளலாவகைதாஞுண்டதன்றியும்
விள்ளலாத்தன்றமரும்விழைந்துறக்
கொள்ளநல்கினன்றீவினைக்கோட்பட்டான். (௧0)

மாதவத்துமரீசிமுனிவரன்
போதலர்ந்ததண்பூம்புனலாடுபு
வேதநான்கும்விளம்புமருட்குறி
மேதகும்பெரும்பூசைவிரும்பினான். (௧௧)

பூசைசெய்யப்புகுந்தவக்காலையின்
மாசைநீங்கியவண்கனியாவுமாங்
காசையோடமைத்திடக்கண்டிலா
ஞேசைமாமுனியேவலுஞற்றுவார், (௧௨)

தம்மைநோக்கியென்றந்திலிர்நீரென
வெம்மையோடவர்வேந்தனொருவன்வந்
தம்மைபாகனுக்காவவென்றெண்ணிலான்
செம்மைதிரக்கவர்ந்துதின்றானென்றார். (௧௩)

என்றவார்த்தையிருசெவியேறலுங்
கொன்றதன்னவெங்கோபங்குடிகொள
வொன்றநெஞ்சமுளைந்துகவன்றன
னின்றிழிந்ததுகொல்லென்றவமென்பான். (௧௪)

பரம்பொடித்தபுராணனுக்காட்டவு
நிரம்புமாறெடுத்தூட்டவுநேர்வைத்த
வரம்பிலாக்கனிவௌவிநுகர்வதோ
பரம்புதீவினைப்பார்த்திவன்றானெனு. (௧௫)

சுடுசினந்தலைக்கொண்டுதுடிதுடித்
தடுசினக்களிற்றன்கையறக்குறைந்
திடுபலிக்கிவர்கென்னச்சபித்தனன்
கடுவெயிற்றினின்றுங்கழன்றலென. (௧௬)

சொற்றசாபந்துணைதரப்பற்றலு
மற்றகையினனுய்ப்புவியாள்பவ
னுற்றசெல்வமுமோவக்கவன்றன்ன்
கற்றமாந்தர்களாந்தனருண்மையே. (௧௭)

கேட்டபோதுகிலேசத்துமூழ்கியுள்
வாட்டமேவமரீசிமுனிவரன்
றாட்டலைத்தலைசாரப்பணிந்தனன்
கோட்டமேதமிலாக்குணக்கொண்டலே. (௧௮)

அடியனேன்பிழையத்தனையும்பொறுத்
தொடிவிலாவருளுதியாஃதெனக்
கடிதினைந்துகதறுமரசற்கு
முடியவோர்ந்தமுனிவனிரங்கியே (கக)

ஆண்டநாயகற்காகுங்கனிகவர்ந்
தீண்டநீசெய்பெரும்பிழைக்குத்தக
மாண்டசாபம்வகுத்திலநின்னிடைப்
பூண்டபேரருளாற்புகன்றுமரோ. (உ0)

இன்றுநீவந்தினைந்துறவேண்டலா
லொன்றுநாகைக்காரோணத்தினுட்புகூஉ
நன்றுசால்சுரதீர்த்தநன்காடிடிற்
கன்றுதீரிருகையும்வளருமால். (உக)

பின்னராதிபுராணனைப்பேணுபு
நன்னரோத்திடினந்துவறுமைபோ
மென்னசெல்வமுமெய்துவையத்தல
மன்னலான்முத்திமாண்பும்பெறுவையால். (உஉ)

போதியென்றுபுகறலுந்தாழ்ந்தெழுந்
தேதிவேந்தன்சின்னாளில்வந்தெய்தினு
னாதிநாதரமர்திருநாகையிற்
சோதியாரருமுன்னுந்துணிபுற. (உங)

தேவதீர்த்தத்துச்சென்றுபடிந்தனன்
பாவமாசறப்பண்டையிற்கைகள்பெற்
றுவவென்றிரும்பூதுகண்டாருற
மேவத்தானும்வியப்புற்றெழுந்தனன். (உச)

அருள்விராவுறவாதிபுராணர்தம்
பொருள்விராவுபொற்பாதமும்போற்றினன்
மருள்விராவுவறுமைசிதைதரத்
தெருள்விராவுதிருவரம்பெற்றனன். (உரு)

கருர்தடங்கட்பிராட்டிகமலமொத்
திருந்தபாதமுமேத்தியிறைஞ்சுபு
திருந்தமற்றத்தலங்களுஞ்சேவித்துப்
பொருந்தவேண்டும்பணியும்புரிந்தனன். (உசு)

மிக்கமேன்மைவிடைபெற்றுப்பல்வளந்
தொக்கதன்பதிதுன்னுபுவாழ்ந்துபின்
பக்கம்பாரிடம்பாடநின்றுவோர்
நக்கசேவடிநண்ணியின்புற்றனன். (உஎ)

அற்றமோவவடைந்தசயதுங்கன்
பெற்றபேறுபிறங்கவுரைத்தனங்
கற்றதன்மையில்காளகண்டன்புகுந்
துற்றதன்மையுமோதிடுவாமரோ. (உஅ)

சயதுங்கப்படலம் முற்றிற்று.

ஆ படலம் சஎ இ திருவிருத்தம்-உஉகச.

## காளகண்டப்படலம்.

முனிவரர்சூதமுனியைவணங்கிக்
கனிவொடுகாளகண்டனடைந்து
புனிதனபாதம்போற்றியகாதை
யினிதருளென்னவிசைத்திடுமன்றான். (க)

கரிசில்விருத்தகங்கையந்தீரத்
திரிவில்பஞ்சானமென்னுமோரூரிற்
பரிவொடுவாழ்வான்பார்ப்பனமாக்க
ளுரியகுலத்தானுத்தமமிக்கான். (உ)

விட்டுணுசாமியெனும்பெயர்மேயான்
கட்டுறுமில்லாள்காமர்குணத்தா
ளொட்டுறுசாறுமதிப்பெயருள்ளாண்
முட்டுதலோவிமுயக்குபுவாழ்நாள். (ங)

கொடுவினைசெய்யுங்கூற்றினுந்தீமை
யொடுவருதுட்டனொருவனுதித்தான்
கடுகுபுகாளகண்டனெனும்பே
ரிடுபுவளர்த்தாரீன்றவர்மாதோ. (ச)

ஒழிவறவுண்பதுடுப்பதையன்றி
யழிவறுமத்தியயனமிலாமற்
பழிபடுநாள்கள்பற்பலசெல்லக்
கழிதுயர்பூண்டுதந்தைகனன்றான். (ரு)

அருமறையத்தியயனஞ்செயாது
முருடரின்வாழ்வாய்முழுமகவென்று
வொருகதைகொண்டுபுடைக்கவுடன்று
பருவலிமைந்தன்பற்றியறைந்தான். (சு)

அறையுறலோடுமாவிகடுங்கத்
தறைமிசைவீழ்ந்துதாதையிறந்தான்
கறைகெழுகாளகண்டனுமந்த
வுறையுடணங்தேயுழிதரலுற்றான், (எ)

கொலைப்பழிபூண்டுகூவெனவாய்விட்
டுலைப்புறுநெஞ்சோடோரிடமேனு
நிலைப்பதிலாதுநீசருமெள்ளும்
புலைத்தொழில்செய்தான்பொருமியுழன்றான். (அ)

உழிதருநாளிலுத்தமனன்னால்
வழியொழுகுஞ்சீர்வசிட்டனிருக்கு
மழிவருமாச்சிராமமடைந்தான்
கழிதுயர்க்காளகண்டனென்பானே. (கூ)

பரவுவசிட்டன்பாதம்வணங்கி
விரவுமென்பாவம்விடுபடுமாறோர்
புரவுசெய்கழுவாய்புகலுதியென்று
னுரவுகொளனையானோர்ந்துரைசெய்வான். (கo)

சுரதனெனும்பேர்த்தோன்றலொருத்தன்
வரமருள்காயாரோகணமன்னிக்
கரவறநூற்றெட்டுத்தரங்காம
ருரவுறச்சூழ்வானுற்றவன்னாள்வாய். (கக)

மறையவர்சில்லோர்மற்றதுகண்டு
குறைவறநீயிவ்வாறுசெய்கொள்கை
முறைதெரியென்னமுனிவிலனுகிக்
கறையறவன்னார்தெரிதரக்கரவான். (கஉ)

மூற்சனனத்துமுயங்கொருகிளியா
முற்பவமுற்றேனுற்றவன்னாளி
லொற்கமிலிந்தவூர்வலஞ்செய்தேன்
சிற்சுகமூர்த்திதிருவருள்செய்தான். (கந)

அந்தவிசேடத்தாலரசாகி
யிந்தமண்ணாள்வேனின்னமுஞ்சூழிற்
பந்தமில்வீடுபாலிக்குமென்று
நந்தவுணர்ந்துநானிதுசெய்வேன். (கச)

என்றனன்கேட்டவிருபிறப்பாளர்
நன்றிதுவென்றுநாடிவியந்தே
யொன்றமற்றன்னோனோடுறச்சூழ்ந்தார்
கன்றலின்முத்திகைக்கொடுவாழ்ந்தார். (கரு)

ஆதலினீயுமத்தலமெய்திக்
காதலிற்சூழிற்கழிதரும்பாவ
மேதமிலாப்பேரின்பமும்வாய்க்கும்
போதருகென்றான்புண்ணியமேலோன். (கசு)

அனையவசிட்டனடிமலர்போற்றித்
துனையவெழுந்துதூயகாரோணப்
புனைநகர்நோக்கிப்போயினனம்மா
கனைபெரும்பாவங்காற்றல்குறித்தான். (கஎ)

நாகையடைந்துநன்குபணிந்தே
யோகையினூற்றெட்டுத்தரஞ்சூழ்ந்தா
ஞைகசெய்பன்ஞளித்தொழிலாற்ற
வாகையடைந்தான்பாதகமாய்த்து. (கஅ)

பாதகமாய்ந்துபண்புணர்ஞான
மேதகமேவிவேதமுழங்கும்
போதகத்தெய்வப்பூம்புனலாடி
மாதகவாம்வெண்ணீறுவயக்கி. (ககூ)

ஆதிபுராணத்தண்ணலையேத்தி
யோதியுணர்ந்தார்க்குற்றிடுமூறு
காதியவெங்கள்கருந்தடங்கண்ணாள்
சோதிகொடாளுந்தொழுதுதுதித்தான். (உo)

ஆயுளின்காறுமற்புதமாகி
மீயுயர்சேவைவிருப்பொடுசெய்து
காயுறுதீமைக்கடுவினைமாய்த்துப்
பாயுயர்முத்திபடர்ந்தனனன்றே. (உக)

கண்ணியகாளகண்டனடைந்து
நண்ணியபேறிறைநாமுரைசெய்தா
மெண்ணியவானத்திறையவன்சாப
மண்ணியமேயவண்ணமுரைப்பாம். (உஉ)

காளகண்டப்படலம் முற்றிற்று.

ஆ படலம் சஅ இ திருவிருத்தம்-உஉ௩சு.

## இந்திரன்சாபந்தீர்ந்தபடலம்.

போதவிலாசமுனிவரரியாரும்புகழ்ப்பரப்பார்
சூதமுனிவரன்றூட்டாமரைகடொழுதருள்சா
ஞதநெடுவிண்புரப்பவன்சாபநலிவறுத்த
தோதவவாவுதியென்னவன்ஞன்மகிழ்ந்தோதுவனே. (க)

விண்ணம்புரக்குங்குலிசாயுதப்பெருவேந்தனென்பான்
வண்ணம்பரப்புஞ்சுதன்மையின்மேவிமதியமைபொற்
றண்ணங்குரவனடிபோற்றிநன்னிலைசாற்றுகென
வெண்ணம்பொருந்தத்தருமாதருமமியம்புவனே, (உ)

